# கல்கி

KALKI
21.11.99
ரூ. 4.50



"வங்கிகள் தனியார் மயமானால் திறமை கூடும்!"
- ப. சிதம்பரம் பேட்டி

# சுஜாதாவின் 'முதல்வன்' அனுபவங்கள்!



— ப. சிதம்பரம் பேட்டி

இந்திரா காந்தி பிரதமராக இருந்தபோது, தனியார்வசமிருந்த வங்கிகளை தேசியமயமாக்கி பெரும் பரபரப்பை ஏற்படுத்தினார். ஆனால், இன்று நிலைமை தலைகீழாகி விடும் போலத் தெரிகிறது. தேசியமயமாக்கப்பட்ட வங்கிகளை மறுபடி தனியார்வசம் ஒப்படைக்கப் போவதாக மத்திய அரசு அறிவித்துள்ளது. இந்த முடிவு சரியானதா? இதனால் சாதாரண மக்களுக்கு என்ன பலன்? என்ன பாதகம்? போன்ற கேள்விகளுடன் முன்னாள் மத்திய நிதி அமைச்சர் ப. சிதம்பரத்தைச் சந்தித்தோம்.



# "வங்கிகள் தனியார்மயமானால் திறமை கூடும்!"

**கேள்வி** : வங்கிகள், ஒரு சமுதாய நோக்கத்தின் அடிப்படையில்தான் தேசியமயமாக்கப்பட்டன. இப்போது அவற்றை மறுபடியும் தனியார்வசம் ஒப்படைப்பதால், அந்த லட்சியத்துக்கு பாதிப்பு வராதா?

**ப. சிதம்பரம்** : வங்கிகளை தேசியமயமாக்கியது, தனியார்மயமாக்குவது இரண்டுமே, அந்தந்த காலகட்டத்தில் நிலவும் சூழ்நிலைக்கு ஏற்ப எடுக்கப்படுகிற முடிவுகள். கம்யூனிஸ்ட்டுகள் மட்டுமே, சித்தாந்தம் பேசி, இதை எதிர்த்துக் கொண்டிருக்கிறார்கள். இருபத்தியோராம் நூற்றாண்டின் தலைவாசலில் நாம் நின்று கொண்டிருக்கிற நேரத்தில் யதார்த்தவாதம் மட்டுமே உயர்ந்த சித்தாந்தம். நான் இப்போதும் சொல்கிறேன். 1969–70ல், வங்கிகளை தேசிய உடைமையாக்கியது சரிதான். அப்போது வங்கிகளை தேச உடைமையாக்காமல் போயிருந்தால், இத்தனை வங்கிக் கிளைகள் வந்திருக்காது. கிராமப்புறங்களில் வங்கிகள் பரவியிருக்காது. வங்கியில் கணக்கு வைத்துக் கொள்ளும் பழக்கம் பல்லாயிரக்கணக்கான பேருக்கு ஏற்பட்டிருக்காது. ஏழை, எளியவர்களுக்கும் கடன் தர வேண்டிய கடமை வங்கிகளுக்கு உண்டு என்கிற நிலைமை உருவாகியிருக்காது. ஆனால், முப்பது ஆண்டுகள் கழித்து, இன்றைக்கும் அப்படியே இருக்க வேண்டும் என்கிற கட்டாயம் இல்லை.

இன்று போட்டி பொருளாதாரச் சூழ்நிலை நிலவுகிறது. பெரும்பாலான வங்கி

கல்கி இன்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com ஈ மெயில் : kalkiweekly@vsnl.com

களின் நலனுக்கு, நிர்வாகச் சீர்திருத்தங்கள் மிகவும் அவசியமாக உள்ளன. அரசின் கட்டுப்பாட்டில் இருக்கிற வரை, அந்த நிர்வாகச் சீரமைப்பு நடவடிக்கைகள் சாத்தியமில்லை.

**கேள்வி :** மீண்டும் வங்கிகளைத் தனியார்மயமாக்குவது தேசப் பொருளாதாரத்தைப் பொறுத்தவரை என்ன மாதிரியான பாதிப்புகளை ஏற்படுத்தும்?

**ப. சிதம்பரம் :** இன்று இருக்கிற அரசுத் துறை வங்கிகளில் மூன்று, நான்கு வங்கிகள் மட்டுமே உலகத் தர நியதிகளுக்கு ஏற்ப செயல்பட்டு வருகின்றன. மற்ற வங்கிகள் எல்லாம் மோசமான நிலையில்தான் உள்ளன. வங்கிகளின் வராத கடன்கள் அபாயமான அளவுக்கு அதிகமாக உள்ளன. தேவைக்கு அதிகமான ஊழியர்களின் எண்ணிக்கை இருக்கிறது. தவறான நடைமுறைகள் கடைப்பிடிக்கப்படுகின்றன. ஓர் உதாரணம் தருகிறேன். நம்பினால் நம்புங்கள். வங்கிகளில், ஊழியர்களுக்கு அளிக்கப்படும் அலவன்ஸ்களின் பட்டியலைப் பார்த்தபோது, வங்கியினுடைய பணப் பெட்டகத்தை, கார் அல்லது டாக்சிக்குக் கொண்டு போவதற்கு ஒரு அலவன்ஸ், ஜன்னலை மூடுவதற்கு ஒரு அலவன்ஸ்! இது போல நிறைய தவறான நடைமுறைகள். வங்கிகள் ஒரே குடையின் கீழ் அரசின் வசம் இருக்கிறபோது, இவற்றை நீக்க முடியாது. தனியார்மயமாகும் போது இவற்றை நீக்குவது எளிது.

போட்டியிருந்தால்தான் திறமை அதிகமாகும். இன்று அரசுடைமையாக்கப்பட்ட வங்கிகளைப் பொறுத்தவரை போட்டியே இல்லை.

ஒரு வங்கியில், எட்டு சதவீத வட்டியில் டெபாசிட்கள் பெற்று, ஒன்பது சதவீத வட்டிக்குக் கடன் கொடுக்கிறபோது, அந்த ஒரு சதவீத வித்தியாசத்தில் கிடைக்கிற நிதியை வைத்து, அத்தனை நிர்வாகச் செலவுகளையும் கவனித்துக் கொண்டு, லாபமும் ஈட்டினால், மிகத் திறமையான நிர்வாகம் என்று சொல்லலாம். ஆனால் இந்தியாவில், இந்த இரு வட்டி விகிதங்களுக்கும் இடைப்பட்ட வித்தியாசம் நாலரை சதவீத அளவுக்கு உள்ளது. இது வங்கிகளின் நிர்வாகத் திறமையின்மைக்கு ஒரு குறியீடு.

இன்றைய உலகில், பெரிய வங்கிகள் கூட, ஒன்றுடன் ஒன்று 'மெர்ஜ்' ஆகி அதாவது இணைந்து, தம்மை வலுப்படுத்திக் கொள்கின்றன. அது இங்கேயும் அவசியம். வங்கிகள், அரசின் கையில் இருக்கிறவரை அதுபோல இணைவது சாத்தியமில்லை. தனியார் வங்கிகளாக இருந்தால், இரு நிர்வாகமும் தங்கள் நலன் கருதிப் பேசி, இணைய முடிவெடுத்துச் செயல்படுத்துவது சுலபம்.

அதற்காக, எல்லா வங்கிகளையும் தனியார் கையில் ஒப்படைக்க வேண்டிய அவசியமில்லை. ஸ்டேட் பாங்கை வேண்டுமானால், அரசே வைத்துக் கொண்டு மற்றவற்றைத் தனியார்வசம் விட்டு விடலாம். அவற்றில் கூட, இருபத்தி ஆறு சதவீத பங்குகளை தன்வசம் வைத்துக் கொண்டு, வங்கி நிர்வாகங்கள் வரம்பு மீறிச் செயல்படாமல் கட்டுப்படுத்தலாம்.

**கேள்வி :** வங்கிகளின் வாடிக்கையாளர்களுக்கு இதனால் என்ன பலன்?

**ப. சிதம்பரம் :** நேற்று, பேப்பரில் படித்தேன். கேரளாவுக்குள்ளேயே, ஒரு நகரத்திலிருந்து, இன்னொரு நகரத்துக்குப் பணத்தை மாற்றித் தர பத்தொனபது நாள் ஆயிற்றாம். இது திறமையின்மைக்குத்தானே உதாரணம். இன்டர்நெட், ஈ காமர்ஸ் எல்லாம் வந்த பிறகு, நேரடியாக வங்கிக்குப் போய் பணம் போடவோ, எடுக்கவோ அவசியமில்லாத காலம் வந்து விட்டது. அயல் நாடுகளில் வங்கிக்குச் செல்பவர்களை விட, தானியங்கி இயந்திரத்தினை நாடுபவர்களே அதிகம். ஆக, அரசின் கையை விட்டுப் போனால், திறமை கூடும். கடன் பெறும்போது, வட்டிச் சதவீதம் குறைய வாய்ப்புண்டு. ஒரு வீட்டை அடமானம் வைத்து, கடன் வாங்க இப்போது மூன்று மாதமாகிறதே! இவ்வளவு காலதாமதம் இருக்காது.

**கேள்வி :** தனியார்மயமாக்கினால், கிராமப்புற மக்களை வங்கிகள் புறக்கணிக்கும் போக்கு ஏற்பட வாய்ப்பு உள்ளதல்லவா?

**ப. சிதம்பரம் :** விவசாயிகளின் தேவைகளைப் பூர்த்தி செய்ய, தொடக்க வேளாண்மை வங்கிகள் தொடங்கி, கூட்டுறவு வங்கிகள் உட்பட நபார்டு வரை ஏராளமான வழிகள் உள்ளன. விவசாயிகள் தேவைக்காக நகைக் கடன் வசதி உள்ளது. அவர்கள்,



''தலைவரே நீங்கள் கட்சி மாறிய செய்தி பேப்பரில் வந்திருக்கு.''
''முதல் பக்கத்திலா?''
''விளையாட்டுச் செய்திகள் பக்கத்தில்.''
– எஸ். மோகன்

வர்த்தக வங்கிகளை நம்பி இல்லையென்று சொல்லலாம்: வர்த்தக வங்கிகள், விவசாயக் கடன்களைக் கொடுக்க வேண்டும் என்று எதிர் பார்ப்பதே தவறு. இரண்டையும் போட்டுக் குழப்பிக் கொள்ளக் கூடாது.

**கேள்வி :** அப்படியானால், இப்போது கிராமப்புறங்களில் உள்ள வங்கிக் கிளைகளை மூட வேண்டி வருமே?

**ப. சிதம்பரம் :** போட்டிப் பொருளா தாரத்தில், ஒருவர் ஒரு கிளையை மூடினால், வேறு ஒருவர் அங்கே ஒரு கிளையைத் திறப்பார். இதில் வாடிக்கையாளருக்குத்தான் லாபம்.

**கேள்வி :** தனியார் பைனான்ஸ் கம்பெனி களில் பலர் பணம் போட்டு நஷ்டப்படுவது கண்டு, வட்டி சதவீதம் குறைவானாலும், பாதுகாப்பானது அரசுத் துறை வங்கிகள்தான் என்று மக்கள் நம்பிக்கை வைத்திருக்கிறார்கள். தனியார்மயமாக்கி விட்டால், மக்களுக்கு அவற்றின் மீது அவநம்பிக்கை வந்து விடாதா?

**ப. சிதம்பரம் :** வராது. கடந்த ஆறேழு வருடங்களில் மக்கள் தனியார் வங்கிகளில் செய்யும் முதலீடு அதிகரித்துக் கொண்டே வருவது, மக்கள் அவற்றின் மீது வைத்திருக்கும் நம்பிக்கைக்கு எடுத்துக்காட்டு. தாராளமய மாக்குதலையடுத்து துவங்கப்பட்ட குளோபல் டிரஸ்ட் பேங்க், ஐ.சி.ஐ.சி.ஐ. பேங்க் போன்ற சில வங்கிகளில் மக்கள் ஏராளமாக டெபாசிட் செய்கிறார்கள். ஒரு வங்கியின் உரிமையாளர் யார் என்பதை விட, அது சிறப்பாக நிர்வகிக் கப் படுகிறதா என்று பார்த்துத்தான் டெபாசிட் செய்ய வேண்டும். இன்னொரு முக்கியமான விஷயம், எல்லா வங்கிகளுமே ரிசர்வ் பாங்கின் விதிமுறைகள்படிதான் செயல்படுகின்றன.

**கேள்வி :** இன்சூரன்ஸ் துறையில் அந்நிய நாட்டவரை அனுமதிப்பது சரியா?

**ப. சிதம்பரம் :** நூறு கோடி மக்கள் தொகை கொண்ட நாட்டில், இன்று இன் சூரன்ஸ் வட்டத்தில் கொண்டுவரப்பட்டிருப் பவர்கள் பத்து சதவீதம் கூட இல்லை. மருத் துவ இன்சூரன்ஸ் கவரேஜ், ஒரு சதவீதம் கூட இல்லை. இதற்கு முக்கியக் காரணம், இன்சூரன்ஸ் இன்னும் அரசாங்கத்தின் கையில் ஏகபோகமாக இருப்பது தான். ஒரு நாட்டின் நீண்ட காலத் திட்டங்களை நிறை வேற்றத் தேவையான நிதி ஆதாரங்களைத் திரட்ட முக்கியமான வழி இன்சூரன்ஸ். இதில் அந்நிய முதலீட்டை இருபத்தைந்து சதவீதம் வரை அனுமதிப்பதால் ஒன்றும் மூழ்கிப் போய்விடாது. நிர்வாகம், அந்நியர்கள் கையில் இருக்கும். இருந்து விட்டுப் போகட்டுமே! அயல் நாடுகளில், எத்தனை கம்பெனிகளில் இந்தியர்களின் கை ஓங்கியிருக்கிறது? போட்டிப் பொருளாதாரத்தில், பயனடையப் போவது மக்கள்தானே! வங்கிகளுக்குச் சொன்ன அனைத்தும், இன்சூரன்சுக்கும் பொருந்தும்!

**கேள்வி :** அடுத்த பட்ஜெட் மிகவும் கடுமையான வரிவிதிப்புகளுடன் இருக்கும் என்று எல்லோரும் பயமுறுத்திக் கொண் டிருக்கிறார்கள். அப்படித்தான் இருக்குமா?

**ப. சிதம்பரம் :** தெரியவில்லையே! வரிகள் போடுவதன் மூலம் ஓரளவுக்குத்தான் வருவாய் அதிகரிக்கும். கடுமையாக வரிகள் போட்டால், வரி ஏய்ப்புதான் நடக்கும். எனவே செலவைக் கட்டுப்படுத்த வேண்டியது அவசியம். இன்று நம்மால் அரசு செலவைக் கட்டுப்படுத்த முடிய வில்லை. அதுதான் பிரச்னையே!

**கேள்வி :** அரசு செலவினங்களைக் கட்டுப் படுத்துவது எப்படி?

**ப. சிதம்பரம் :** அது சிக்கலான விஷயம்.



**“கடுமையாக வரிகள் போட்டால், வரி ஏய்ப்புதான் நடக்கும். எனவே செலவைக் கட்டுப்படுத்த வேண்டியது அவசியம். இன்று நம்மால் அரசு செலவைக் கட்டுப்படுத்த முடிய வில்லை. அதுதான் பிரச்னையே!”**

அரசு என்றால் அரசியல் கட்சி. அரசியல் கட்சி என்றால் அரசியல்வாதிகள். எனவே எதன் மீது கை வைத்தாலும் ஆதரவு, எதிர்ப்பு இரண்டும் இருக்கும். செலவினக் கட்டுப்பாடு, ஐக்கிய முன்னணி ஆட்சியின்போது கடைப் பிடிக்கப்பட்டது. செலவுகளைக் கண்காணித் துக் கட்டுப்படுத்த செலவினக் கமிஷன் ஒன்றை அமைத்து, அதற்கு எதிர்க்கட்சியைச் சேர்ந்த ஒருவரை (பா.ஜ.க.வின் ஜஸ்வந்த் சிங்) தலைவராய் நியமிக்க முடிவு செய்யப்பட்டது. இந்த ஏற்பாட்டுக்கு அவர் தனிப்பட்ட முறை யில் சம்மதித்தாலும், அவரது கட்சி ஏற்றுக் கொள்ளவில்லை. இப்போது, யஷ்வந்த் சின்ஹா கூட செலவின சீர்திருத்தக் கமிஷன் என்று ஒன்றை அமைக்கப் போவதாகக் கூறி யிருக்கிறார். முப்பதுக்கும் அதிகமான கட்சிகள் பங்கேற்கக்கூடிய, பாராளுமன்ற ஜனநாயகத் தில் இது சவால் நிறைந்த ஒரு பணி. ஆனால், அதைச் செய்ய வேண்டிய கட்டாயம் ஏற் பட்டுள்ளது.

சந்திப்பு : **எஸ். சந்திரமௌலி**

'முதல்வன்' படத்தின் வசனகர்த்தாவான எழுத்தாளர் சுஜாதா, தமது அனுபவங்களைக் கூறுகிறார்...

"தமிழின் டாப் டைரக்டர்களான மணிரத்னம், ஷங்கர் இருவருடைய படங்களிலும் பணியாற்றியிருக்கிறீர்கள். இரண்டுக்கும் ஏதாவது வித்தியாசம் உணருகிறீர்களா?"

"இரண்டு பேருமே தனித்தன்மை வாய்ந்தவர்கள். இரண்டு பேருடைய ஸ்டைலும் மாறுபட்டவை. இரண்டு பேரும் என்னிடமிருந்து எதிர்பார்த்தவையும் மாறுபட்டதுதான். உதாரணமாக மணிரத்னம் உயிரே படத்தின் போது, 'மொத்த கதையையும் ஒரு நாவல் போல எழுதிக் கொடுத்து விடுங்கள். அதை நான் படமாக்கிக் கொள்கிறேன்' என்று கூறி விட்டார். நாவல் வடிவில் நான் எழுதிக் கொடுத்ததிலிருந்த வசனங்களையும், காட்சி வர்ணனைகளையும் பயன்படுத்திக் கொண்டார். ஆனால் ஷங்கரின் பாணி, இதிலிருந்து மாறுபட்டது. அவர் காட்சியை விளக்கி, வசனத்தை எழுதித் தரச் சொல்லுவார். வசனம் இந்த மாதிரி இருக்க வேண்டும் என்று கருத்துச் சொல்லுவார். எழுதிக் கொடுத்ததை, இதுபோல மாற்றிக் கொடுங்கள் என்பார்.

"இரண்டு பேரிடையேயும் ஓர் ஒற்றுமை என்னவென்றால், மற்றவர்கள் சொல்லும் ஐடியாக்களைக் கேட்டுக் கொள்கிறார்கள். அதிலும் ஷங்கர், இதுதானே நீங்கள் சொல்ல வரும் கருத்து என்று சொல்லி உறுதிப்படுத்திக் கொள்வார். இதனால், நாம் சொல்வதை அப்படியே அவர்கள் ஏற்றுக் கொண்டு விட்டதாக நினைத்துக் கொண்டால், அது தப்பு. எது அவசியம் என்று அவர்களுக்குப்படுகிறதோ, அதை மட்டுமே பயன்படுத்திக் கொள்வார்கள் படத்தில்."

"உங்களுடைய 'பதவிக்காக' நாவல் போல இந்தப் படம் இருப்பதாக ஒரு கருத்து கூறப்படுகிறதே! முதல்வன் கதைக்கு, கரு உபயம் நீங்கள்தானா?"

"இல்லை. பதவிக்காக கதை, ஒரு சாமானியன், அரசியலில் உயர்நிலையை அடைந்து, தனிப்பட்ட வாழ்க்கை பலவீனம் காரணமாக வீழ்வது. அது ஆந்திர அரசியலில் நடந்த சில சம்பவங்களை அடிப்படையாக வைத்து எழுதப்பட்ட கதை. கேரளாவில் பரீட்சார்த்த ரீதியில், எலெக்ட்ரானிக் வாக்குப் பதிவு



# சுஜாதாவின் 'முதல்வன்' அனுபவங்கள்!

இயந்திரம் பயன்படுத்தப்பட்ட போது, நான் கிட்டே இருந்து பார்த்த அரசியல் அனுபவமும் சேர்ந்தது. 'பதவிக்காக' கதையில் வரும் அரசியல்வாதிக்கும் இந்தப் படத்தில் வரும் அரசியல்வாதிக்கும் ஓர் ஒற்றுமை இருக்கிறது. அது அரங்கனார் என்ற பெயர் தான். டைரக்டர் ஷங்கர், என்



பதவிக்காக நாவலை, படித்திருப்பாரென்று கூட எனக்குத் தோன்றவில்லை."

"படத்தில் வரும் முதலமைச்சர் அரங்கனார் கேரக்டர் எந்த அரசியல்வாதியை மனத்தில் வைத்து உருவாக்கப்பட்டது?"

"கதைக்குக் களம் தமிழ்நாடு. அவ்வளவுதான். மற்றபடி, இந்திய அரசியலுக்கும், எந்த ஒரு மாநில அரசியலுக்கும் இந்தக் கதை பொருந்தும். டைரக்டர் ஷங்கர், ரகுவரனின் தோற்றம் லேசாக லாலு பிரசாத் போல இருந்தாலும் கூட, எந்த ஒரு தமிழ்நாட்டு அரசியல்வாதியையும் ஒத்துப் போகும்படி இருக்கக்கூடாது என்பதில் கண்டிப்பாக இருந்தார். வசன உச்சரிப்பில், குரல் ஏற்ற இறக்கத்தில் கூட, எந்த அரசியல்வாதியையும் பிரதிபலிக்கக் கூடாது என்று ரகுவரனிடம் சொல்லி விட்டார். ஆக, இது எங்கும் நடக்கும் ஒரு கதை!"

"ரஜினிக்காக உருவாக்கப்பட்ட கதை இது! அவர் நடிக்க மறுத்து விட்டதால் அர்ஜுன் நடித்தார் என்பது உண்மை. ரஜினி ஏன் நடிக்க மறுத்தார் என்று உங்களுக்குத் தெரியுமா?"

"எனக்குத் தெரியாது. இந்த பாயிண்ட் பற்றி நான் ஷங்கருடன் பேசியதில்லை. என்னைப் பொறுத்தவரை, இந்தக் கதைக்கு ரஜினி அவசியமில்லை. எந்த ஒரு நல்ல நடிகரும் பொருத்தமாக இருப்பார் என்று நினைத்தேன். அதை ஷங்கரிடமும் சொன்னேன். ஷங்கரின் சாய்ஸ் அர்ஜுன். அவர் மிக நன்றாக தமது கேரக்டரைச் செய்திருக்கிறார். ஸ்டார் டீ.வி.யில் வரும் நிருபர்களைப் போன்ற தோற்றம் நன்றாக இருக்கிறது."

"ரஜினி இல்லை என்று முடிவானதும், கதையிலோ, வசனத்திலோ ஏதாவது மாற்றம்

செய்தீர்களா?"

"இல்லை! ரஜினி நடித்திருந்தால் என்ன வசனம் பேசியிருப்பாரோ, அதே வசனங்களைத்தான் அர்ஜுனும் பேசியிருக்கிறார்."

"அரசியல்வாதி சம்பந்தப்பட்ட படம் என்பதால், சென்சாரில் ஏதாவது பிரச்னை இருந்ததா?"

"பல்வேறு கட்சி சார்புடையவர்களும், படம் சென்சார் ஆனபோது, பார்த்தார்கள். சில குறிப்பிட்ட அரசியல்வாதிகளின் பெயரைக் குறிப்பிட வேண்டாம் என்று சொன்னதன் பேரில் அவற்றை நீக்கி விட்டார்கள். மற்றபடி எந்தப் பிரச்னையும் இல்லை."

"விஷுவலாகத் திரையில் பார்த்தபோது, எழுதிய போது, கற்பனை செய்து வைத்



"லவ் பண்ணித்தான் மேரேஜ் பண்ணிக்குவேன்னு என் மகன் ஒத்தக்கால்ல நின்னான்."

"அப்புறம் எப்படி அவனை வழிக்குக் கொண்டு வந்தீங்க?"

"நானும் என் மனைவியும் லவ் மேரேஜ் தான் பண்ணிக்கிட்டோம் என்ற உண்மையை சொல்லித்தான்."

– ஆர். சித்ரா

திருந்ததை விட சிறப்பாக அமைந்து வியப்பூட்டியதா?"

"இது சம்பந்தமான இரண்டு அனுபவங்களை நான் நிச்சயம் குறிப்பிட வேண்டும். மாணவன் – பஸ் டிரைவர் மோதல் காரணமாக ஏற்படும் திடீர் பஸ் ஸ்டிரைக், மக்களை எந்த அளவுக்குப் பாதிக்கிறது என்பதை நான் ஒரு சிறுகதையாக எழுதிக் கொடுத்து விட்டேன். ஷங்கர், அதற்கு மிகச் சிறப்பாக மனத்தில் ஆழமான ஒரு பாதிப்பு ஏற்படும்படியாக திரை வடிவம் கொடுத்து விட்டார். அதே போல, அர்ஜுன் முதலமைச்சரை டீவியில் பேட்டி காணும் காட்சி. நாம் டெலிவிஷன் சானல்களில் நிறைய அரசியல்வாதிகளின் பேட்டிகளைக் காண்கிறோம். அரை மணி நேரமும், பேட்டியாளர், பேட்டி தருபவர் முகங்கள், இருவரும் இணைந்த காட்சி இப்படியே காட்டிக் கொண்டிருக்கிறார்கள். எனவே, சினிமாவில் அந்தக் காட்சியை எப்படி எடுக்கப் போகிறார் ஷங்கர் என்று பார்க்க ஆர்வமாக இருந்தேன். சுமார் ஆயிரம் அடி வரும் அந்தக் காட்சிக்கு, திறமையான வக்கீல்களின் வாதப்பிரதிவாதங்கள் போல வசனங்கள் எழுதியிருந்தேன். ஷங்கர், இந்தக் காட்சியில், ஸ்டூடியோவுக்குள்ளேயே நின்று விடாமல், மக்கள் ரியாக்ஷன், எங்கோ ஒரு கிராமத்தில் உள்ள மனீஷாவின் ரியாக்ஷன் என்று புகுத்தி விறுவிறுப்புக் கூட்டி விட்டார். இது எனக்கு ஆச்சரியமாக இருந்தது.

"இன்னொரு விஷயம். பாடல் காட்சிகளில், விளம்பரங்களில், கம்ப்யூட்டர் கிராபிக்ஸ் பயன்படுத்தி ஜாலம் காட்டுவது, இப்போது மக்களுக்கு போரடிக்க ஆரம்பித்து விட்டது. ஆனால், ஷங்கர், அதே யுக்தியை, படத்திற்குத் தேவையான சில காட்சிகளிலும் பயன்படுத்தியிருக்கிறார். பாடல் காட்சியொன்றில், மலைகளில் தீ எரிவது, அண்ணா சாலை அண்ணா மேம்பாலத்தில் டிராபிக் ஸ்தம்பித்து ஏராளமான வாகனங்கள் அப்படியே நின்று போவது போன்ற சில காட்சிகளில் கிராபிக்ஸ் பயன்படுத்தப்பட்டிருக்கிறது என்பதைச் சொன்னால் கூட நம்புவது கஷ்டம்தான்!"

"ஒவ்வொரு துறைக்கும், விவேகமாகச் சிந்திக்க ஒரு முதியவர், துடிப்புடன் செயல்பட ஓர் இளைஞர் என்று இரண்டு அமைச்சர்கள், வீதிதோறும் புகார்ப் பெட்டிகள் போன்றவை எல்லாம் சுவையான கற்பனை தான்! ஆனால், அதெல்லாம் நிஜத்தில் சாத்தியம் என்று நினைக்கிறீர்களா?"

"ஏன் சாத்தியமில்லை. கேபினட் ரேங்கில் ஒரு அனுபவசாலி, துணை அமைச்சராக ஒரு துடிப்பான இளைஞர் என்று அமைச்சரவையை அமைப்பது சாத்தியம்தானே! அதுபோன்றதொரு நிலைமை வருவது என்பது மக்கள் கையில் இருக்கிறது! லஞ்சம் வாங்குகிறவனைக் கண்டால், மக்களுக்கு உள்ளூர கோபம். அவனை அடிக்க வேண்டும் என்று நினைக்கிறார்கள். இந்தியன் தாத்தா அவர்களைக் கொல்கிற போது சந்தோஷப்படுகிறார்கள். அதே போலத்தான், புகார்ப் பெட்டியில் பூ விழும் நிலைமை வர வேண்டும் என்பதுதானே நம் எல்லோருடைய ஆசையும்!"

சந்திப்பு : **பாரதி**

  

# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்

16, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர் சென்னை-63

☎ :2376129

## ஓரிசா மாநில புயல் நிவாரணப் பணி
## அவசர வேண்டுகோள்

அன்புள்ளம் கொண்டோரே,

கடந்த சில நாட்களாக ஓரிசா மாநில பகுதியில் வீசிய கடும் புயல் காரணமாக லட்சக்கணக்கான பேர் வீடுகள் இழந்து தங்கள் அன்றாட வாழ்க்கையே கேள்விக்குறியாக உள்ள இந்த நேரத்தில்,

மத்திய, ஓரிசா மாநில அரசு தனியார் தொண்டு நிறுவனங்களை சேவை செய்யுமாறு அழைத்துள்ளது. அதன்படி நம் "ஸ்ரீ சாரதா சக்தி பீடத்தின்" நிறுவனர், சுவாமிஜியும் தொண்டர்களும், பாதிக்கப்பட்ட பகுதிகளுக்குச் சென்று பார்வையிட்டு நிவாரணப் பணிகளை மேற்கொள்வதற்கு முடிவு செய்யப்பட்டுள்ளது.

முதற்கட்டமாக **15,000** குடும்பங்களுக்கு உடனடித் தேவைகளான அத்தியாவசியப் பொருட்களை வழங்க திட்டமிடப்பட்டுள்ளது. இதுவரை ரூ **3,00,000** மதிப்புள்ள புதிய துணிகள் சேகரித்து பாதிக்கப்பட்ட மக்களுக்கு நேரிடையாக வழங்கப்பட்டுள்ளது.

ஒரு குடும்பத்திற்கு 25 கிலோ அரிசி, இரண்டு போர்வைகள் வேஷ்டி, சேலை, லாந்தர்விளக்கு ஆகியவற்றை வழங்க ரூபாய் 500/- செலவாகிறது.

மொத்தம் **15,000** குடும்பங்களுக்கு ரூ **75,00,000/-** (எழுபத்தி ஐந்து லட்சம்) தேவைப்படுகிறது.

கருணை உள்ளம் படைத்த இதயங்களை நாடுகின்றோம்.
வாரீர்! வாரி வழங்குவீர்! பசியால் வாடும்
உள்ளங்களை காப்பாற்றுவோம். வாரீர் !

குறிப்பு : நன்கொடை செக்/டிடி/மணியார்டர்கள் "ஸ்ரீசாரதா சக்தி பீடம்" என்ற பெயருக்கு அனுப்பி வைக்கவும்.

நன்கொடைகளுக்கு 80G பிரிவின் படி வருமான வரி விலக்கு உண்டு.

இறைவன் தொண்டில்
சுவாமி ஸ்ரீ சர்வாத்மானந்தர்
மேனேஜிங் டிரஸ்டி.

**பண்டிகை நாட்களையொட்டி படங்கள் வெளியாகும்போது திரையரங்குகள் நிரம்புகின்றனவோ இல்லையோ, சென்னையிலுள்ள ப்ரீ–வ்யூ தியேட்டர்கள் இருபத்தி நாலு மணி நேரமும் ஹவுஸ்ஃபுல். ப்ரொட்யூசர் ஷோ, டிஸ்ட்ரிப்யூட்டர்ஸ் ஷோ, ஆர்ட்டிஸ்ட்ஸ் ஷோ, டெக்னீஷியன்ஸ் ஷோ, ப்ரெஸ் ஷோ, ஃப்ரெண்ட்ஸ் ஷோ என்று கல்யாணக் களைதான் எப்போதும். இந்தக் குட்டி தியேட்டர் மானேஜர்களுக்குத்தான் எத்தனை அனுபவங்கள்! நுங்கம்பாக்கத்திலுள்ள 'குட்லக்' ப்ரீவ்யூ தியேட்டரின் மானேஜர் கல்யாணம் இங்கே தம் அனுபவங்கள் சிலவற்றைப் பகிர்ந்து கொள்கிறார்.**



• கல்யாணம்

● தமிழ் சினிமா உலகில், வெளியாகிற அனைத்துப் படங்களையும் பார்க்கிற வழக்கமுள்ள ஒரு வி.ஐ.பி. உண்டென்றால் அது ரஜினிதான். அநேகமாக அவர் படங்களை 'குட்லக்'கில் பார்க்கவே விரும்புவார்.

சென்ற தீபாவளிக்கு சுமார் பத்துப் படங்கள் வெளிவந்தன என்று நினைக்கிறேன். தீபாவளி தினம் தொடங்கி தினமும் ஒரு படம் வீதம் ஒவ்வொரு மாலையும் பார்த்தார்! அத்தனை படங்களையும் கூர்ந்து கவனிப்பாரே தவிர, மேலெழுந்தவாரியாகக் கருத்துக்களைப் பகிர்ந்து கொள்ள மாட்டார். என்னைத் தனியே தள்ளிக் கொண்டு போய் மிக மெதுவாக, ஒரு வரி, அரை வரியில் நச்சென்று படத்தைப் பற்றிய தம் கருத்தைச் சொல்லி விடுவார். அசந்து போகும் விதமாக, அவர் கருத்தைத்தான், தியேட்டரில் மக்கள் பிரதிபலிப்பார்கள்!

● அநேகமாக எல்லாப் படமும் தயாரானதும் முதல் ஷோ 'குட்லக்'கில்தான் நடக்கும். பல தயாரிப்பாளர்களுக்கு, இயக்குநர்களுக்கு இது ராசியான தியேட்டர் என்ற அபிப்பிராயம்தான் காரணம்.

● படத்தைப் பற்றி எனக்கு வந்து சேரும் அபிப்பிராயங்களை நான் வெளியிடுவதில்லை.

'தளபதி' படம் தயாராகி முதல் காட்சி திரையிடப்பட்ட போது மணிரத்னமும் இளையராஜாவும் பார்க்க வந்திருந்தார்கள். அது ஜி.வியின் சொந்தப் படம் என்பது அனைவருக்கும் தெரியும். குட்லக் தியேட்டரும் அவருடையதுதான்.

மறுநாள் நான் ஜி.வி. பிலிம்ஸ் அலுவலகம் சென்ற போது திருமதி ஜி.வி. என்னிடம், "நேற்று படம் பற்றி என்ன பேசிக் கொண்டார்கள்?" என்று கேட்டார்.

அவர் சற்றும் எதிர்பார்த்திருக்க மாட்டார். ''தெரியாது!'' என்றுதான் பதில் சொன்னேன்.

அதிர்ந்தவர், "என்ன கல்யாணம் இப்படிச் சொல்கிறாரே!" என்று அருகிலிருந்த மற்றொரு ஊழியரிடம் கேட்டார்.

''அவர், அப்படித்தாம்மா! சார் (ஜி.வி.) கேட்டாலே அப்படித்தான் சொல்வார்'' என்கிற பதில் அவரை நிச்சயம் மேலும் குழப்பியிருக்கும்!

● சரத்குமார் ஒருமுறை படம் பார்க்க

• இளையராஜா



வந்திருந்தபோது, "பசிக்குது கல்யாணம்... ஏதாவது..." என்று கேட்டார்.

நான் சற்றும் யோசிக்காமல், தியேட்டர் ஊழியர் பாலுவை அழைத்து, "பாலு... மிச்சம் மீதி ஏதாவது இருந்தாக் குடு" என்று சொல்லி விட்டேன்.

சரத்குமார் ஆடிப் போனார். எப்பேர்ப்பட்ட ஸ்டார்! அவருக்கு மிச்சம் மீதியா என்று அருகிலிருந்தவர்கள் அடிக்க வராத குறையாக என்னை முறைக்க, சுதாரித்து, விளக்கினேன் :



• சரத்குமார்

சென்ஸார் ஷோ நடக்கும் போது, அதிகாரிகள் கொறிப்பதற்காகச் சில ஐட்டங்கள் வாங்கி வைப்பதுண்டு. வறுத்த முந்திரி, உயர்தர பிஸ்கட்டுகள் இப்படி. கால் கிலோ முந்திரி வாங்கி வைத்தால் ஐம்பது கிராம் கூடச் சாப்பிட்டிருக்க மாட்டார்கள்.

ஆனால் எதற்கும் இருக்கட்டும் என்று 'ஸ்டாக்' சேர்த்து வைப்பதைத்தான் எங்கள் பரிபாஷையில் 'மிச்சம் மீதி' என்போம்.

இதை விளக்கியதும், முந்திரிப் பிரியரான சரத், விரும்பிச் சாப்பிட்டதுடன் மட்டுமல்லாமல், பிறகு எப்போது இங்கு வந்தாலும், "என்ன கல்யாணம், மிச்சம் மீதி இருந்தாக் குடுக்கறது!" என்றும் கேட்பது வழக்கமாகி விட்டது!

● ஒளி - ஒலி அமைப்பைப் பொறுத்த வரை சென்னையிலேயே மிகச் சிறந்த ப்ரிவ்யூ தியேட்டர் இது தான் என்பது அனைவரும் ஏற்றுக் கொண்ட விஷயம்.

ஏவி.எம்., 'எஜமான்' எடுத்துக் கொண்டிருந்த நேரம். ஓரிரண்டு காட்சிகளை ரஷ் பார்க்க விரும்பி அவர்களது சொந்த தியேட்டரில் திரையிட்டிருக்கிறார்கள்.

மிக முக்கியமான பாடல் காட்சியான அது, அவுட்-ஆஃப்-ஃபோகஸாகத் தெரிய, அதிர்ந்து விட்டார் சரவணன். ஆபரேட்டரிடம் விசாரித்தால், "படமே அப்படித்தான் சார் இருக்கு" என்று சொல்லி விட்டாராம்.

அன்று மாலையே சரவணனும் ஆர்.வி.

• ரஜினி



# ரஜினியின் 'நச்'விமர்சனங்கள்!

உதயகுமாரும் வேறு சிலரும் அந்த பிலிமை எடுத்துக் கொண்டு இங்கே வந்தனர்.

திரையிட்டதும் சரவணனுக்கு இன்ப அதிர்ச்சி! பிரமாதமான ஒளியமைப்பில் பாடல் காட்சி மனத்தைக் கொள்ளை கொண்டது.

"தியேட்டர் பராமரிப்பு ஒரு கலை. அதை 'கல்யாணத்திடம் கற்றுக் கொள்ள வேண்டும்'' என்று பாராட்டியதோடு மட்டுமல்லாமல், அவர்களது தியேட்டரின் அனைத்து சாதனங்களையும் உடனே மாற்றி, நவீனப்படுத்தி விட்டார்கள்!

இதை விடப் பெரிய விஷயம் என்ன தெரியுமா? எஜமான் படம், முப்பத்தைந்து காட்சிகள் 'குட்லக்'கில் திரையிடப்பட்டது. ப்ரீ-வ்யூ தியேட்டர்கள் சரித்திரத்தில் இது ஒரு சாதனை.

● ஒரு படத்தைத் திரையிடுவதற்காக ரூ. 500 அட்வான்ஸ் தந்திருந்தார் இயக்குநர் ஆர். சுந்தர்ராஜன். ஆனால் திரையிடும் நேரத்துக்குச் சிறிது முன்பாக, அந்த ஷோ கேன்சல் செய்யப்பட்டது.

கொடுத்த அட்வான்ஸைத் திரும்பக் கேட்டார் டைரக்டர். நான் மறுத்து விட்டேன். எனக்கு ரூல்ஸ் என்றால் ரூல்ஸ். யாருக்காகவும் மாற்ற மாட்டேன். "வேண்டுமானால் வேறு காட்சி ஏற்பாடு செய்து கொள்ளுங்கள். அட்வான்ஸைத் தர முடியாது'' என்று சொல்லி விட்டேன். இதில் அவர் கோபமாகி, வார்த்தைகளை விட்டு விட, பதிலுக்கு நானும் சற்றுக் குரலுயர்த்தி விடவே, அடுத்த ஒரு வருடம் எங்கள் தியேட்டரில் அவர் ஒரு ஷோ கூடப் பார்க்க வரவில்லை.

'திருமதி பழனிச்சாமி' படத்துக்காக சத்யராஜ், ஆர் சுந்தர்ராஜனை இயக்குநராக நியமித்திருந்த வேளை அது.

ஏதோ ஒரு படம் பார்க்க விரும்பிய சத்யராஜ், சுந்தர்ராஜனையும் அழைக்க, ஷோ 'குட்லக்'கில் என்று அறிந்ததும் பழைய சம்பவத்தை நினைவுகூர்ந்து, "நான் வர மாட்டேன்'' என்று சொல்லி விட்டார் சுந்தர்ராஜன்.

"அட வாருமய்யா - கல்யாணம் எங்கிட்டேயும் அப்படித்தான் பேசுவார்'' என்று சமாதானப்படுத்தி, வலுக்கட்டாயமாக அழைத்து வந்திருக்கிறார். பதவிப்படி நான் மானேஜர்தான் என்றாலும் முக்கியஸ்தர்கள் வருவதைக் கண்டால் ஓடிப் போய் கதவைத் திறப்பது முதல் காப்பி, பலகாரம் தருவது வரை தியேட்டரில் நானே செய்வதுதான் வழக்கம். தனிப்பட்ட விருப்பு வெறுப்புகளுக்கு என் தொழிலில் இடம் கிடையாது.

அந்த அடிப்படையில் ஆர். சுந்தர்ராஜனை வாசலில் கண்டதும் ஓடிப் போய் கதவைத் திறந்து வரவேற்று, நானே லிஃப்டில் அழைத்துச் சென்று தியேட்டரில் அமர வைத்தேன்.

பழைய சம்பவம் பற்றி நானும் நினைக்கவில்லை; அவரும் பேசவில்லை.

பிறகு, சுந்தர்ராஜனின் அத்தனை படங்களின் முதல் காட்சியும் குட்லக்கில்தான் நடந்தன!

● திரையுலகப் பிரபலங்கள் அனைவருமே மிகுந்த தோழமையுடன் என்னிடம் பழகுவார்கள். அவர்களுடன் நான் எடுத்துக் கொண்ட படங்கள் அனைத்தும் என் அலுவலக மேசைக் கண்ணாடியின் அடியில் எப்போதும் அணிவகுத்திருக்கும்.

தியேட்டருக்கு வரும் அத்தனை நடிகர்களும் என் மேசையை ஒருதரம் 'இன்ஸ்பெக்ட்' பண்ணாமல் போக மாட்டார்கள். சரத்குமார், ஏன் தமது போட்டோ அங்கு இல்லை என்று சண்டையே பிடித்திருக்கிறார்!

சமீபத்தில், 'நீ வருவாய் என...' படம் பார்க்க மோகன்லால் வந்திருந்தார்.

"என் போட்டோ ஒன்று கூட இங்கு இல்லையே?'' என்று அவர் கடிந்து கொள்ள, தற்செயலாக அங்கு வந்திருந்த ஒரு போட்டோகிராபரைப் பிடித்து, உடனே மோகன்லால் அருகில் நின்று படம் எடுத்துக் கொண்டேன்.

அவர் மகிழ்ச்சியுடன் படம் பார்க்க மாடிக்குச் சென்றார்.

படம் முடிந்து அவர் கீழே வரும் போது, கூப்பிட்டு என் மேசையைக் காட்டினேன். சற்று முன் எடுத்த படம் பிரிண்ட்டாகி, சுடச்சுட அங்கே வீற்றிருந்தது!

பி.கு: இத்தனை சினிமா பிரமுகர்கள் பற்றி சுவையான நியூஸ் தரும் கல்யாணத்தைப் பற்றிய ஒரு சுவையான தகவலுக்குப் புரட்டுங்கள் 14ஆம் பக்கத்துக்கு.

சந்திப்பு : **கிருஷ்ணன்**

படம் : **வெங்கடேஷ்**

# விளம்பரத்துக்கு விருது!

# கல்கி சதாசிவம் நினைவு அறக்கட்டளை!

பத்திரிகைத் துறை நிர்வாகத்தில் தலை சிறந்து விளங்கிய கல்கி சதாசிவம், விளம்பரங்கள் சேகரிப்பதில் மட்டுமின்றி, விளம்பரதாரர்களுக்காக அவற்றை உருவாக்கித் தருவதிலும் வல்லவராக இருந்தார். இன்று விளம்பர ஏஜென்சிகள் அலுவலகம் அமைத்து ஆற்றி வரும் பணியை, 1930களிலேயே, தனி நபராகச் செய்து காட்டினார். அவர் நினைவாக அவரது நினைவு நாளையொட்டி (நவம்பர் 21) ஓர் அறக்கட்டளை நிறுவப்படுகிறது. இந்த அறக்கட்டளை

**கல்கி சதாசிவம் நினைவு விருது**

வழங்க முன் வருகிறது.

ஜனவரி 1, 1999 தொடங்கி டிசம்பர் 31 வரையிலான ஓராண்டு கால கட்டத்தில் தமிழ் இதழ்கள் அல்லது செய்தித் தாள்களில் இடம் பெற்றுள்ள மிகச் சிறந்த ஒரு விளம்பரத்துக்கு இவ் விருது வழங்கப்படும்.

- விளம்பரத்தின் அச்சான பிரதி ஒன்று அதனை உருவாக்கிய ஏஜென்ஸி அல்லது தனி நபரின் கடிதத்துடன் அறக்கட்டளை முகவரிக்கு 31.01.2000 தேதிக்குள் அனுப்பி வைக்கப்பட வேண்டும்.

- அறங்காவலர்கள் பரிசீலித்து கருத்துச் செறிவும், அழகுணர்ச்சியும், புதுமைப் பொலிவும் கண்ணியமும் பொருந்திய விளம்பரம் ஒன்றை விருதுக்குத் தேர்வு செய்வார்கள். அந்த விளம்பரத்தை உருவாக்கிய நபருக்கு பாராட்டுப் பத்திரமும் ரூ. 10,000 பரிசும் வழங்குவார்கள்.

- விருது வழங்கும் நிகழ்ச்சி, சென்னையில் அடுத்த ஆண்டு பிப்ரவரி அல்லது மார்ச் மாதத்தில் நடைபெறும்.

- அடுத்துவரும் ஆண்டுகளில் இந்த விருதும் பரிசும் ஆங்கில விளம்பரங்களுக்கும் டீ.வி. விளம்பரங்களுக்கும் படிப்படியாக விரிவாக்கப்படும்.



முகவரி :

நிர்வாக அறங்காவலர்,
கல்கி சதாசிவம் நினைவு
அறக்கட்டளை,
1, ஐந்தாவது தெரு, லேக் ஏரியா,
சென்னை - 600 034



• வைத்தீஸ்வரன் கோயில் கோபுரம்

தக்ஷன் யாகம் செய்யும்போது சிவபெருமானை அவமதித்துத் தன் மகள் தாக்ஷாயணி பிராணத்யாகம் செய்யக் காரணமாக இருந்தான். தன் மனைவிக்கு நேர்ந்த கதியை அறிந்த சிவபெருமான், சீற்றம் கொண்டு தம் கண்களிலிருந்து வீரபத்திரனைத் தோற்றுவித்தார். சிவனின் கண்களிலிருந்து தோன்றிய பிழம்புதான் பூமியில் விழுந்து பூமிதேவியால் குஜன் என்ற பெயருடன் வளர்க்கப்பட்ட வீரபத்திரன்.

வீரபத்திரன் தக்ஷனுடைய யாகத்தைக் குலைத்து, தக்ஷனைக் கொன்று அகில உலகங்களையும் கலங்க அடித்தார். தேவர்கள் நடுநடுங்கி சினம் தணிய வேண்டும் என்று துதித்தார்கள். அவர்கள் வேண்டுகோளுக்கு இணங்கி வீரபத்திரர் தம் பயங்கர தோற்றத்தை அடக்கிக் கோபம் தணிந்து மங்கள உருக்கொண்டு அமைதியான முகத்துடன் காட்சி தந்தார். வீர பத்திரருக்கு செவ்வாய்க் கிழமை உகந்த நாள். இவரே அங்காரகன் என்றும் சொல்கிறார்கள்.

# மங்களம் தரும் செவ்வாய்



• சித்தாம்ருத தீர்த்தம்

பரத்வாஜ மகரிஷியின் சீடனாக இருந்து தவம் செய்து கிரஹபதவி பெற்றார் அங்காரகன் என்கிறார்கள்.

ரோகநாசனன் என்ற பெயர் கொண்ட அங்காரகன், காயங்களால் ஏற்படும் புண்களை ஆற்றுபவன். அண்டிய அன்பர்களுக்கு இதம் செய்பவன்.

ஆனால் செவ்வாய்க்கிழமை நல்ல காரியங்கள் தொடங்க உகந்தது அல்ல என்று நமக்கு ஒரு எண்ணம் உண்டு. ஒரு காரியம் சரிவர நடக்காதபோது, "கேட்டை மூட்டை செவ்வாய்க்கிழமை எல்லாம் சேர்ந்தால் காரியம் எப்படி உருப்படும்?" என்று சொல்லிக் கேட்டிருக்கிறேன்.

மயிலாடுதுறையிலிருந்து 10 கி.மீட்டர் தொலைவில் உள்ள வைத்தீச்வரன் கோவிலில் பிராகாரத்தில் தரிசனம் தருகின்ற அங்காரகனைப் பார்க்கும்போது, 'சிவப்பு நிறப் பட்டுடுத்தி, செம்மலர்களால் பூஜிக்கப்பட்டு கண்களில் சாந்தம் தவழ நிற்கின்ற, அழகு வடிவான மங்கல மூர்த்தியைப் போய் அசுப கிரஹம் என்று சொல்வார்களா! என்று ஆதங்கமாக இருக்கிறது.

சக்தி ஆயுதமும் சூலமும் கதையும் தாங்கி வரத ஹஸ்தத்துடன் காட்சி தருகிறார் அங்காரகன். ரோகநாசனன் என்ற ரணம் தீர்க்கும் செவ்வாய் வைத்யநாதப் பெருமான் கோயிலில் இருந்து கொண்டு பக்தர்களைக் காப்பது அவருக்குச் சிறப்புச் சேர்க்கிறது.

இவருக்குச் சிவந்த சத்ரம் (குடை) உண்டு. செவ்வலரி

மலர்களால் அர்ச்சித்தால் மகிழ்பவர். பவழம் இவர் உகந்த மணி. தானியம் துவரை. வாகனம் ஆடு. வைத்தீச்வரன் கோவிலில் அஜவாகனத்தில் ஆரோஹணித்து செவ்வாய்த் தேவர் கோவிலை வலம் வரும் காட்சியைக் காண்பவர்கள் அந்த விமரிசையை மறக்க முடியாது.

அங்காரகன் இந்த தலத்தில் உள்ள வைத்தியநாத சாமியைப் பூஜித்து பலன் பெற்றவர். ஒரு சாபத்தினால் உடல் முழுவதும் சருமத்தில் வியாதி வந்து



• அங்காரகன் - செவ்வாய்

விட்டது அங்காரகனுக்கு. எரிச்சல் தாங்க முடியாமல் வைத்தியநாதசுவாமி சந்நிதியில் நாற்பத்து ஐந்து தினங்கள் கடுமையான விரதம் இருந்தார். சித்தாம்ருத தீர்த்தத்திலும் மற்ற புண்ணிய தீர்த்தங்களிலும் நீராடி பக்தியோடு ஈசுவரனை வழிபட்டார். மருந்துகளுக்குள் எல்லாம் நோய் தீர்க்கும் சாரமாக இருக்கும் மஹாசர்வேச்வரன் காட்சியளித்து, "என்ன வரம் வேண்டும்?" என்று கேட்க,

"செவ்வாய்க் கிழமைகளில் இங்கே உள்ள



• தையல்நாயகி அம்மாள்

தீர்த்தங்களில் நீராடித் தங்களை வழிபடுவோருக்கு எல்லா வியாதிகளையும் குணமாக்கியருள வேண்டும்" என்று வேண்டிக் கொண்டார் அங்காரகன். இவ்வாறு செவ்வாய்த் தேவன் வரம் கேட்டுப் பெற்றதால்தான் இது அங்காரக க்ஷேத்திரம் என்று புகழடைந்தது. முக்கியமாக சரும நோய் உள்ளவர்கள் உப்பு வாங்கிப் போடும் சம்பிரதாயமும் ஏற்பட்டது. மிளகும் நல்ல மருந்து



• வள்ளிதேவ சேனாசமேத ஸ்ரீ செல்வமுத்துக்குமாரசாமி



என்பது நமக்குத் தெரியும்.

**வை**த்தீச்வரன் கோவிலில் தல விருக்ஷம் வேம்பு. வேம்பின் நோய் தீர்க்கும் சக்தி, நோய்க் கிருமிகள் அண்டாமல் தடுக்கும் சக்தி வேப்பிலைக்கு உண்டு என்பது இப்போது உலகப் பிரசித்தியாகி விட்டதே!

இந்தக் கோவிலில் அம்மன் ஸந்நிதிக்கு நேர் எதிரே உள்ள குளத்துக்கு சித்தாம்ருத தீர்த்தம் என்று பெயர். தண்ணீரே அமுதம் தான். உயிர்காக்கும் மருந்து. (தெள்ளிய, கெமிகல்ஸ் கலக்காத நீராக இருக்கும் போது) சித்திகளைத் தரக்கூடிய வன்மை இந்தத் தண்ணீருக்கு உண்டு என்று நம்புகிறோம்.

சித்தாம்ருத தீர்த்தத்துக்கு இக்ஷுசார

**10-ம் பக்கம் வெளியான கல்யாணம் பற்றிய புதிருக்கான விடை இது தான்:**

**இருபது வருடங்களுக்கு மேலாக தியேட்டர் மானேஜர் பதவியில் இருக்கும் கல்யாணம் இதுவரை ஒரு சினிமா கூட பார்த்ததில்லை!**

தீர்த்தம் என்று ஒரு பெயராம். "கருப்பஞ்சாறு" என்று பொருள். பக்தர்கள் கோயிலில் பெட்டிகளில் உப்பு, மிளகு, கடுகு வாங்கிச் செலுத்தி விட்டு வெல்லம் வாங்கி வந்து குளத்தில் கரைக்கிறார்கள். இத்தனை வெல்லத்தை அடியார்கள் கரைத்தால் அது இனிக்காமலிருக்குமா? எல்லாரும் செய்வதை நாமும் செய்யலாமென்று உப்பும் மிளகும் வாங்கித் தொட்டியில் போட்டுவிட்டு வெல்லம் வாங்கிக் குளத்தில் கரைத்து தீர்த்தத்துக்குச் சுவை சேர்க்கிறோம். வெல்லம் கரையும் போது நமது கர்மவினைகளும் அதனால் உண்டாகும் உடற்பிணிகளும் கரைந்து போய்விடும் என்று எண்ணிக் கொள்கிறோம். 'தீவினைக்கோர் மருந்தாவான்'' என்று அப்பர் பெருமான் மனமுருகிப் பாடியிருக்கிறாரே.

**பி**றவிப் பிணியைத் தீர்த்து நலமருளும் மகா வைத்தியன் சந்நிதியில் கசகசவென்று கூட்டம். காணிக்கை செலுத்துவோரும், கன்னத்தில் போட்டுக் கொள்வோரும், தரையில் விழுந்து தொழுவோரும், அர்ச்சனைத் தட்டுக்களை ஏந்தி நிற்போரும் விளக்குகளுக்கு எண்ணெய் வார்ப்போருமாக கலகலவென்று இருக்கிறது.

*"மந்திரமும் தந்திரமும் மருந்தும் ஆகித்*
*தீரா நோய் தீர்த்தருள வல்லான்*
*தன்னை*
*..............*
*போற்றாதே ஆற்ற நாள் போக்கினேனே"*

என்ற வாகீசர் பெருமானின் பதிகத்தின் பொருளில் மனம் லயித்து உள்ளம் கரைந்து உருகுகிறோம். அர்ச்சகர் தீபாராதனை செய்து பிரஸாதம் தருகிறார். தீராநோய் தீர்க்கவல்ல மண் மருந்துருண்டைகள் தருகிறார். இந்த மாத்திரைகளை பக்தியுடன் சித்தாம்ருத தீர்த்தத்துடன் விழுங்கினால் வியாதிகள் பறந்து போகும் என்பது நம்பிக்கை.

இந்த மாத்திரைகள் செய்வதற்கே கடுமையான நியமம் உண்டு. அங்கசந்தான தீர்த்தம் என்ற குளத்தில் நீராடி மண் எடுத்து ஈரத் துணியுடன் கோவிலுக்கு வந்து வைத்திய நாதசாமியின் செல்லப் பிள்ளையான செல்வ முத்துக்குமரன் சந்நிதியில் சித்தாம்ருத தீர்த்தம் விட்டு விபூதி குண்டத்திலுள்ள விபூதியைச் சேர்த்து புதிய பாத்திரத்தில் நன்றாகப் பிசைந்து விட வேண்டும். பஞ்சாக்ஷர ஜபம் இடைவிடாமல் செய்து கொண்டேயிருக்க வேண்டும். சின்னஞ்சிறு மிளகு போன்ற உருண்டைகளாக உருட்டி, இங்குள்ள தையல் நாயகியின் ஸந்நிதிக்குப் போய் பாதத்தில் வைத்து அர்ச்சனை செய்த பிறகுதான் அது மருந்தாகும். பஞ்சாக்ஷரத்தைச் சொல்லி மண்ணைக் கூட மருந்தாக்கலாம்தான்!

அங்காரகனுக்கு மிக முக்கியமான தலங்கள் இன்னும் இரண்டு உண்டு.

முதலாவது பழநி. ஞானப் பழமான முருகனை வழிபட்டுப் பேறுபெற்றார் அங்காரகன்.

இரண்டாவது பேரளத்துக்கு அருகில் உள்ள திருச்சிறுகுடி. இந்தச் சிறிய ஊரில் கோவில் கொண்டுள்ள சிவபெருமானுக்கு மங்களேசுவரர் என்றே பெயர், மங்களனான அங்காரகன் வழிபட்டதால்.

அங்காரகன் என்று அழைக்கப்படுபவரான செவ்வாய் கிரஹத்துக்குப் பல பெயர்கள் உள்ளன. (நவக்ரஹ ஸ்தோத்ர ஸங்க்ரஹம்) ரக்தவர்ணன், மகா காயன், மங்கலன், தனப்ரதன், ரோகநாசனன் இவை

வடமொழிப் பெயர்கள். செம்மீன் என்பது தமிழ்ப் பெயர்! (தகழியை நினைத்துக் கொள்ளாதீர்கள்!)

**வை**த்தீச்வரன் கோவில் மிகப் பழைமையான தலம். ஏழாம் நூற்றாண்டுக்கு முற்பட்ட கோவிலாக இருக்க வேண்டும். ஆனால் சரியான வரலாறு கிடையாது. அவ்வப்போது திருப்பணி செய்தவர்களுக்குக் கல்வெட்டுக்களின் பெருமை தெரிந்திருக்கவில்லை. இந்த சோகத்தை, இந்த இழப்பை ஈடுகட்ட முடியாது. முதலாம் குலோத்துங்க சோழனின் மகனான விக்கிரம சோழன் காலத்துக் கல்வெட்டு ஒன்றுதான் பழைமையானது. அதுவும் மெய்க்கீர்த்திதான் எஞ்சியிருக்கிறது.

அச்சுதப்பநாயக்கர், துளஜா மகாராஜா முதலிய பிற்கால மன்னர்கள் திருப்பணிகள் செய்திருக்கிறார்கள். இத்தனை புகழ்பெற்ற லட்சக்கணக்கான ஆஸ்திக குடும்பங்களுக்கு குலதெய்வமாக விளங்கி வருகின்ற வைத்தீச்வரனுடைய கோவிலுக்கு சரியான வரலாறு இல்லாமல் போனது துரதிர்ஷ்டமே.

தருமையாதீனத்தின் கீழ் இயங்கி வருகின்ற இந்தக் கோவில் செல்வச் செழிப்புமிக்கதாகவும், விரிவான பூஜைகளும், விமரிசையான உற்சவங்களும் தவறாமல் நடந்து வரும் சிறந்த கோவிலாகவும் விளங்குவதுடன், திருவிளக்குகளால் அலங்கரிக்கப்பட்டு எப்போதும் ஒளிமயமாகவும் எல்லாவற்றுக்கும் மேலாக சுத்தமாகப் பராமரிக்கப்பட்டும் வருகிறது!.

**ந**வகிரஹ க்ஷேத்ரம், நோய்தீர்க்கும் வைத்தியநாத சுவாமியின் தலம் என்று பிறந்தவள் என்றுணராத இயல்பினளான சக்தி, பாலாம்பிகையாக காட்சி தரும் தலம், வைதீச்வரன் – பாலாம்பிகை (தையல் நாயகி என்பது தமிழ்ப் பெயர்)யின் செல்வப் புதல்வன் முருகன், முத்துக்குமாரசாமியாக பெருமையுற்று குமரகுருபரராலும் அருணகிரிநாதராலும் பாடப் பெற்ற தலம். மூவர் பாடிய திருத்தலம்; காளமேகப் புலவர் பாடிய தலம்; முத்துஸ்வாமி தீக்ஷிதரின் கீர்த்தனையில் இடம்பெற்ற தலம் (இங்குள்ள முத்துக்குமாரசாமியிடம் நோன்பிருந்துதான் தீக்ஷிதரை அவரது பெற்றோர்கள் அடைந்தார்கள் என்பது வரலாறு); ஜடாயு – சம்பாதி என்ற பறவை சகோதரர்களுக்கு மோக்ஷம் நல்கிய தலம்; ரிக் வேதமே வந்து பூஜித்த தலம் புள்–ருக்–வேளூர் (புள்ளிருக்கு வேளூர்) என்னும் வைதீஸ்வரன் கோயில்.

செவ்வாய்க்குரிய தலம் என்பதால் இந்தத் தொடரில் இடம்பெறுகிறது. செந்தணல் போலத் தெரியும் இந்தக் கோளை மார்ஸ் என்று ரோமானியர் அழைத்தார்கள். ரெட் ப்ளானட் என்று கூறுவார்கள்.

ரோமாபுரி மக்கள் மார்ஸ் கடவுளை வளங்கள் நல்கும் பயிர்கள் செழிக்கச் செய்யும் தெய்வமாக வணங்கினார்கள். அரசு அவனைப் போர்க் கடவுளாக மாற்றி விட்டது. ஓநாய், மார்ஸ்தேவன் உகந்த விலங்கு. பிப்ரவரி மார்ச் மாதங்களில் மார்ஸ் தேவனுக்குப் ப்ரீதியாக தேர் ஓட்டும் பந்தயங்கள் நடத்தினார்கள்.

இப்போது மார்ஸ் கிரஹத்துக்கு மனிதர்கள் போய் இறங்குவது கிட்டத்தட்ட நிச்சயமாகி விட்டது. இதை எழுதத் தொடங்கிய போது தற்செயலாக டிஸ்கவரி சானலில் 'மார்ஸ் கோள் பற்றிய ஒரு செய்தித் தொகுப்பு காண நேர்ந்தது.



''எப்படியாவது சொந்தமா ஒரு பீச் வாங்கணும். அட்லீஸ்ட் ஒரு பார்க்காவது வாங்கணும்...''

''எதுக்கு?''

''உங்களைக் கட்டிக்கிட்டு என்ன சுகத்தைக் கண்டேன்? ஒரு பார்க் உண்டா? பீச் உண்டா?னு என் மனைவி புலம்பறா!''

– சென்னிமலை சி.பி. செந்தில்குமார்

செவ்வாயில் கரியமிலவாயு அதிகம். அந்தச் சூழ்நிலை மனிதனுக்கு ஒவ்வாது. இதைச் சமாளிக்கத் திட்டங்கள் தீட்டி செயல்பட்டு வருவதைக் காண்பித்தார்கள்.

அவனின்றி ஓரணுவும் அசையாது என்றால், மனிதன் அண்டசராசரங்களை ஊடுருவ முனைவதும் அவன் செயல்தானே.

சிவமும் சக்தியும் சேர்ந்து ஆனந்தத் தாண்டவம் ஆடினால் என்னதான் நடக்காது!

(அடுத்த வாரம்:
புதன்கோயில்–திருவெண்காடு)

படங்கள் : வெங்கடேஷ்




**பா**ரதிராஜாவின் படமென்றால் அழுத்தமான கதை இருக்கும். பாரதிராஜாவின் படமென்றால் கவித்துவம் நிறைந்த காட்சிகளிருக்கும். பாரதிராஜாவின் படமென்றால் மண்வாசனை இருக்கும். பாரதிராஜாவின் படமென்றால், எல்லாவற்றுக்கும் மேலாக, இவையெல்லாம் இயல்பானதாக இருக்கும். இவை எதுவுமே இல்லாத ஒரு பாரதிராஜாவின் படமாக இது மட்டுமேயாக இருக்கும்.

இரண்டு கிராமங்களுக்குள் பகை என்றால், இங்கிருந்து ஒரு பையனும் அங்கிருந்து ஒரு பெண்ணும் காதலிப்பார்களல்லவா? காதலிக்கிறார்கள். பெண்ணின் அண்ணனாகப்பட்டவன் காதலை எதிர்பாரலல்லவா? எதிர்க்கிறார். எதிர்ப்புகளை மீறி இருவரும் ரகசியமாகச் சந்திப்பார்களல்லவா? சந்திக்கிறார்கள். அடி தடி, வெட்டுக் குத்துக்குப் பின், ரத்தம் பூசிக் கொண்டு இருவரும் இணைவார்களல்லவா? இணைகிறார்கள்.

இதற்கு எதற்கொரு பாரதிராஜா என்று நீங்கள் கேட்டால், பதில், படத்தின் ஹீரோ அவரது மகன்.

கல்லுக்குள் ஈரத்தில் பார்த்த பாரதிராஜா கொஞ்சம் குண்டாக இருந்திருந்தால் எப்படி இருப்பாரோ, அப்படியே இருக்கிறார் மனோஜ். சிரிக்கும் போது, எந்த விநாடி, 'என் இனிய தமிழ் மக்களே' என்று கைகூப்பி விடப் போகிறாரோ என்று தோன்றும்படி அப்பாவை உரித்து வைத்திருக்கிறார். நடனங்களிலும் சண்டையிலும் தெரிகிற சிரத்தை நடிப்பில் காணோம். அதிநெருக்கமான க்ளோஸப் காட்சிகளுக்குப் பெயர் போன பாரதிராஜா, மகனைச் சற்றுத் தள்ளியே நிறுத்தி வைத்திருப்பதில் அர்த்தமில்லாமலில்லை.

கண் மட்டும் போதும் என்கிற தன் பழைய சித்தாந்தத்தின்படியே இதிலும் ஒரு புதுமுக ஹீரோயின் ரியா-சென் அல்ல - ரியா கண். கடவுளே! பாரதிராஜாவின் இயக்கத்திலேயே இப்படியொரு பொம்மைத்தனம் காண்பிக்கிறவர், வேறு படங்களிலும் வந்தால் என்னாவது?

இது பாரதிராஜா படம்தான் என்பதை நிரூபிக்கும்விதமாகப் படத்திலிருக்கும் ஒரே அம்சம் அந்த மதுரைப் பக்கத்து நாயக்கர்களின் வீடும் மொழியும். தெலுங்கு பேசும் வைணவர்களின் கொச்சைத் தமிழும் தற்செயலாகக் கலக்கும் பிராமண உச்சரிப்புகளும் படுயதார்த்தமாக வந்து விழுந்திருக்கின்றன.

இந்தக் கவனம், கிராமம் முழுக்க அழுக்கு வேட்டியிலிருக்க, ஹீரோவுக்கு மட்டும் தூங்கும் போதும் கூட ஜீன்ஸ் பேண்ட் அணிவித்திருக்கிற விஷயத்திலும் இருந்திருக்கலாம்.

பாடல்களில் ரகுமான் சொட்டச் சொட்ட நனைய வைப்பதும் ஒளிப்பதிவில் கண்ணன் சொக்கிச் சொக்கி உருக வைப்பதும் - வேறு வழியில்லை; பழைய மொழியைத்தான் கூற வேண்டும் - விழலுக்கு இரைத்த நீர்.

ரேவதி, ராதிகா, மணிவண்ணன் போன்றோரின் திறமையான நடிப்பும் முந்தைய பேரா உவமைக்கு ஏற்றதே.

தாஜ்மஹாலுக்கும் கதைக்கும் என்ன சம்பந்தம் என்று யோசிப்பவர்களுக்கு மட்டும் ஒரு வார்த்தை : படத்தில் ஒரு தாஜ்மஹால் பொம்மையைக் காட்டுகிறார்கள்.

மற்றபடி இது அமரக் காதல் அல்ல; அமர விடாமல் விரட்டுகிற காதல்.

— ஔரங்கசீப்

ரகுபதி ராகவ
ராஜாராம்
செல்லாக்கு போச்சே
சீதாராம்...'

ராம் ராம்

உட்கட்சிப்
பூசல்

ஜம்போ
அமைச்சரவை

தேர்தலில்
பின்னடைவு

அயோத்தி

மோசமான
ஆட்சி

உ.பி.யில்
பி.ஜே.பி
சரிவு




1999 நவம்பர் 21
பிரமாதி கார்த்திகை 5
மலர் : 58
இதழ் : 17

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்




## போப் வருகையால் பெருகிய சர்ச்சை

'புதிய மில்லெனியத்தில் கிறிஸ்தவ மதம் ஆசியா கண்டம் முழுதும் பரவித் தழைக்க வேண்டும்' என்று போப் ஆண்டவர் ஆசி கூறிச் சென்று விட்டார். மதமாற்ற நடவடிக்கைக்கான அப்பட்டமான அறைகூவல் இது என்பதை கிறிஸ்தவப் பேராயர்கள் கூட ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். அதனால்தான் போப் ஆற்றிய உரைக்கு அவசர அவசரமாக மாற்று விளக்கம் ஜோடிக்கும் சங்கடமான நிலைக்கு அவர்கள் தள்ளப்பட்டிருக்கிறார்கள்.

'தமது மதத்தைப் பரப்புவதென்பது போப் ஆண்டவரின் கடமை; அதைத்தான் அவர் செய்தார்' என்று வாதாடலாம். ஆனால், இந்தியா போன்ற மதச்சார்பற்ற நாட்டில், பல மத மக்கள் ஒற்றுமையுடன் வாழ முயன்றுவரும் நாட்டில், இவ்வாறு பேசுவது அபாயமானது என்பதுடன் அநியாயமானது.

ஒரு முஸ்லிம் நாட்டில் போப் இந்த உரையை ஆற்றியிருக்க முடியாது. பல நாடுகள் அவரது வருகைக்குக் கூட தடைவிதித்துள்ளன என்னும்போது அனுமதி அளித்த இந்தியாவில் மட்டும் அவர் இவ்வாறு பேசியது அவருக்குக் கௌரவம் சேர்க்கவில்லை.

அதிலும், அரசியல்ரீதியாக இந்தியாவில் ஹிந்து, ஹிந்துத்வ உணர்வுகள் தூண்டப்பட்டு சிலுப்பிக் கொண்டு நிற்கும் சங்கடமான காலகட்டம் இது. ஹிந்து - முஸ்லிம், ஹிந்து - கிறிஸ்தவ உறவுகளுக்குச் சோதனையான நேரம். இதுபோன்ற சமயத்தில் உணர்வுகளை மேலும் தூண்டும் விதமாகப் பேசக் கூடாது என்ற விவேகம் 'போப்' போன்ற உயர்பதவி வகிப்பவர்களுக்கு இருத்தல் வேண்டும்.

நமது நாட்டு ஹிந்து அமைப்புகளும் போப் வருகையையொட்டிய முக்கியமான தருணத்தில் சரியாக நடந்து கொள்ளவில்லை.

மத்தியில் ஆளுங்கட்சியாகப் பி.ஜே.பி. பொறுப்பேற்ற தினத்திலிருந்தே ஹிந்து அடிப்படைவாத




அமைப்புகளின் ஆதிக்கமும் வலுத்து வருகிறது. போப் வரப் போகிறார் என்றதும் அவையெல்லாம் நேரடியாகவும் திருட்டுத்தனமாகவும் எதிர்ப்பைக் காட்ட ஆரம்பித்து விட்டன.

தமிழ்நாட்டில் மட்டும் இந்த இரண்டு மூன்று நாட்களில் பல கிறிஸ்தவ வழிபாட்டு இடங்கள் தீக்கிரையாக்கப்பட்டுள்ளன.

தீபாவளி நேரம், பட்டாசு வெடித்ததால் நடந்த தீ விபத்துக்களில்தான் கொட்டகைகள் எரிந்தன என்பதை ஏற்பதற்கில்லை. தமிழகத்தில் பல இடங்களில் கிறிஸ்தவ தேவாலயக் கொட்டகைகள் திட்டமிட்டு எரிக்கப்பட்டிருப்பது தெளிவாகத் தெரிகிறது. பத்து நாள் இடைவெளியில், சென்னையில் மட்டும் மூன்று கொட்டகைகள் எரிந்து போயிருக்கின்றன! திருச்சி, திருநெல்வேலியிலும் இதே திட்டமிட்ட சதிச் செயல்.

கிறிஸ்தவர்களுக்கு வழிபாட்டுத் தலம் என்பது கூட்டுப் பிரார்த்தனைக்கான விஸ்தாரமான இடத்தை உள்ளடக்கியதாக அமைய வேண்டிய அவசியம் இருக்கிறது. இதற்காக ஒதுக்கப்படும் நிரந்தர இடங்களில் ஓலைக்கூரை போடுவது அபாயமானது. இவ்விடங்களில் ஓலைக் கூரைக்கு அரசு தடைவிதிக்கலாம்.

ஒரு தொழிலகத்தில் எத்தனையோ விதமான கட்டுப்பாடுகளையும் பாதுகாப்பு ஏற்பாடுகளையும் அரசு நிர்ணயிக்கிறதே ஏன்? தொழிலாளர்களின் நலனுக்குத்தானே? அதே போல கூட்டு வழிபாட்டுக்கு வருவோர் நலன் கருதியும் இத்தகைய கூடங்களுக்கும் அரங்கங்களுக்கும் தர நிர்ணயம் தேவை. இது ஒருபுறமெனில், அரசியல் உறவுகள் மாறியிருப்பதன் காரணமாக ஹிந்து தீவிரவாதம் தமிழகத்தில் 'கை வரிசை'யைக் காட்டி வருகிறது. அரசு எச்சரிக்கையுடன் இப் பிரச்னையைக் கையாள வேண்டும்.

அமைதியை நிலைநாட்ட அரசாங்க முயற்சி மட்டும் போதாது. கசப்புணர்வைக் கிள்ளி எறிய ஹிந்து அமைப்புகளும் பாடுபட்டாக வேண்டும். அவ்வமைப்புகள் தங்களைக் கொஞ்சம் ஆத்ம பரிசோதனைக்கு உட்படுத்திக் கொள்வதும் அவசியம்.

கிறிஸ்தவ மதத்துக்கு மக்கள் மாறுவதன் காரணம் என்ன...? ஹிந்து மதத்தில் அவர்கள் பெறாததைக் கிறிஸ்தவத்தில் பெற இயல்வதால்தானே அவ்வாறு மாறுகிறார்கள்?

தீண்டாமையும் ஜாதி அடிப்படையிலான ஏற்றத்தாழ்வுகளும் இன்னமும் ஹிந்து மதத்தை விட்டகன்றபாடில்லை. அதே சமயத்தில், இந்த அவலங்களால் பாதிக்கப்பட்ட எளிய மக்களை கிறிஸ்துவ மிஷனரி ஊழியர்கள் அணுகிச் சென்று சேவையும் உதவியும் அளிக்கிறார்கள். பின்தங்




க்கிய பகுதிகளில் அடிப்படை வசதி வழங்கல், மருத்துவ சேவை, கல்விச் சேவை போன்றவற்றில் கிறிஸ்தவ அமைப்புகள்தான் முன்னணியில் இருக்கின்றன.

அடிப்படை வசதிகளுடன் அன்பான அங்கீகாரமும் வழங்கும் மத அமைப்பிடம் எளியோர் ஈர்க்கப்படுவதில் ஆச்சர்யமில்லை.

இதனால் தங்கள் மதம் பாதிக்கப்படும் என்ற அச்சம் இருப்பின், ஹிந்து அமைப்புகளும் இந்த எளிய மக்கள் மத்தியில் வாழ்ந்து, அங்கீகரித்து சிரமதானமும் பொருளுதவியும் வழங்கத் தயாராயிருத்தல் வேண்டும்.

உலகமே ஒரு கிராமமாகி விட்டது; விஞ்ஞானம் வளர்ந்து விட்டது; இன்னமும் நாம் பல்வேறு கடவுள்கள் பல்வேறு மதங்கள் என்று பிரித்துப் பேசுவதில் அர்த்தம் இருக்கிறதா...? என்று கூட கேள்வி எழுப்பலாம்.

ஆனால், இந்த தத்துவார்த்த வாதங்களெல்லாம் எழுத்தறிவு கூட இன்றி வாழும் எளியவர்களிடம் எடுபடாது.

அவர்களுக்குத் தேவை வயிற்றுக்குச் சோறும் வாழ்க்கையில் கௌரவமும். இதை வழங்கக் கூடியவர்களிடம் விசுவாசம் காட்ட அவர்கள் தயாராகிறார்கள். ஆகவே மதமாற்றங்களுக்குப் பொறுப்பு ஏழைகளை அலட்சியம் செய்யும் அரசியல் அமைப்பும் மத அமைப்பும்தான் என்பது உணரப்பட வேண்டும்.

கல்வியறிவும் அதன் விளைவான சுயசிந்தனையும் பெற்றவர்களை ஆசைகாட்டி மதமாற்றம் செய்ய முடியாது.

எனவே அரசு அனைவருக்கும் கல்வி பரவ வழிசெய்ய வேண்டும்.

சமத்துவமும் சகோதரத்துவமும் அனுபவித்து பாதுகாப்புணர்வுடன் வாழ்கிறவர்களைப் பிற மதங்களுக்கு ஈர்ப்பது நடவாத காரியம்.

கிறிஸ்தவர்களின் மதமாற்ற நடவடிக்கையினால் தங்கள் மதம் அபாயமுற்றிருக்கிறது என்று கருதும் ஹிந்துக்கள், சமபாவத்தால் விளையக்கூடிய பாதுகாப்புணர்வை சக ஹிந்துக்கள் அனைவருக்கும் உறுதி செய்யட்டும்.

அவ்வாறு செய்வார்களேயானால் மதமாற்றம் என்ற பேச்சுக்கே இடமிராது.

மாறாக, வன்முறையிலும் நீசச் செயல்களிலும் ஈடுபட்டால், உலகளாவிய அவப்பெயரும் கண்டனமும்தான் சம்பாதிக்க முடியும். ○

வருடா வருடம் அக்டோபர் 30-ம் தேதி மட்டும் அரசியல்வாதிகள் நினைவுக்கு கரெக்டாக வந்து விடும் பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர், இந்தத் தேர்தலுக்குப் பின் எல்லாக் கட்சியினராலும் சற்று அதிகமாகவே சொந்தம் கொண்டாடப்படுகிறார்.

''பசும்பொன்னில் நடந்து வரும் தேவர் ஜெயந்தி விழாவில் ஜெயலலிதா கலந்து கொண்டது இது இரண்டாவது முறை. 95-ம் வருடம் அவர் ஆட்சியிலிருந்தபோது முதல் முறை பசும்பொன்னுக்கு வந்திருக்கிறார். நான்கு வருடங்களாக ஜெயலலிதாவால் கண்டுகொள்ளப்படாத தேவர், இந்த முறை நினைவுக்கு வந்ததற்குக் காரணம், தென் மாவட்டங்களில் அ.தி.மு.க., பெற்ற வெற்றிதான். ''தேவரின மக்கள்தான் அ.தி.மு.க., கட்சியை வெற்றி பெறச் செய்திருக்கிறார்கள் என்ற திடமான நம்பிக்கைதான் 'ஜெ'யின் பசும்பொன் விசிட்டுக்கு முக்கியக் காரணம்!'' என்கிறார்கள் பசும்பொன் மக்கள்.

தேவரின் சமாதிக்குப் பின்புறம் அவர் வாழ்ந்த வீடு இப்போது அறக்கட்டளையாகச் செயல்பட்டு வருகிறது. அதன் நிர்வாகத்தைக் கவனித்து வரும் நடராஜன், தேவரின் மைத்துனர் தங்கவேல் தேவரின் மகன். தேவரின் வாரிசாக இருப்பவர் நடராஜனின் மனைவி காந்தி மதியம்மாள்.

''எம்.ஜி.ஆர். காலத்தில்தான் தேவரின் குரு பூஜையை அரசு விழாவாக நடத்த ஏற்பாடுகள் செய்யப்பட்டு அமைச்சர்கள், கலெக்டர்கள் பங்கேற்று வருகிறார்கள். இங்கு சமாதியிலோ, அறக்கட்டளையிலோ சாதீய சிந்தனை, பாகுபாடு இடையவே கிடையாது. யார் வேண்டுமானாலும் வரலாம், தரிசிக்கலாம். தற்போது அறக்கட்டளைக்கென்று இரண்டு ஊரில் இருந்துதான் வருமானம் வருகிறது. அதை வைத்துப் பெரிதாக ஒன்றும் செய்ய முடியவில்லை. இதுபோக, உறவினர்கள் சில பேர் சொத்துக்கள் மீது அடுத்தடுத்து வழக்குப் போட்டுக் கொண்டே இருக்கிறார்கள். அதனை சமாளித்து கோர்ட்டு, கேஸ் என்று அவர்களுக்கு பதில் சொல்லவே பணமும், நேரமும் செலவாகி விடுகிறது'' என்கிறார் நடராஜன் தீராத சோகத்துடன்.



• முத்துராமலிங்கத் தேவர்

• தேவர் சமாதி

''மக்களுக்குத் தெரிவது ஜெயலலிதா வருகிறாரா? கூட யார் வருவது சசிகலாவா? தினகரனா? மலைச்சாமியா? ஜெயலலிதாவே திருநீறு எடுத்துத் தருகிறாரா? என்பதுதான். கோஷம் போட்டு அமைச்சர்களைப் பேச விடாமல் தடுத்து விட்டார்கள். மொட்டை, சாமியாட்டம், தேவர் சினிமா படம் போன்றவையெல்லாம், பப்ளிசிட்டி ஸ்டண்ட்டுகள்தான். மற்றபடி தேவர் அறக்கட்டளையின் உண்மை நிலையைக் கவனிக்க உண்மையான அரசியல் தலைவரோ இனத் தலைவரோ இல்லை என்பதுதான் எங்கள் வேதனை!'' என்கிறார்

# அம்மா விழாவான தேவர் விழா!




கள் பசும்பொன்னிலேயே வாழ்ந்து வருடா வருடம் 'கூத்து' பார்த்து வரும் அப்பாவி மக்கள். ''பத்திரிகையாளர்கள் கூட ஒரு நாள் கூத்துக்குத்தான் செய்தி சேர்க்க வருகிறார்கள்... நீங்க பரவாயில்லை எங்க நிலைமையைக் கேக்கறீங்க?'' என்கிறார்கள் வெள்ளையாக!

பசும்பொன் ஊர்த் தலைவர் இ. மார்க்கண்டத்தேவர், ''எனக்கு வயசு 75. இந்தத் தடவை கூட்டம் ஓவர். ஆளும் கட்சி ஆட்கள் வரும்போது இல்லாத ஆர்ப்பாட்டம் ஜெயலலிதா வரும்போது! மிதிச்சு, உடைச்சு பெரிய ரகளை. பெண்கள் எல்லாம் கூட மரத்து மேல ஏறி நின்னு பார்க்குறோம்னு கிளையை ஒடைச்சுட்டாங்கன்னா பார்த்துக்கோங்க. பெஞ்சு இரண்டு, மூணு உடைஞ்சுடுச்சு. தேவரோட பழைய போட்டோ ஒண்ணு 'பணால்'. வந்த கூட்டத்தால ஆறாயிரம் ரூபாய் சேதாரமாயிடுச்சு. என்ன செய்யறது? எங்களுக்கு இரண்டு மூணு சொத்து, வழக்குல திரும்பக் கிடைச்சதுனா அதுக்கு அ.தி.மு.க.தான் காரணம். அதனால ஆறாயிரம் ரூபா செலவு

சாதா'ரணம்'' என்றார்.

''நான் தேவர் கல்லூரியில்தான் பி.எஸ்ஸி., படிக்கிறேன். ஜெயிச்ச பிறகும் அஞ்சு வருஷமா தொகுதிக்கே போகாத எம்.எல்.ஏ., ஜெயிக்காம தோத்துப் போனவங்க -இப்படி வித்தியாசம் எதுவும் இல்லாம வருஷா வருஷம் எங்க ஊருக்கு வர்றதுக்குக் காரணம் தேவர்தான். எனக்கு ஒரேயொரு வருத்தம் உண்டு. தேவர் சுதந்தரத்துக்குப் பாடுபட்ட தேசியத் தலைவர். அவரைப் பார்த்து தேவர் சாதியத் தலைவர், அவருக்கெதுக்கு அரசு விழான்னு சாதியத் தலைவர்கள் பேசறாங்க. இதைத்தான் தாங்கிக்க முடியலை'' என்றார் இளைஞர் முத்துராமலிங்கம்.

''நான் கல்லூரிப் படிப்பை முடிச்சுட்டேன். குருபூஜை அன்று நாங்க தேவர் நினைவிடத்துக்குப் போக மாட்டோம். முதல்



• நடராஜன்



• மார்க்கண்டத் தேவர்



• ராமு அம்மாள்

நாளே போய் கும்பிட்டு வந்துடுவோம். இங்க சண்முகையா பாண்டியனுக்கு பெண்கள் மத்தியில் நல்ல ஆதரவு உண்டு. பெண்களுக்கு என்ன கேட்டாலும் செய்து கொடுப்பார். அப்படிப்பட்டவரை அவசர அவசரமா திருப்பி அனுப்பியது கொஞ்சம் வருத்தம்தான்!'' என்றார் செல்வி தனலட்சுமி.

இதே ஊரில் சண்முகையா பாண்டியன் ஊர்வலமாக வந்தபோது, சுற்றி நின்ற பெண்கள், "அடப்பாவி! ராமநாதபுரத்தில் கலவரத்தை உண்டுபண்ணி எங்க தாலிய அறுத்தவனே நீ ஏண்டா வர்றே?"ன்னு ஆர்ப்பாட்டம் செய்ய, டி.எஸ்.பி.யே வந்து நேரடியாகச் சமாதானம் செய்துள்ளார். அறக்கட்டளை நிர்வாகத்தைக் கவனித்து வரும் பெரியவர் நடராஜனைப் பார்க்க வேண்டும் என்று சண்முகையா பாண்டியனின் செயலாளர் கேட்க, டி.எஸ்.பி., அனுமதி மறுத்து திருப்பியனுப்பி விட்டார்.



• நாகசாமி



• தனலட்சுமி



• முத்துராமலிங்கம்

"என் பேர் ராமு அம்மா. எங்க தேவர் சமூகத்துக்கே ஜெயலலிதா அம்மா வந்தப்புறம்தான் விடிவு காலம். இந்த ஊர்லே அம்மாவுக்காக (ஜெ) எதையும் செய்ய எல்லாப் பெண்களும் தயாராயிருக்கோம். 'எந்தக் காரியம்னாலும் தேவரை நினைச்சுக்கிட்டுத்தான் செய்வேன்'னு ஜெயலலிதா அம்மாவே சொல்லியிருக்காங்க. வேறென்னங்க வேணும்? போன தடவை அம்மா தான் சமாதியில் தட்டோடு பதிச்சாங்க, மொசைக், மார்பிள் போட்டாங்க. அமைச்சர்களை அனுப்பி அவங்க பார்வையில் வேலை நடந்துச்சு'' என்றார் வெகுளியாக.

காலனியிலுள்ள தலித் இனத்தைச் சேர்ந்த ஏ. நாகசாமி, ''காலனியில மொத்தம் நூறு வீடுகள் இருக்கு. உலகத்துல எந்த மூலையில ஜாதிப் பிரச்னை நடந்தாலும் இங்கே நடக்காது. ஏன்னா நாங்க பரம்பரை பரம்பரையா தேவர் குடும்பத்துல வேலை பார்க்குறோம்!'' என்றார்.

அபிராமம் பகுதியில் நாம் சுற்றிய பக்கமெல்லாம் 'அம்மா' தரிசனம்தான். 'சும்மா சும்மா' கண்ணில் பட்டுக் கொண்டே இருந்தார் அம்மா, போஸ்டர் வடிவில்! மருந்துக்குக் கூட தி.மு.க., போஸ்டர்கள் இல்லை. அரசு விழாவா? அம்மா விழாவா? என்ற எண்ணம்தான் எங்கும் இருந்தது.

மணிமண்டபத்தின் காம்பவுண்ட் சுவரை ஒட்டி ஆடிட்டோரியம் ஒன்று கட்டப்பட்டு வருகிறது. இருபது லட்ச ரூபாய்ச் செலவில் உருவாகும் இந்த ஆடிட்டோரியத்தின் ஆணி வேர் தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த நிறை குளத்தான் எம்.பி.தான்.

டாக்டர் சேதுராமனை அரசியல் தலைவராகப் பார்க்க மறுக்கும் பசும்பொன் மக்கள், "ஐயா நல்லவர், நிச்சயம் ஏதாவது எங்களுக்குச் செய்வார்'' என்று மட்டும் சொல்கிறார்கள்.

பசும்பொன்னை சுற்றி வந்ததில் ஒன்று மட்டும் நன்றாகப் புரிந்தது. தி.மு.க., பற்றியோ, ஆளும் அமைச்சர்கள் பற்றியோ பேச்சை எடுத்தால் நம்மை கோபமாகப் பார்க்கிறார்கள். சினிமாவில் தமிழ்ப்படவில்லன் கூட இல்லை; தெலுங்குப் படவில்லன் மாதிரி மக்களோடு ஒட்டாமல் நிற்கிறார்கள் தி.மு.க., அமைச்சர்கள். தென் மாவட்டங்களில் தேவரினத்தின் தெய்வமாக ஜெயலலிதாவையும், அதற்கு இணையாக சசிகலா, தினகரன், சீனிவாசன் (திண்டுக்கல் எம்.பி.) மலைச்சாமி ஆகியோரையும்தான் பார்க்கிறார்கள் என்பது தான் ஆச்சரியத்திலும் ஆச்சரியம்!

— 'வியூவ்ஸ் நியூஸ்'

படங்கள் : எம். பாலமுருகன்

கதர் வேட்டி, கதர்ச் சட்டை. கலகல பேச்சு. நம்மைச் சந்தித்தவுடனேயே, "ஸார்... நான் கல்கி ரசிகன். வாரம் தவறாமல் நான் படிப்பது 'பொன்னியின் செல்வனை'யும் 'குறையொன்றுமில்லை'யையும்தான்!" என்ற படி நம்மை வரவேற்றார் மத்திய பெட்ரோலியத்துறை இணையமைச்சர் எ. பொன்னுசாமி.

"அப்பா அரசு ஊழியராக இருந்தாலும், அந்தக் காலகட்டத்தில் நிறைய தீண்டாமைக் கொடுமையில் மாட்டிக் கொண்டவர்களில் நானும் ஒருவன். எங்கள் கிராமத்துப் பள்ளியில் என்னை வகுப்பறைக்கு வெளியிலுள்ள மணலில் உட்கார வைப்பார்கள். கையைப் பிடித்து எழுதச் சொல்லித் தர வேண்டுமே என்பதற்காக, என் கையில் ஒரு சிறு குச்சியைக் கொடுத்து எழுதப் பழக்குவார்கள்" என்று தமது நினைவுப் புத்தகத்தின் பக்கங்களை எடுத்துக் காண்பிக்கிறார் அமைச்சர்.

அமைச்சருக்குச் சொந்த ஊர், வந்தவாசிக் கருகில் உள்ள கீழ்சாத்தமங்கலம் கிராமம். ஆரம்பக் கல்வி கிராமத்துப் பள்ளியில். பின்னர் வந்தவாசியில், பள்ளி இறுதி வகுப்பு வரை ஹாஸ்டலில் தங்கிப் படிப்பு. அப்பா எட்டியான் கிராமத்துத் தலையாரி. இப்போது அவருக்கு வயது 105.

வந்தவாசியில் ஆறாவது வகுப்பிலிருந்து பள்ளி இறுதி வகுப்பு வரை படித்தபோது தமக்கு போதித்த ஆசிரியர்களைப் பற்றி மறக்காமல் பேசுகிறார் பொன்னுசாமி. "ஜனார்த்தன முதலியார், திருவேங்கட முதலியார், கிருஷ்ணமூர்த்தி அய்யர் போன்ற ஆசிரியர்கள்தான் என்னைப் பண்படுத்தியவர்கள்" என்று பெருமையுடன் சொல்கிறார்.

"அறியாமையில் முடங்கிக் கிடக்கும் ஆதி திராவிட சமுதாய மக்களுக்கு வெளிச்சம் காண்பிக்க வேண்டும் என்ற உணர்வு பள்ளி இறுதி வகுப்பில் படிக்கும் போதே எனக்கு உண்டானது. அப்போது என் நண்பர்களுடன் சைக்கிளை எடுத்துக் கொண்டு, வந்தவாசி தாலுக்காவில் உள்ள 207 கிராமங்களுக்கும் அவ்வப்போது சென்று சமுதாயத்தின் அடித்தட்டு மக்களுக்கு என்னால் இயன்ற உதவிகளைச் செய்துள்ளேன்!"

சென்னை பச்சையப்பன் கல்லூரியில் இண்டர் படித்தார் பொன்னுசாமி. எம்.சி. ராஜா ஹாஸ்டலில் வாசம். அறைத் தோழர்தான் டாக்டர் ராமதாஸ். "அப்போது அவர் லயோலாவில் படித்துக் கொண்டிருந்தார். நான் தேசிய உணர்வுகளுடன் இருக்க, அவருக்கோ திராவிடப் பற்று இருந்தது. ஆனால் இருவருக்கும் ஒரு ஒற்றுமை, பெரியார் கூட்டம் எங்கு நடந்தாலும், நாங்கள் நடந்தே சென்று அவரது பேச்சைக் கேட்போம். சென்னையின் நடைபாதைகளை நாங்கள் நடந்தே அறிந்திருக்கிறோம். அந்த நட்பு குடும்பரீதியாக இன்று வரை தொடர்கிறது" என்கிறார் அமைச்சர்.

இண்டர் முடித்தவுடன் அமைச்சருக்கு ஏ.ஜி. அலுவலகத்தில் ஆடிட்டர் வேலை கிடைத்தது. "எனது பணி ஏ.ஜி. அலுவலகத்துக்குள் இருந்தாலும், மனம் என்னவோ அலுவலகத்துக்கு வெளியேதான் இருந்தது. 'தாழ்த்தப்பட்டவர்களைக் கைதூக்கி விட நாம் என்ன செய்ய வேண்டும்' என்பதே என் சிந்தனையாக இருந்தது. அதன் காரணமாக மகாத்மா காந்தி துவங்கிய தாழ்த்தப்பட்டோர் லீக் என்ற அமைப்பில் தமிழ்நாட்டு கிளையில் என்னை இணைத்துக் கொண்டேன். கல்வி மற்றும் வேலை வாய்ப்பில் அடித்தட்டு மக்கள் நடந்து செல்ல வேண்டிய பாதையைக் காட்டுவதில் என் நேரத்தைச் செலவழித்தேன். நான் தீண்டாமையை அனுபவித்தவன் என்றாலும் கூட கஷ்டப்படுபவர்கள் எந்த சமுதாயத்தைச் சேர்ந்தவர்களாக இருந்தாலும் அவர்களுக்கும் உதவி செய்ய வேண்டும் என்கிற இயல்பும் என்னுள் ஊறிக் கிடந்தது!"

## நேர்கோட்டில்

"தலைவர் காமராஜரே கூட காங்கிரஸில் இணையும்படி கேட்டார். அதன் பிறகு இந்திரா காங்கிரஸ், அ.இ.அ.தி.மு.க. என்று பல கட்சிகளிலிருந்து அழைப்பு வந்தது. கடைசியாக கன்ஷிராம் கூட அழைத்தார். ஆனால் எனக்கென்னவோ டாக்டர் ராமதாஸ் அவர்களின் செயல்பாடுகள் பிடித்திருந்தன. அதனால்தான் பா.ம.க.வில் என்னை இணைத்துக் கொண்டேன்!"

ஏ.ஜி. அலுவலகத்தில் பொறுப்பில் இருந்ததால் தமது சகோதரர்களையும், சகோதரிகளையும் கரையேற்ற முடிந்தது என்கிறார் அமைச்சர். "குடும்பத்துக்கு என் பணி முடிந்



# ஜோடு பார்த்தாச்சு!''

ததும் 1988-ல் அரசுப் பொறுப்பிலிருந்து விலகி முழு நேர சமுதாயப் பணியில் குதித்தேன். பன்னிரண்டு வருடங்களுக்கு முன்னரே டாக்டர் என்னை அவருடன் சேர்ந்து பணியாற்ற அழைத்தார். நான் பொறுமை காத்தேன். ஆனால் இந்த இடைப்பட்ட காலங்களில் டாக்டர் நடந்து வந்த பாதை எனக்கு மிகவும் பிடித்துப் போனது. தமிழகத்தின் இரண்டு பெரிய சமுதாயங்களின் முன்னேற்றத்துக்கு உண்மையாகவே பாடுபடும் தலைவர் அவர் என்பதைப் புரிந்து கொண்டேன். சமுதாயத்தில் உடனடி மாற்றம் வர வேண்டும் என்று நினைக்கிறார் டாக்டர். அதனால்தான் அவரது பேச்சுக்கள் சில சமயம் தீவிரமாக இருக்கும்!''

அமைச்சருக்கு எழுத்தாளர் முகமும் உண்டு. அம்பேத்கர், கிருபளானி ஆகியோர் நூல்களை தமிழில் மொழிபெயர்த்துள்ளார். பத்திரிகைகளில் சிறுகதைகள் எழுதியுள்ளார். ''சாமிக்காக அல்ல'' என்ற சிறுகதைத் தொகுப்பை வெளியிட்டிருக்கிறார். அமைச்சருக்கு இரண்டு பெண்கள். வாழ்க்கையில் செட்டில் ஆகி விட்டார்கள். மகன் கிடையாது. ஆனால் 17 வயதில் தம்மிடம் வந்த பாரதி என்ற இளைஞரைத் தம் மகனுக்கும் மேலாக வளர்த்து வருகிறார். வாழப்பாடி ராமமூர்த்தியின் நெருங்கிய உறவினரின் மகன்தான் பாரதி.

ரொம்பவும் டென்ஷனான தமது தொகுதியைப் பற்றிக் கவலையுடன் பேசுகிறார். ''அந்தத் தம்பி (திருமாவளவன்) தேர்தல் பாதைக்கு வந்தது நல்ல விஷயம்தான். ஆனால் வன்முறையைத் தூண்டும் பேச்சுக்களை அவர் கைவிட வேண்டும்!'' என்கிறார்.

தேர்தலின் போது வாக்குக் கொடுத்தபடியே சிதம்பரம் தொகுதியிலேயே தங்கி பணியாற்ற வீடு பார்த்து விட்டார். எல்லா கிராமங்களுக்கும் சென்று நன்றி சொல்லி விட்டார். ''தொகுதியில் உள்ள இரு சமுதாய மக்களும் நல்லிணக்கத்துடன் வாழச் செய்வதுதான் என் முதல் பணி. அடுத்தபடியாக எல்லா கிராமங்களுக்கும் இணைப்புச் சாலை போட வேண்டும் என்கிற எண்ணமும், கட்சிக்கும் டாக்டர் ராமதாஸ் அவர்களுக்கும் நல்ல பெயர் வாங்கித் தர வேண்டும் என்கிற எண்ணமும்தான் இப்போது என் மனத்தில் இருக்கின்றன!'' என்கிறார் அறுபத்திரண்டு வயதான அமைச்சர்.

சிதம்பரம் தொகுதியில் வாக்காளராக இல்லாவிட்டாலும் அங்கு தமது வாக்கைப் பதிவுசெய்தது, தேர்தலுக்குப் பின் பெரிய பிரச்னையாக எழுந்து, பொன்னுசாமியின் அமைச்சர் பதவிக்கே சோதனை வந்து விடுமோ என்கிற அளவுக்கு விஸ்வரூபம் எடுத்தது. தேர்தல் கமிஷன், இந்த விவகாரம் தொடர்பாக 'நீதிமன்றத்தை அணுகலாம்' என்று சொல்லி விட்டதால் பிரச்னை பின்னணிக்குப் போயிருக்கிறது.

சந்திப்பு : **ப்ரியன்**

படம் : **'போட்டோகிராபர்'**

● பிரதமர் வெளிநாட்டுக்குப் பயணமாகிற ஒவ்வொரு முறையும் சில முக்கியமான முடிவுகள் எடுக்கப்படும். இந்த முறை பிரதமர் அலுவலகத்திலேயே சில அதிரடி மாற்றங்கள்! பிரதமர் அலுவலகச் செயலாளர் ப்ராஜேஷ் மிஸ்ரா வாஷிங்டனுக்குச் செல்ல விருக்கிறார். தமது இரண்டாவது மருமகன் ஷக்தி சின்ஹாவை முதலில் ஓரங் கட்டி வைத்திருந்தார் வாஜ்பாய். இப்போது சின்ஹா உலக வங்கியில் பணி மேற்கொள்ளப் போகிறார். முதல் வளர்ப்பு மகன் ரஞ்சன் பட்டாச்சார்யாவும் அடக்கப் பட்டிருக்கிறார். கட்சியிலும் ஆட்சியிலும் பிரதமர் தமது பிடியை இறுக்கிக் கொள்ள வேண்டுமானால், முதலில் இந்த 'வளர்ப்புச் சங்கடங்கள்' பிரச்னையிலிருந்து வெளியே வர வேண்டும் என்று பிரதமரின் நெருங்கிய வட்டாரங்கள் அறிவுறுத்தியதன் பலன் தான் இது!



• ஜனா கிருஷ்ணமூர்த்தி

● உ.பி.யில் கல்யாண் சிங்குக்குப் பதவியிலிருந்து கல்தா கொடுக்கப்பட்டு விட்டாலும் பி.ஜே.பி.யின் பயம் இன்னும் விலகியபாடில்லை. உ.பி.யிலுள்ள பிற்படுத்தப்பட்டோரின் வாக்கு வங்கியை அப்படியே தம் பக்கம் இழுத்துக் கொண்டு விடக் கூடிய வல்லமை படைத்தவர் அவர் என்பதால்தான் இந்த பயம். கூடவே முலாயம் சிங் யாதவுடன் அவர் ஏதாவது மறைமுக ஒப்பந்தம் செய்துகொண்டு விடுவாரோ என்கிற சந்தேகமும் இருக்கிறது. இந்த நிலையில் அவரை ஏன் பதவி நீக்கம் செய்ய வேண்டும்? தம்மை எதிர்த்து அறிக்கை வெளியிட்ட கல்யாண் சிங்குக்குப் பாடம் கற்பிக்காவிட்டால், கட்சியில் தம்மை யாருமே மதிக்க மாட்டார்கள் என்கிற கௌரவப் பிரச்னையாகி விட்டது பிரதமருக்கு. அதன் விளைவுதான் இது. "கன்யகுப்ஜர் (வாஜ்பாய்) இப்போது ஜெயித்திருக்கலாம். ஆனால் உ.பி.யைப் பொறுத்தவரை எங்கள் தலைவருக்கு எதிராக பி.ஜே.பி.யால் அரசியல் பண்ணி விட முடியுமா என்ன? குஜராத்தில் வாகேலா செய்த மாதிரி தனிக்கட்சி என்றெல்லாம் ஆரம்பித்து விட மாட்டார். ஆனாலும் சரியானதொரு நேரத்துக்காகக் காத்துக் கொண்டுதான் இருக்கிறார்!" என்கிறார்கள் கல்யாண் சிங்கின் ஆதரவாளர்கள்.



• கல்யாண் சிங்



• வாஜ்பாய்

● பிரதமர் தலைமையிலான அமைச்சரவை எடுத்த முக்கியமான முடிவுகளில் ஒன்று சிறப்புப் பாதுகாப்புப் படையினரின் பாதுகாவலை சோனியாவுக்கும் அவரது குடும்பத்தாருக்கும் தொடர்வது என்பது. சிறப்புப் பாதுகாப்புப் படை சட்டப்படி, முன்னாள் பிரதமருக்கும் அவரது குடும்பத்தினருக்கும் பத்தாண்டு காலத்துக்கு மட்டுமே இந்தப் பாதுகாப்பு தொடரும். அதுவும் ராஜீவ் மரணத்துக்குப் பிறகு கொண்டு வரப்பட்ட சட்டத் திருத்தத்துக்குப் பிறகு! இதன்படி டிசம்பர் முதல் தேதியன்று சோனியா குடும்பத்தினருக்கு வழங்கப்படும் பாதுகாப்பு முடிவடைகிறது. பாதுகாப்பை நீட்டித்தால் சட்ட சிக்கலை உருவாக்கும். விலக்கிக் கொண்டாலோ சர்ச்சைக்கு இட

மாகும். அதனால் அவசரச் சட்டம் ஒன்றைக் கொண்டு வந்து நிலைமையைச் சமாளித்து விட்டார் பிரதமர்.

● உள்துறை அமைச்சர் அத்வானி, தமது இல்லத்துக்குப் பத்திரிகையாளர்களை அழைத்து சில திட்டங்களை விளக்கிக் கொண்டிருந்தார். அப்போது சுடச் சுட வந்தன கபாப் (ஆட்டிறைச்சியை நன்றாக அரைத்து வடை போல் செய்யப்படும் ஒரு பதார்த்தம்)பும் தேநீரும். விருந்தோம்பிக் கொண்டிருந்தவர் திருமதி கமலா அத்வானி. ஆனால் பத்திரிகையாளர்கள் நோட்ஸ் எடுப்பதிலேயே தீவிரமாய் இருக்க, ''சூடாக எடுத்துக் கொள்ளுங்கள்!'' என்கிற திருமதி அத்வானியின் உபசரிப்பை யாரும் காதில் போட்டுக் கொள்ளவில்லை. சிறிது நேரம் சென்றது. ''ஆறிப் போகுமுன் எடுத்துக் கொள்கிறீர்களா, இல்லையா?'' என்று திருமதியார் கொஞ்சம் உரக்கக் குரல் கொடுக்கவே உடனடியாய் எழுந்த அத்வானி, ''வாருங்கள்! முதலில் எனது ஹோம் மினிஸ்டரின் ஆணையை நிறைவேற்றி விட்டு வருவோம்!'' என்று ஒரு போடு போட, திருமதி கொஞ்சம் வெட்கப்பட்டு விட்டார்.

● இப்போது எல்லா இடங்களிலும் மீடியா மையங்கள் (பத்திரிகை மற்றும் டீவி சேனல்காரர்களுக்கான வசதிகள் கொண்ட அறைகள்) புயல் வேகத்தில் உருவாகி வருகின்றன. கட்சி அலுவலகங்கள்தான் என்றில்லை. சில அரசியல்வாதிகள் தனிப்பட்ட முறையிலேயே தங்கள் இல்லங்களில் இந்த மையங்களை ஏற்படுத்த ஆரம்பித்து விட்டார்கள். பார்த்தார் மம்தா பானர்ஜி. தமது ரயில்வே அமைச்சகத்தில் 'மீடியா கார்னர்' என்று ஓர் அறை அமைத்தார். சும்மா இருப்பாரா பிரமோத் மஹாஜன்? நாடாளுமன்ற விவகாரத் துறை அமைச்சராயிற்றே! அதனால் நாடாளுமன்றத்துக்குள்ளேயே ஒரு மீடியா அறை உருவாக்கப்படும் என்றார். ஆனால், நாடாளுமன்ற விதிமுறைகள் குறுக்கே வர, வேறு வழியில்லாமல் ஒதுக்குப்புறமாக ஓர் இருட்டறையைத்தான் அவரால் ஒதுக்க முடிந்தது!

● பிரியங்கா, ராகுல் இருவருக்கும் இப்போது பதவிகள் ஏதும் இல்லை என்று காங்கிரஸின் செய்தித் தொடர்பாளர் அறிவித்ததற்கு என்ன காரணம்? யாரை அரசியலில் முன்னிறுத்துவது? மகனையா, மகளையா? இந்தக் குழப்பத்திலிருந்து இன்னும் சோனியா வெளி வராததே முக்கிய காரணம்.

## 'உளைப்புச் சங்கடங்களுக்கு இடை கொடுத்த பிரதமர்!

''பிரியங்காவுக்கு அரசியலில் ஒரு பெரும் பங்கு காத்துக் கிடக்கிறது!'' என்று மருமகன் ராபர்ட் வதேரா அறிக்கை வெளியிட்டதால், வந்த வினை இது. இந்திய மரபுப்படி மகனுக்கு முன்னுரிமை கொடுத்தால், மகளால் பிரச்னை வருமோ என்று சோனியா பயந்ததால்தான் 'இருவருமே இல்லை' என்று கட்சியின் செய்தித் தொடர்பாளரை விட்டு அறிக்கை தரச் சொல்லி விட்டார்.

● பி.ஜே.பி.யின் தலைவராக ஜனா. கிருஷ்ணமூர்த்தி வருவார் என்று ஒரு பேச்சு அடிபடுகிறது. கூடவே, அவரது பெயர் சில மாநிலங்களுக்கு நியமிக்கப் படவிருக்கும் கவர்னர்கள் பெயர்ப் பட்டியலிலும் இடம் பெற்றிருக்கிறது.

**— இந்திரப்ரஸ்தன்**




“ஜீன்ஸ் மாட்டிக் கொண்டு நவீனமாக, காலத்துக்கேற்றபடி வருகிறான் பொன்னியின் செல்வன்” என்று அறிமுக உரையில் பாலா பழனியப்பன் சொன்னபோது பயந்துதான் போனோம்.

பிற்காலச் சோழர் கால வரலாறையும் தமிழ்ப் பண்பாட்டின் தனியான உயர்வுகளையும் அக்கால வாழ்க்கை முறைகளையும் பின்னிப் பிணைத்து, கற்பனையால் அழகு செய்து அமரர் கல்கி எழுதிய புதினம் அல்லவா பொன்னியின் செல்வன்? அதை ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கிறேன் பேர்வழி என்று தமிழுணர்வைக் காவு கொடுத்து விட்டால் தமிழர்கள் மன்னிப்பார்களா!

ஆனால், தொழிலதிபர் கார்த்திக் நாராயணனின் மொழிபெயர்ப்புக்கு அன்றைய வெளியீட்டு விழா மேடையிலேயே தர முத்திரை கிடைத்து விட்டது. பாராட்டுரை வழங்கிய லலிதா காமேஸ்வரன், சிலம்பொலி செல்லப்பன், 'The First Flood's என்ற முதல் பாகத்தின் முதல் பிரதியைப் பெற்றுக் கொண்ட கல்கி ராஜேந்திரன் ஆகியோர் வழங்கிய ஐ.எஸ்.ஐ. முத்திரை மட்டுமல்ல... நூலை வெளியிட்ட முதல்வர் கலைஞரின் ஐ.எஸ்.ஓ. 9000 சான்றிதழும் கூட!

தொழிலதிபர் ஒருவர் இந்த இலக்கியப் பணிக்கு ஈர்க்கப்பட்டதே சுவாரஸ்யமான நிகழ்ச்சி. எம்.ஆர்.ஏ.ஆர். கல்விச் சங்கம் என்ற அறக்கட்டளை முருகப்பா குழுமத்தைச் சேர்ந்த குடும்ப உறுப்பினர்களின் முயற்சியில் தொடங்கப்பட்டு கல்விப் பணியும் இலக்கிய சேவையும் செய்து வருகிறது. இதன் அறங்காவலர்களும் மாக்மிலன் பதிப்பகத்தைச் சேர்ந்த எடிடர் மினி கிருஷ்ணன் குடும்பத்தினரும் ஒரு இனிய மாலைப் பொழுதில் கார்த்திக் நாராயணனின் இல்லத்தில் சந்தித்திருக்கிறார்கள். கல்கி ரசிகர் கார்த்திக் நாராயணன், பொன்னியின் செல்வனிலிருந்து வரி வரியாக ஒப்பித்து அதன் நயங்களை வியந்திருக்கிறார்.

மொழிபெயர்ப்பு நூல்களுக்கு நிதி உதவி செய்து வரும் எம்.ஆர் ஏ.ஆர் கல்விச் சங்கமும் அவற்றை வெளியிட்டு வரும் மாக்மிலன் இந்தியா நிறுவனமும் பொன்னியின் செல்வனை ஆங்கிலத்தில் மொழி பெயர்க்க கார்த்திக் நாராயணனே பொருத்தமான நபர் என்று முடிவு செய்து விட்டார்கள்.

முதல் பாகம் வண்ணமிகு விழாவில் நவம்பர் ஆறாம் தேதி மாலை, சென்னை கலைவாணர் அரங்கில் வெளியாயிற்று.

தீபாவளிக்கு முந்தைய தினம் என்பதையும் பொருட்படுத்தாமல் அரங்கை நிறைத்த கல்கி ரசிகர்களுக்கு, வாண வேடிக்கையைக் காட்டிலும் ரசமான சொல் விருந்து!

டாக்டர் லலிதா காமேசுவரன், தாம் மதுரை மருத்துவக் கல்லூரியில் மாணவர்களுக்கு மொழிபெயர்ப்பு முகாம் நடத்திய போது, ஒரு சிலர் செய்த விபரீத மொழிபெயர்ப்புகளை வேடிக்கையாக எடுத்துச் சொல்லி, கார்த்திக் நாராயணனின் பணி எவ்வளவு கடினமானது என்பதைப் புலப்படுத்தினார்.

சிலம்பொலி செல்லப்பன், கல்கியின் எழுத்தாற்றலை நயம்மிக்க மேற்கோள்களுடன் எடுத்துக்காட்டி விளக்க, கல்கி ராஜேந்திரன் மொழிபெயர்ப்பின் அவசியத்தையும் முக்கியத்துவத்தையும் எடுத்துச் சொன்னார் :

பெர்க்லி பல்கலைக்கழகத்தில் (அமெரிக்கா) தமிழ்த் துறையில் சிவகாமியின் சபதம் பாட நூலாக எடுத்துக் கொள்ளப்பட்டதையும், ஏன் சிவகாமியின் சபதத்தைத் தேர்ந்தெடுத்தீர்கள்? என்று கேட்ட போது, சிறப்பான தமிழ்நடை மட்டுமின்றி தமிழர் வரலாறு, தமிழர் பண்பாடு, கலைகள், வாழ்க்கை

என்று அத்தனையையும் உள்ளடக்கிய நூல் அது என்று அவர்கள் காரணம் சொன்னதையும் எடுத்துரைத்தார். அமரர் கல்கியின் சரித்திர நாவல்கள் இதன் காரணமாகவே தனிச் சிறப்புப் பெறுகின்றன என்றார். பொன்னியின் செல்வன் ஆங்கில மொழி பெயர்ப்பு நூலில் ஏ.வி. இளங்கோவன் பழைமையும் புதுமையும் கலந்த பாணியில் அமைந்த படங்களைப் பாராட்டி வாழ்த்தினார்.

விழாவின் சிகரம் முதல்வரின் உரைதான் :

"முரசொலி பொன்விழா மலருக்குத் தாம் கட்டுரை கேட்டபோது கல்கி ராஜேந்திரன் எழுதித் தரவில்லை; 'நேரமில்லை' என்று கூறிவிட்டார். அவரைப் பழிவாங்குவதற்காகவே கல்கி நூற்றாண்டு முழுவதும் அவர் அழைத்தபோதெல்லாம் வந்து விழாக்களில் பங்கேற்றேன். கல்கியின் நினைவைப் போற்றும் வகையில் பல பணிகள் நடக்கத் துணை நின்றேன்" என்று முதல்வர் ஆரம்பிக்கவும், அரங்கில் கரவொலியும் சிரிப்பொலியும் சேர்ந்து, வெளியே வெடித்துக் கொண்டிருந்த பட்டாசுகளைத் தோற்கடித்தன.

மலருக்குத் தெரியாத இந்த உண்மையோடு எல்லோருக்கும் தெரிந்த ஒரு விஷயத்தையும் ஒப்புதல் வாக்குமூலம் போல் வெளியிட்டார் முதல்வர் :

ஆழ்வார்க்கடியான் நம்பியும் வீர சைவரும் படகில் செல்லும்போது சண்டை போட்டு, படகே கவிழும் நிலைக்கு வந்து விடுகிறது. அச்சமயம் அவர்களைத் தடுத்து, இப்படிச் சண்டை போட்டுப் படகு கவிழ்ந்தால் நேரே மோக்ஷத்துக்குப் போய் விடலாம் என்று பார்க்கிறீர்களா? யார் யாருக்கு எந்த தெய்வத்திடம் ஈடுபாடோ, அந்த தெய்வத்தை வழிபட்டு விட்டுப் போங்கள் என்று வந்தியத்தேவன் சமாதானம் செய்விக்கிறான்.

இந்த வரிகள் இன்றைக்கும் அர்த்தமுள்ளதாக இருப்பதைச் சுட்டிக்காட்டிய முதல்வர், ஒரு படி மேலே சென்று, "கொள்ளிடத்தில் விழுந்தால் மோக்ஷத்துக்குப் போவீர்களோ இல்லையோ, நிச்சயமாக முதலையின் வயிற்றுக்குள் போவீர்கள்!'' என்று கூறிய படகோட்டியின் யதார்த்தத்தில் பகுத்தறிவு வாதம் பொதிந்திருப்பதாக எடுத்துச் சொல்லி,

"எனக்கு வேண்டியதை மட்டும் எடுத்துக் கொள்கிறேன்..." என்று ஒப்புதல் வாக்குமூலமும் அளித்தபோது, அவை மீண்டும் கலகலத்துப் போயிற்று!

உடல்நலக் குறைவினால் கிடைத்த ஓய்வில் பொன்னியின் செல்வன் முதல் பாகத்தை மீண்டும் படித்திருக்கிறார் முதல்வர். ஆனால், தமக்கு வேண்டியதை மட்டும் எடுத்துக் கொள்வதற்காக அல்ல! கார்த்திக் நாராயணனின் மொழிபெயர்ப்பை கவனமாகத் தமிழுடன் ஒப்புநோக்கி திருத்தி கொண்டிருக்கிறார். இதனை விழா மேடையிலேயே சொன்னவர், தமிழையும் ஆங்கிலத்தையும் மாற்றி மாற்றிப் படித்தும் காட்டினார்.

பள்ளிப்படை என்றால் என்ன என்பதை விவரிப்பதற்காக, கல்கி பிரதான கதையிலிருந்து விலகிச் சென்று நீண்டதொரு வீர வரலாற்றை (விஜயாலய சோழன்) சுவைபட விவரித்து, தமிழர் பண்பாட்டுப் பெருமையைப் பதிவுசெய்திருப்பதை உணர்ச்சிமேலிடச் சுட்டிக்காட்டினார்.

பொன்னியின் செல்வனில் இடம்பெறும் மதச் சண்டைகளும் அரசியல் சூழ்ச்சிகளும் அரசைக் கவிழ்க்கும் முயற்சிகளும் அவற்றை முறியடிக்க முயலும் ஒருசில பொதுநோக்காளர்களின் உயர்சிந்தனையும் இன்றைக்கும் நம் நாட்டில் காணப்படும் சூழ்நிலைதான். எதிர்கால தமிழகத்துக்காவது இந்தப் பொன்னியின் செல்வன் கதை பொருந்தி வராது என்கிற நிலை உருவாக வேண்டும் என்று முதல்வர் தமது ஏக்கத்தை வெளியிட்டபோது, அவை நெகிழ்ந்தது.

— சிறப்பு நிருபர்

## வேண்டியதை எடுத்துக் கொண்டார் முதல்வர்!

# ஆண்டவரே!



ஒரிஸ்ஸாவுக்குப் புயலும் இந்தியாவுக்கு போப்பாண்டவரும் வந்து போனதில், கொந்தளிப்பு அடங்குவது சாதாரண விஷயமாயில்லை. கடந்த ஆறாம் தேதி வெளியான இந்தியன் எக்ஸ்பிரஸ் நாளிதழில் போப்பாண்டவருக்கு ஒரு பகிரங்கக் கடிதம் எழுதியிருக்கிறார்கள், சிலர். 'தர்மரக்ஷண சம்மேளனம்' என்கிற பெயரில் கிருஷ்ணசுவாமி ரெட்டியார் முதல் சி.வி. நரசிம்மன் வரை, பத்மா சுப்ரமணியம் முதல் சிவசங்கரி வரை சுமார் 120 முக்கியப் பிரமுகர்கள் கையெழுத்திட்ட இந்த பகிரங்கக் கடிதத்தின் ஒரு வரி சாரம், 'போப் இந்தியாவில் மதமாற்றத்தைத் தூண்டக்



• சி. வி. நரசிம்மன்



• சிவசங்கரி



• தயானந்தன் பிரான்சிஸ்

கூடாது' என்பது. மதப்பிரசாரம் என்பது கிறிஸ்தவர்களின் தலையாய கடமை. மதம் மாறுவதும் மாறாததும் தனிநபர் விருப்பம் சார்ந்த உரிமை. இந்நிலையில் உலகம் வணங்கும் ஒரு மதகுருவுக்கு இப்படியொரு பகிரங்கக் கடிதத்துக்கான அவசியம் என்ன?

கடிதம் எழுதியவர்களுள் சிலரைக் கேட்டோம் :

**சி. வி. நரசிம்மன் (முன்னாள் சி.பி.ஐ., இயக்குநர்) :**

நாங்கள் போப்பாண்டவரையோ, அவரது இந்திய வருகையையோ எதிர்க்கவில்லை. பெரிய அளவில் 'பிஷப்'களின் கூட்டம் கூட்டி, ஆசிய அளவில் கிறிஸ்துவத்தைப் பரப்பி, வேரூன்றச் செய்வதான ஒரு 'organised attempt'ஐத்தான் எதிர்க்கிறோம். போப்பாண்டவரின் வருகை வெறும் மதப் பிரசாரத்துக்காக அல்ல.

நம் நாட்டின் மிகப் பெரிய பலம் நமது கலாசாரம். நமது மக்களின் ஒருங்கிணைப்பு என்பது கலை, கலாசார வேர்களில்தான் இருக்கிறது. அந்த வேர்களை அசைத்துப் பார்த்தால் சமூகக் கட்டுக்கோப்பே குலைந்து விடும்.

எத்தனை சமயங்கள் வந்தாலும் ஹிந்து சமயத்துக்குக் கேடு எதுவும் வரப் போவதில்லை என்பது உண்மை



• வலம்புரிஜான்

தான். ஆனாலும் வாழ்க்கைத் தரத்தில் முன்னேறாத, படிப்பறிவற்ற மக்களின் நம்பிக்கைகளில் மாற்றம் விளைவிக்க முனைந்தால் அது தேசத்தின் ஒற்றுமைக்கு இடையூறாகுமல்லவா?

**சிவசங்கரி :**

போப் பாண்டவர் நம் நாட்டுக்கு வருவதை வரவேற்க வேண்டியது நமது கடமை என்று நினைக்கிறேன். இது மதச் சார்பற்ற நாடு. பல கிறிஸ்தவர்கள் வாழும் இந்நாட்டில் அவரது வருகைக்குத் தடை விதிக்க வேண்டுமென்று சிலர் கோரியதையே தவறு என்று நினைப்பவள் நான்.

ஆனால், சில வருடங்கள் முன்பு நடந்த ஒரு பிஷப் மாநாட்டில், தென்கிழக்காசிய நாடுகள் முழுவதிலும் கிறிஸ்தவ மதத்தைப் பரப்பி முழுமையான மதமாற்றத்துக்கு வித்திடுவது என்று தீர்மானம் நிறைவேற்றப்பட்டதாகச் சொல்கிறார்கள். அதன் இறுதிக் கட்ட நடவடிக்கையே இப்போதைய போப் வருகை என்று இன்டர்நெட்டில் செய்தி கிடைத்ததாகவும் சொல்கிறார்கள்.

இந்த பிஷப்கள் மாநாட்டை நடத்த சைனாவும் கொரியாவும் மறுத்து விட்டதால்தான், போப் இங்கே வருகிறார் என்றால் அதை எப்படி ஏற்பது?

ஆதிநாட்களில் கிறிஸ்தவ மிஷன்கள் இங்கு பல சேவைகள் செய்திருக்கின்றன. பள்ளிகள், மருத்துவமனைகள் இல்லாத இடங்களில் அவற்றைக் கட்டிக் கொடுத்து, மக்களுக்கு ஏராளமாக உதவியிருப்பதாக அறிகிறேன். அப்படியே இருந்தாலும், அதன் மூலம் மதமாற்றம் செய்வதென்பது தவறுதான்!

மதம், மொழி, மண் – இவை மூன்றும் நம் உணர்வு பூர்வமான விஷயங்கள். Motivation என்பது ஆக்கபூர்வமான ஒரு விஷயத்துக்குத் தூண்டுதல். ஆனால் அதுவே provocation ஆக அமையக் கூடாதல்லவா? இத்தகைய மதமாற்ற முயற்சி, தனி மனித உணர்வுகளை அவமதிப்பதாகும்.

இஷ்டப்பட்டு மதம் மாறுபவர்களைப் பற்றி நாம் ஏதும் சொல்ல முடியாது. ஆனால், திட்டமிட்ட மதமாற்ற முயற்சியை யாராலும் ஏற்க முடியாது.

**எஸ்.வி. சேகர் :**

நம் மக்கள் மிகவும் உணர்ச்சிவசப்படுபவர்கள். ராஜீவ் காந்தி கொலை வழக்கில் தூக்குத் தண்டனை விதிக்கப்பட்டவர்களுக்குப் பரிந்து இலங்கையிலிருந்து இதுவரை ஒரு குரல் வரவில்லை

# ஆண்டவரே!


• எஸ். வி. சேகர்

ஆனால் நம்மவர்கள், தூக்குத் தண்டனையை ஆயுள் தண்டனையாக்கக் கோருகிறார்கள்.

இதை எதற்குச் சொல்கிறேனென்றால், நமக்கு 'இரக்கம்' ஜாஸ்தி. இப்படிப்பட்ட சென்ஸிடிவான மக்கள் மத்தியில் ஓர் அலை மாதிரி ஒரு புதிய கருத்துத் திணிப்பு நிகழுமேயானால் விளைவு விபரீதமாக இருக்கும்.

மதம் நமக்குத் தாய் – தந்தை மாதிரி. சில லாபங்கள் கிடைக்கிறதேயென்று மதம் மாறினால் பிறகு ஆயுள் முழுவதும் நிம்மதியற்ற மனநிலையுடன்தான் உழல வேண்டி வரும்.

இதையெல்லாம் யார் எடுத்துச் சொல்வது?

எல்லா மதங்களும் உயர்வானவைதான். அவரவர் விருப்பம் சார்ந்தே இவை இருக்க வேண்டும். திணிப்பு முயற்சி தவறு என்று நினைப்பதால்தான் நான் இதை எதிர்க்கிறேன். மற்றபடி போப்பாண்டவரை ஓர் இந்தியன் என்கிற முறையில் வரவேற்று கௌரவிப்பதில், சந்தோஷமே.

**இவ்விஷயத்தில் கிறிஸ்தவர்களின் பார்வை என்ன?**

**வலம்புரிஜான் :**

எஸ். வி. சேகருக்கும் ஒய். ஜி. மகேந்திராவுக்கும் விஷயம் புரியாதது பற்றி எனக்குக் கவலையில்லை. நீதிபதி கிருஷ்ணசாமி ரெட்டியாருக்குக் கூடப் புரியாததுதான் வியப்பளிக்கிறது.

இருபத்தைந்து வருடங்கள் முன்பு வாத்திக்கான் பொதுச் சங்கம் ஓர் அறிவிப்பை வெளியிட்டது. அதன் சாரம் : "எந்த மதம் மூலமும் இறைவனை அடையலாம்."

1400 வருடங்கள் முன்பு குர்-ஆனும் இதையே சொன்னது : "நீங்கள் முஸ்லீம்களாயினும் யூதர்களாயினும் கிறிஸ்தவர்களாயினும் சாபீன்களாயினும் ஒரே இறைவன் உண்டென்பதை விசுவாசித்து, நல்ல அமல்களைச் செய்து, தீர்ப்பு நாளை எதிர்நோக்கியிருந்தால் அல்லா உங்களை வெட்கமடையச் செய்ய மாட்டார்." (அல்பஹரா, 2வது சூரா)

இந்த மதங்களுக்கெல்லாம் மூத்ததான ஹிந்து மதமும் ஆறாயிரம் வருடங்கள் முன்பு இதையேதான் சொல்லியிருக்கிறது.

இயேசு சொன்னதென்ன? "உலகம் முழுவதும் என் நற்செய்தியைப் பரப்புங்கள்" என்பதுதான். இதைத்தான் தவறாகப் பார்க்கிறார்கள்.

மதமாற்றம், மதமாற்றம் என்கிறார்கள். இயேசு பெருமான் சொன்னது மதமாற்றம் அல்ல. அது, தருமத்தைப் பரப்புவது பற்றிய கட்டளை. மதமாற்றத்தை நானும்தான் எதிர்க்கிறேன். தருமத்துக்கு ஒரு நோக்கம் இருந்து விட்டால் அது தருமமாகாது. இயேசுவின் "நற்செய்தியைப் பரப்புங்கள்" என்கிற வாசகம் தருமமேயன்றி மதமாற்றத்தைக் குறிப்பதல்ல.

1947-ல் இந்தியா சுதந்திரம் அடைந்த போது இங்கிருந்த கிறிஸ்தவர்கள் மொத்தம் ஏழு சதவீதம் பேர்தான்.

ஐம்பது வருடங்களாகி விட்ட பின்பு இன்று புள்ளி விவரம் பார்த்தாலும் அதே ஏழு சதவீதம் பேர்தான். யார், யாரை மாற்றி விட முடியும்?

சீனா, போப்பாண்டவரை அனுமதிக்காதது பற்றிப் பேசுபவர்கள் சுலபமாக ஒரு விஷயத்தை மறந்து விடுகிறார்கள்.

சீனா ஒரு கம்யூனிஸ நாடு. கடவுள் மறுப்புக் கொள்கை கொண்டவர்கள், போப்பாண்டவரை மட்டுமல்ல; நமது சங்கராச்சாரியார் சென்றாலும் திருப்பி அனுப்பவே செய்வார்கள். இறுதியாக ஒரே ஒரு விஷயம். இயேசு பெருமான் தம் வாழ்நாளில் ஒரேயொருவரைக் கூட மதம் மாறச் செய்ய முயலவில்லை!

**அருட்திரு. தயானந்தன் பிரான்சிஸ்.**
**(செயலாளர், கிறிஸ்தவ இலக்கியச் சங்கம்):**

இங்கே மனமாற்றம் என்பதையும் மதமாற்றம் என்பதையும் போட்டுக் குழப்பிக் கொள்கிறார்கள். 'conversion' என்பது திணிப்பின் மூலம் இயலாது. அது இயல்பான அல்லது படிப்படியான மனமாற்றத்தைக் குறிப்பது.

பலாத்காரமாக, வலிந்து செய்யப்படும் திணிப்பு தவறானதே. போப் அத்தகைய காரியத்தைச் செய்வதில்லை.

நற்செய்தி பகிர்வுக்கும் திணிப்புக்கும் வேறுபாடு உண்டு.

என்னைக் கேட்டால், சமய உண்மைகளை அனைவரும் அறிந்து கொள்ள வேண்டும். சமய உணர்வுகள் மதிக்கப்பட வேண்டும். சமய உறவுகள் போற்றிப் பாதுகாக்கப்பட வேண்டும்.

சமய ஒருங்கிணைப்புக்கு அக்பர் செய்யாத சேவையா? எல்லா சமயங்களிலிருந்தும் நல்ல அம்சங்களைத் தொகுத்து தீன்-இலாஹி என்றொரு புதிய சமயத்தையே அவர் தோற்றுவித்தார்.

ஆனால் மத அடிப்படைவாதிகள் என்பார் எல்லா மதங்களிலும் இருப்பவர்கள். 'திணிப்பு' விஷயங்களைச் செய்ய முயல்வது சிறுபான்மையினரான அவர்கள்தான். ஆனால் அவர்களைப் பொருட்படுத்த வேண்டாம். அவர்களால் எதுவும் ஆக்கபூர்வமாகச் செய்ய இயலாது. சுருக்கமாகச் சொன்னால், மதத் திணிப்பு என்பது தவறானது. நான் அதை எதிர்க்கிறேன். ஆனால், இயேசுவின் நற்செய்தியைப் பகிர்ந்து கொள்வது மகிழ்ச்சிக்குரிய ஒன்றுதான்.

தொகுப்பு : **கிருஷ்ணன்**

# ஹலோ

இரகாம் பெல்லுக்கு முதல் மரியாதை செலுத்தி விட்டுப் படத்தை ஆரம்பிக்கிறார்கள். நிறையப் பொய்கள் சொல்வதற்கும் ஃபிராடு வேலைகளுக்கும் படம் முழுவதும் தொலைபேசியை உபயோகிப்பதால் உண்டான குற்ற உணர்ச்சி காரணமாயிருக்கக் கூடும்.

விளையாட்டாகச் சொல்லும் ஒரு சிறிய பொய், வாழ்க்கையில் என்னென்ன பிரச்னைகளை உண்டு பண்ணும்?

காதலிக்க யாராவதொரு பெண் கிடைப்பாளா என்று தேடுவதை முழுநேரப் பணியாகவும் ஒரு 'பொக்கே' கடையில் வேலை பார்ப்பதைப் பகுதி நேரப் பணியாகவும் கொண்ட பிரசாந்த், கோயிலில் தென்படும் யாரோ ஒரு பெண்ணை, 'இவள்தான் என் காதலி' என்று நண்பர்களிடம் அளந்து விட, பிறகு நேரும் விபரீத விளைவுகளைத் தமாஷாகக் கையாள்வதற்குத் தோதாகப் படம் நிறைய நகைச்சுவை நடிகர்கள்.

மணிவண்ணன் ஏன் அப்படி பாஷையை ஆட்டுரலில் இட்டு அரைத்துப் பேசுகிறார் என்று புரியாவிட்டாலும் அவர் தோன்றும்போதெல்லாம் சிரிக்க வேண்டிய நிர்ப்பந்தத்தை ஏற்படுத்துவது, திரைக்கதையின் வெற்றி.

தொட்டதற்கெல்லாம், 'உன் காதலியைக் கூப்பிடு' என்று நண்பர்கள் சார்லியும் வையாபுரியும் படுத்த, பிரசாந்த் தம் கடை முதலாளி மணிவண்ணனைத் தொலைபேசியில் கூப்பிட்டுக் காதலாகப் பேச, அவர் விவரம் புரியாமல் கொதித்துப் போய்க் கத்த, விளைவாக, தீபாவளி ரிலீஸில் தியேட்டரில் சரவெடி.

கதாநாயகி ப்ரீத்தியைவிட, தோழியாக வரும் அந்த கண்ணாடி போட்ட முன்னாள் குழந்தை சுஜிதா சுலபமாக மனத்தில் ஒட்டிக் கொள்கிறார். அலட்டாத, ஆர்ப்பாட்டமில்லாத, எளிய நடிப்பில், இன்னொரு ரேவதி.

ப்ரீத்தியின் முழுப் பெயர் ப்ரீத்தி ஜாங்கிரியோ, ப்ரீத்தி குலோப் ஜாமூனோ. அந்தச் சிரிப்பும் வசனமில்லாமல் இருக்கும் போது தென்படும் முகபாவமும் பெயர் சரிதான் என்கின்றன. ஆனால் இத்தனை சர்க்கரையாக இருக்கும் ஒரு நாயகியைத் தமிழ் ரசிகப் பெருமக்கள் எப்படி ஏற்றுக் கொள்வார்கள்? பாடல் காட்சிகளில் கூட (என்ன ரம்யமான லொகேஷன்கள்!) ப்ரசாந்த் கதாநாயகியைத் தூக்கி ஒரு சுற்றுச் சுற்றாத கண்ணியத்துக்காக இயக்குநருக்கு ஒரு பிரத்தியேக சபாஷ்.



பழைய வில்லன் ரஞ்சித்தை ஞாபகமிருக்கிறதா? இதில் அவர் கதாநாயகியின் பொறுப்புள்ள அண்ணனாக வருகிறார். அதென்ன படத்தில் 'பொறுப்புள்ள'வர்களுக்கெல்லாம் ஒரு மூக்குக் கண்ணாடி என்று தெரியவில்லை.

படத்தில் சிரிப்பே இல்லாதவரும் சிரிப்பு மூட்டாதவரும் பிரசாந்த் மட்டும்தான். தன் ஒரு பொய் படுத்துகிற பாட்டை எண்ணிக் குமுறுவதும் வருந்தி வருந்தி சோகத் திருவிழா கொண்டாடுவதுமாக, ஆம்பளை கமலா காமேஷாக வெளுத்து வாங்குகிறார்.

முன்பாதியின் ஜவ்வடிக்கும் நீளமும் தேவாவின் ஃபில்டர் காப்பி இசையும் ஊதினால் உதிர்ந்துவிடும் கதைக் கருவும் படத்தின் பிரதானக் குறைகள். போரடிக்காத நகைச்சுவை இவற்றை மறக்கச் செய்து விடுவதால், இயக்குநரான செல்வபாரதி இரண்டாவது முறையும் பாஸ் பண்ணியிருப்பதைக் குறிப்பிட்டாக வேண்டியிருக்கிறது.

— ஔரங்கசீப்

# சமதா, ஒருமா, சமத்துவம்!

தலைப்பைப் படித்து விட்டு இது ஏதோ அரசியல் கட்சிகளின் பெயர்கள் என்று எண்ணிவிடாதீர்கள். கேரளா-தமிழ்நாடு எல்லையோர கிராமமான வாளையார் பகுதியில் (கோவை-பாலக்காடு சாலை) புதுச்சேரி பஞ்சாயத்துக்குட்பட்ட கிராமப் பெண்களிடம் இந்தப் பெயர்கள் பிரபலம்.

அப்படியென்ன பிரபலம்? பெண்களால் பெண்களுக்கெனவே நடத்தப்படும் அமைப்பின் பெயர்கள் தான் இவை. குடும்பத்தில் ஒருவருக்கு உடல் நிலை சரியில்லையா? மருத்துவச் செலவுக்கு வழியில்லையா? பள்ளியில் சேர்க்க, பிள்ளைக்கு நோட்டுப் புத்தகம் வாங்கக் காசில்லையா? வரதட்சணை கேட்டு கணவன் வீட்டார் பெண் வீட்டாரைத் துன்புறுத்துகின்றனரா? புருஷன் குடித்துவிட்டு வந்து பொறுப்பில்லாமல் மனைவி மக்களை துவம்சிக்கிறானா? இதற்கெல்லாம் தீர்வு காண்பதற்காகப் பெண்களே ஒன்றிணைந்து உருவாக்கியுள்ள அமைப்புகள்தான் இவை. இதுவரை சமதா, ஒருமா, சமத்துவம் உள்ளடக்கி மொத்தம் ஒன்பது ஊர்களில் ஒன்பது சங்கங்களை ஆரம்பித்திருக்கின்றனர் இப்பெண்கள்.

வாரம்தோறும் ஞாயிற்றுக் கிழமைகளில் சங்க உறுப்பினர்கள் வீட்டில் (வாரம் ஒருவர் வீடு என முறைவைத்து) கூடி விடுகின்றனர். அவர்களில் பதினாறு வயதிலிருந்து அறுபது வயதிற்கு மேற்பட்டவர்களும் இருப்பார்கள்! அப்படிக் கூடி என்ன செய்கிறார்கள்? அவரவர் கஷ்டங்களை, தேவைகளை, தமக்குத் தாமே பூர்த்தி செய்து கொள்கிற வழிவகைகளை ஆய்ந்தாய்ந்து தீர்வுகளுக்கு இட்டுச் செல்கிறார்கள். எப்படி? இதனை உருவாக்கிய 'சமதா' தலைவர் மல்லிகா மாணிக்கமே பேசுகிறார் கேளுங்கள்:

"இங்கே 'அகில இந்திய மகிளா சங்கம்' என்று பெண்களுக்கு ஒரு சங்கம் உண்டு. அது தேசிய அளவிலான சமூகப் பிரச்னைகளையே கையில் எடுத்தது. உள்ளூர்ப் பிரச்னைகள் இங்கே கொட்டிக் கிடக்கிற நிலையில், அதற்கென ஒரு அமைப்பை உருவாக்கத் தீர்மானித்தோம். சமத்துவம் நிலவ, ஜாதிப் பாகுபாடற்ற பெண்களுக்கான உரிமைகளை நிலை நிறுத்தும் குறிக்கோளுடன் துவங்கப்பட்டது. பிறகு சங்க உறுப்பினர்கள் பெயரில் வாரம் பத்து ரூபாய் சேமிப்பும் துவங்கினோம். அதை சங்கப் பெயரில் வங்கியில் 'டெபாசிட்' செய்து, எங்களுக்குள்ளேயே 'லோன்' கொடுத்துக் கொள்கிறோம். இதன் மூலம் இங்கே இருக்கிற ஃபைனான்ஸ், மீட்டர் வட்டிக்காரர்களெல்லாம் கணிசமாக ஒழிந்திருக்கின்றனர்!"

கடனை யாருக்கும் கண்ணை மூடிக் கொண்டு கொடுத்து விடுவதில்லை. அவர்கள் வீட்டில், அவர்கள் குறிப்பிடுகிற கஷ்டம் உள்ளபடியே இருக்கிறதா என்பதை இவர்கள் நேரில் பார்த்தே கடன் (வங்கி வட்டிக்கு) கொடுக்கிறார்கள். இரவு



• திருமதி சகுந்தலா





• திருமதி மல்லிகா

நேரங்களில் அவசர உதவி என்றால்...? யாருக்காவது உடம்பு முடியவில்லையென்றால்? பக்கத்தில் உள்ள உறுப்பினர் உடனடியாக ஓடி வந்து உதவுகிறார்.

"கல்யாணி என்கிற பெண்ணுக்கு (வயது 55) வாயில் கேன்ஸர் வந்து விட்டது. ஒரு மாதத்திற்கும் மேல் படுத்த படுக்கையில் இருந்தார். பொறுப்பற்ற மகன். வாழா வெட்டியாய் ஒரு பெண். வேறு வகையில்லாத இந்தப் பகுதி ஏழைப் பெண்ணான அவருக்கு நாங்கள் ஏழெட்டுப் பேர் இப்பகுதியிலிருந்து சேர்ந்து வீடுவீடாய்ச் சென்று உதவி கோரினோம். ஓரளவுக்கு வசூல் ஆனது. உடனடியாக அதை வைத்து 'கேன்ஸர் ரிஸர்ச் சென்டர் புதுச்சேரி'யில் (கேரளா) காண்பித்து, பிறகு கோவை மருத்துவக் கல்லூரி மருத்துவ மனையில் ட்ரீட்மெண்ட் எடுத்துக் காப்பாற்றினோம். எங்களுடன் வந்த பெண்களைப் பார்த்து- எங்களின் ஒற்றுமையைக் கண்டு வியந்து அரசு ஆஸ்பத்திரி மருத்துவர்களே அக்கறையாய் ட்ரீட்மெண்ட் எடுத்தார்கள்; மாவட்டக் கலெக்டரே எங்களுக்குப் பரிந்துரைத்தார் என்றால் பாருங்களேன்!" என்றார் 'ஒருமா' செயலாளர் சகுந்தலா.

"அதன் பின்புதான் எங்களுக்குள் இந்த விழிப்புணர்வே வந்தது. ஊருக்கு ஒரு சங்கம் ஆரம்பித்தால் என்ன என்று. அப்படியே ஆரம்பித்தோம். இப்போதும்கூட இந்த சமதா, ஒருமா உட்பட சகலமும் மருத்துவ உதவிக்கே முதலிடம் கொடுக்கின்றன. அடுத்தது பெண்களுக்கான படிப்பு. பிறகு வரதட்சணை போன்ற சமூகக் கொடுமைகளை எதிர்ப்பது. பஞ்சாயத்து வைத்து சரிப்படுத்துவது. முடியாத விஷயங்களுக்கு போலீஸ் ஸ்டேஷன் போவது. இப்போது சுகாதாரத் துறை மூலமாக சுகாதாரம் குறித்த முகாம் நடத்தப் போகிறோம். வீட்டுக்கு ஒரு மூலிகைச் செடி வளர்ப்பது என்கிற திட்டத்திலும் இறங்கியுள்ளோம்."

இந்த ஒன்பது அமைப்பு மட்டுமல்ல. இந்த வருடத்திற்குள் மாவட்டம் முழுக்க (பாலக்காடு) அந்தந்தப் பகுதிகளில் உள்ள பெண்களைச் சேர்த்து புதிய அமைப்புகளை உருவாக்குவதிலும் அவர்களுக்கு வேலை வாய்ப்புகளை உருவாக்குவதிலும் அதிக கவனம் செலுத்தி வருகின்றனர்.

"தொழில் இல்லாதவங்களுக்குத் தொழில் வாய்ப்பு ஏற்படுத்துவது இப்போது எங்கள் முன் இருக்கும் பிரதான நோக்கம். வங்கியில் நாங்கள் சேமிக்கும் சேமிப்புத் தொகையின் பேரில் கேரள அரசு சுலபமாகத் தொழில் துவங்கக் கடன் தருகிறது. அவர்கள் பணமாகத் தராமல் மெஷினாகத் தருவது எங்களுக்கு இன்னொரு வசதி. யாரும் ஏமாற்றி விட மாட்டார்கள். அமைப்பின் பெயரில் முதன் முதலா மாவு பொடிக்கிற மிஷின் வாங்கிப் பத்துப் பேருக்கு வேலை ஏற்படுத்தலாம்னு இருக்கோம். அதன் பிறகு இதேபோல பல தொழில்கள் துவங்கவும் திட்டம் செய்துள்ளோம். பணம் போடுவது, லோன் கொடுப்பது, லோன் வாங்கித் தொழில் ஆரம்பிப்பது மட்டுமே எங்கள் நோக்கம் அல்ல. நாட்டிலும், உலகத்திலும் என்ன நடக்கிறது என்றே கிராமப் பெண்களுக்குத் தெரிவதில்லை. அதை நிவர்த்தி செய்கிறோம். நாட்டில் நல்லது நடந்தால் அதனை எடுத்துக் கொள்கிறோம். கெட்டது தெரிந்தால் எதிர்க்கிறோம்! அலசி ஆராய்கிறோம். நம் பகுதிப் பெண்களுக்கு அது போன்ற பாதிப்பு வராமல் பாதுகாப்பு வளையங்களை உருவாக்கிக் கொள்கிறோம்!" என்கிறார்கள்!

• ஒன்று சேரும் பெண்கள்...

கட்டுரை,
படங்கள்:
**கேயெஸ்வி**

அவரை மருத்துவமனைக்குள் அலாக்காகத் தூக்கி வந்து படுக்கையில் கிடத்தியது தான் தாமதம்! அனைவரும் முகஞ்சுளித்து ஒதுங்கி விட்டனர். மருத்துவமனையில் இருக்கும் மற்ற நோயாளிகள், வந்திருந்த பார்வையாளர்கள், அவ்வளவு ஏன்? அங்கு பணிபுரியும் செவிலியர்கள் கூட விழி அசைவுகளால் வினாக்கணை தொடுத்து நின்றனர். டாக்டர் மாதவிதான் விடாப்பிடியாய், "இவரும் நம்மைப் போல ஒரு மனிதர் தான். இவருக்கு சிகிச்சையளிக்க நாமே மறுத்து விட்டால் வேறு யார்தான் இவரைக் காப்பது?" என்று கேட்டிருக்கிறார். மருத்துவரின் கருணைமிகுந்த இந்தக் கேள்வியால் அனைவரும் கொஞ்சம் கொஞ்சமாய் அந்த நோயாளியைத் தங்களுடன் ஏற்றுக் கொண்டு விட்டனர்.

அவர் ஒரு தொழுநோயாளி. இன்று நேற்றல்ல... பல வருடங்களாக அதன் ஆக்ரமிப்பினால் அவதிப்பட்டுக் கொண்டிருப்பவர். போதாக்குறைக்கு சர்க்கரை நோய் வேறு. சென்னையில் உள்ள குடும்ப நலத்துறை அலுவலகத்தில் உதவி இயக்குனர் பதவி வரை பணியாற்றி விட்டு ஓய்வு பெற்றவர். வயது 67.

தொழுநோயாளிக்கே உரித்தான நரம்பு மண்டல நோயினால் பாதிக்கப்பட்டிருக்கிறார் அவர். இதனால் அவரது வலது உள்ளங்காலின் மேற்பகுதியில் கட்டை விரலுக்குக் கீழே ஆறாத புண் trophic ulcer ஒன்று ஏற்பட்டிருக்கிறது. இது நாளடைவில் புரையோடி, சர்க்கரை நோயின் உபயத்தால் புண் அதிகரித்து, சீழ் வைத்து, அவரது வலது காலை ரொம்பவே பாதித்து விட்டது.

புதுக்கோட்டையில் ஒரு தனியார் மருத்துவமனையில் சிகிச்சை பெற்றபோது இறுதியில் அந்த டாக்டர்கள் அவரது வலது காலை எடுத்து விடுவதைத் தவிர வேறு வழியில்லை என்று கூறி விட்டனர். இதைக் கேட்ட அவரது ஒரே மகனுக்கு அதிர்ச்சியாகி விட்டது. தமது தந்தையை, திருச்சியில், கஸ்ருதா மருத்துவமனையின் டாக்டர் எஸ். வெங்கடேசனிடம் கொண்டு வந்து சேர்த்து விட்டார்.

வலது கால் புண்ணைச் சுத்தம் செய்ய நெரும்பொழுது தூக்கியடிக்கும் துர்வாடை... பல்வேறு அறுவை சிகிச்சை நோயாளிகளுக்குப் பணிவிடை செய்து பழகிப் போன செவிலியர்களே அருவருப்பு அடையவும், ஆரம்ப தினங்களில் டாக்டர் எஸ். வெங்கடேசனே புண்ணைச் சுத்தம் செய்து மருந்து போட்டிருக்கிறார்.

அந்தப் புண்ணிற்குத் தக்க மருந்துகளும், உடலில் இருக்கும் சர்க்கரையைக் கட்டுப்படுத்த சிகிச்சையும் அளிக்கப்பட்டன. பதினைந்து நாட்கள் தொடர்ந்த சிகிச்சையின் பலனாய் உள்ளங்கால் புண் ஆறியது. வலது காலின் மேற்புறம் பரவியிருந்த புண்ணின் சீழ், வெளியேற்றப்பட்டு மருந்துகளின் உதவியால் புண் முற்றிலுமாக ஆற்றப்பட்டு விட்டது.

அப்பொழுதுதான் அந்த விபரீதம் நேர்ந்தது.

புண்கள் எல்லாம் புஸ்வாணமாகிப் போனாலும் புண்கள் இருந்த இடத்தில் திசுக்கள் வளர்ச்சி பெற்ற பின் அதற்கு ஆடையாகப் போர்த்திக் கொள்ளும் தோல் வளர்ச்சி பெற முடியாத அளவுக்கு இருந்தது.

தீக்காயம் பட்டோ, சாலை விபத்துக்


• டாக்டர் வெங்கடேசன்

# திருச்சியில் ஒரு மருத்துவ சாதனை!



* டாக்டர் மாதவி வெங்கடேசன்

களின்போதோ நமது உடலில் ஏற்படும் தோல் இழப்பை ஈடு செய்ய உடலின் வேறு பாகத்திலிருந்து தோல் எடுத்து வைத்துப் பொருத்தி வளர்ப்பது ஒருமுறை. இந்த முறை skin graft என அழைக்கப்படுகின்றது.

ஆனால், இந் நோயாளிக்கு அந்த முறை எந்த வகையிலும் சாத்தியமில்லாதது. அடிப்படையில் தொழுநோயாளியான அவரது தேகம் முழுவதும் தேடிப் பார்த்தாலும் skin graft செய்வதற்கான ஆரோக்கியமான தோல் கிடைக்காத நிலை.

இதனால் மனம் தளர்ந்து போய் விடவில்லை, டாக்டர் எஸ். வெங்கடேசனும், டாக்டர் மாதவி வெங்கடேசனும். மேலை நாடுகளில், அதிகமான தீப்புண்களால் பாதிக்கப்பட்டவர்களுக்கு வெள்ளைப் பன்றியின் தோலை வைத்து டிரஸ்ஸிங் செய்து விடுகிறார்கள். பன்றித் தோலில் உள்ள புரோட்டீனும், கொலாஜினும் புண்கள் ஆறுவதற்கு உறுதுணையாக இருந்து செயல்படுகின்றன. வெவ்வேறு வகை அளவுகளில் பக்குவப்படுத்தப்பட்ட வெள்ளைப் பன்றித் தோல் ரெடிமேடாக porcine graft என்கிற பெயரில் வெளிநாடுகளில் கிடைக்கின்றன. இந்த நோயாளிக்கும் அந்த முறையைக் கையாண்டால் என்ன?

இந்தியாவின் முக்கிய நகரங்களில் இருக்கும் மிகப் பெரிய மருத்துவமனைகள், மருத்துவக் கழகங்களுடன் தொடர்பு கொண்டு, 'வெள்ளைப் பன்றித் தோல்' குறித்து விவரம் கேட்டிருக்கிறார் டாக்டர் வெங்கடேசன். எங்கும் கிடைக்கவில்லை. அந்த மருத்துவ முறையும் இந்தியாவில் இதுவரை எங்கும் நடைமுறைப்படுத்தப்படவில்லை என்கிற தகவலும் அவருக்குக் கிடைத்தது. அதுவே அவருக்குப் புதிய

சாதனை செய்வதற்கான தூண்டுகோலா காவும் அமைந்து விட்டது.

திருச்சி, ஜோசப் கல்லூரி நிர்வாகத்திட மிருந்து, உண்மையைச் சொல்லி மூன்று மாத வெள்ளைப் பன்றிக் குட்டியை 'திருப்பித் தரும்' உத்தரவாதத்துடன் மருத்துவமனைக் குக் கொண்டு வந்தார்கள். அந்தப் பன்றியின் எடையைப் போட்டு தெரிந்து கொண்டு அதன் எடைக்கேற்ப அந்தப் பன்றிக் குட் டிக்கு மயக்க மருந்து கொடுத்து அதன் முதுகிலிருந்து தேவையான தோலை எடுத்துப் பதப்படுத்தி, மூன்று பாகங்களாகப் பிரித்து நுண்துளைகளிட்டனர். அதே நேரத்தில் ஆபரேஷன் தியேட்டரில் இருக் கும் நோயாளியின் காலில் மேற்புறத்தில் முண்டும் முடிச்சுகளுமாய் இருந்த திசுக் களைச் சமன் செய்து, தயாராக வைத்திருந்த வெள்ளைப் பன்றித் தோலை அதன் மீது சீராக விரித்து வைத்துப் பொருத்தி விட்ட னர்!

பன்றித் தோல் பொருத்தப்பட்ட அந்த வலது கால் அசைந்திடாதவண்ணம் கட்டுப் போட்டு விட்டார்கள். சரியாக ஐந்து நாட் கள் கழித்து கட்டை அவிழ்த்துப் பார்த் தார்கள். பன்றியின் தோல் அவரது வலது காலின் தோலோடு தோலாய் இணைந்து ஒட்டி உறவாட ஆரம்பித்திருந்தது. தொடர்ந்து அளித்த சிகிச்சையினால் அறுவைச் சிகிச்சையின் மூலமாகப் பொருத் தப்பட்ட வெள்ளைப் பன்றித் தோல் நாளாக நாளாக அந் நோயாளியுடைய தோலின் நிறத்துக்கு மாறி வந்து விட்டது.

ஏழாம் நாள் அவர் படுக்கையிலிருந்து எழுந்து அங்குமிங்குமாய் நடக்க ஆரம்பித்து விட்டார். அவ்வப்பொழுது பரிசோதனைக் காக மருத்துவமனைக்கு ஆட்டோவில் வந்து போகும் அவர், யார் துணையுமின்றி தனி யாக இப்போது நடக்கிறார்.

"Skin graft என்னும் இம்முறையில் வெள்ளைப் பன்றியிடமிருந்து தோல் எடுக்கப்பட்டு ஒரு மனிதனுக்குப் பொருத் தப்பட்டிருப்பது இந்தியாவில் இதுவே முதல் முறை" என்கிறார் டாக்டர் எஸ். வெங்க டேசன்.

**"சு**ஸ்ருதாங்கறது உங்களோட பையன் பேருங்களா டாக்டர்?"

"இல்லைங்க!"

"உங்களோட பொண்ணோட பேருங் களா?"

"அதுவும் இல்லைங்க!"

"ப்ச்ச்... அப்படின்னா உங்களோட முன் னோர்கள்ல..."

"அதுவும் இல்லைங்க! நம்முடைய முன்னோர்கள்ல ஒருத்தரோட பேருங்க அது!"

"அது யாருங்க நம்முடைய முன்னோர்?"

"சுமார் ஆயிரத்து ஐந்நூறு ஆண்டு களுக்கு முன்னால நம்ம தேசத்துல வாழ்ந்த வர்தான் சுஸ்ருதா. அவர் மிகச் சிறந்த அறுவைச் சிகிச்சை நிபுணர். அப்ப எல்லாம் போரில் ஈடுபட்டு கை, கால் உடைஞ்சி, காது கிழிஞ்சி, மூக்கு அறுபட்டு வர்ற வீரர்களுக் கெல்லாம் தன்னோட நுண்ணறிவால அற் புதமா சிகிச்சை தந்து அந்தக் காலத்துலயே மருத்துவத்துல மகத்தான சாதனைகள் பல செய்தவர் அவர். அதனாலதான் என்னோட மருத்துவமனைக்கு 'சுஸ்ருதா நர்ஸிங் ஹோம்'ன்னு பேர் வெச்சிருக்கேன்" என்று புதிரை விடுவிக்கிறார் டாக்டர் எஸ். வெங்க டேசன்.

பொது அறுவை சிகிச்சை நிபுணர் டாக்டர் எஸ். வெங்கடேசன். அவரது திருமதியும் ஒரு மருத்துவர். சமீபத்தில் ஒரு மகத்தான சாதனை செய்திட தூண்டு தலாகவும் உற்றதுணையாகவும் இருந்து பக்கபலமாகச் செயல்பட்டிருக்கிறார் அவர். அதில் வெற்றியும் கண்டிருக்கின்றனர், டாக்டர் எஸ். வெங்கடேசன் - டாக்டர் மாதவி தம்பதியினர்.

— ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு



"டாக்டர் எனக்கு சமையல் செய்வது போல அடிக்கடி கனவு வருது."

"கையைக் கொடுங்க, அட் வான்ஸ் திருமண வாழ்த்துக்கள்!"

– ஜெ. கண்ணன்

# ராமனின் வலதுகை கிருஷ்ணன்!

காரிய மாணிக்கம் ஸ்ரீநிவாஸ கிருஷ்ணன் என்றால் புரியுமா? சுருக்கமாக கே.எஸ். கிருஷ்ணன் என்றால்கூட அநேகம் பேருக்குத் தெரிந்திருக்காது. தமிழகம் மறந்து விட்ட இந்த ஒப்பற்ற அறிவியல் மேதைக்குக் கொஞ்ச நாள் முன்பு நூற்றாண்டு விழா கூட முடிந்து போனது. பண்டிதர் நேருவால் 'நாட்டின் தலை சிறந்த குடிமகன்' என்று வர்ணிக்கப்பட்ட இந்த இயற்பியல் மேதை, சர். சி.வி. ராமனின் வலது கை போல இருந்தவர். 1928ல் 'ராமன் விளைவு'க்கு நோபல் பரிசு கிடைத்ததென்றால், அதற்காக சி.வி. ராமன் சிந்திய வியர்வையில் கே.எஸ். கிருஷ்ணனின் வியர்வையும் கலந்தே இருந்தது.

டாக்டர் கிருஷ்ணன் விருதுநகர் வத்திராயிருப்பில் 1898ல் பிறந்தவர். தந்தை ஒரு விவசாயி. ஆனாலும் தமிழிலும் வடமொழியிலும் நல்ல புலமை உள்ளவர். தந்தையிடம் மொழிப் பயிற்சி, ஒரு திண்ணைப் பள்ளியில் பிற பாடங்கள் என்று கல்வியைத் தொடங்கிய கிருஷ்ணனுக்கு இயற்பியலில் மிகுந்த ஈடுபாடு இருந்தது. தாம்பரம் கிறித்துவக் கல்லூரியில் இயற்பியலில் பட்டம் பெற்று, 'ஒளி' பற்றியும் மாலிகுலர் பிஸிக்ஸிலும் ஆய்வு செய்ய கல்கத்தா சென்றார்.

கல்கத்தாவில் என்ன விசேஷம்?

அங்குதான் சி.வி. ராமன் இயற்பியல் பேராசிரியராகப் பணியாற்றி வந்தார்.

ராமனை நெறியாளராகக் கொண்டு தம் மேல்படிப்பை முடிக்க விரும்பி கல்கத்தா சென்ற கிருஷ்ணன், ராமனின் ஆய்வுகளுக்கு உதவுவதற்காகத் தம் படிப்பையே பாதியில் விட்டு விட்டார்.

சென்னைப் பல்கலைக் கழகம் 1925ல் கிருஷ்ணனுக்கு முதுகலை அறிவியல் பட்டத்தைக் கொடுத்தது. 1928ல் டாக்டர் பட்டமும் தேடி வந்தது.

29ல் டாக்கா பல்கலைக் கழகத்தில் பேராசிரியரானார் கிருஷ்ணன். படிகங்களின் வடிவமைப்பு குறித்துத் தீவிரமாக ஆராய்ந்தார். அவர் வெளியிட்ட சில ஆய்வுக் குறிப்புகள்தான் 'படிக காந்தவியல்' என்னும் புதிய துறைக்கு முன்னோடியாக விளங்கின.

1933ல் ராமன் பெங்களூரில் இந்திய அறிவியல் கழகத்தின் தலைவரானதும் கல்கத்தாவில் ராமன் மேற்கொண்டிருந்த பொறுப்புகளைக் கிருஷ்ணனிடம் தந்து விட்டார்கள்.

அங்கும் படிக காந்தவியல் ஆய்வுகளைத் தொடர்ந்தார் கிருஷ்ணன். உலக அளவில் புகழ் பெற்ற அறிவியல் இதழ்களில் அவரது கட்டுரைகள் இடம் பெற்றன.

இந்திய விடுதலைக்குப் பின் புதுதில்லி இயற்பியல் ஆய்வு மையத்தின் இயக்குநரான கிருஷ்ணன், டாக்டர் எஸ்.கே. ராயுடன் இணைந்து தம் இயற்பியல் ஆய்வுகளைத் தொடர்ந்தார்.

தேசமே பாராட்டும் இம் மேதையை ஞாபகப்படுத்த இன்றிருக்கும் ஒரே விஷயம்– புது தில்லியில் தேசிய விஞ்ஞான ஆய்வுக்கூடம் அமைந்துள்ள சாலை. அதன் பெயர் கே.எஸ். கிருஷ்ணன் மார்க்.

**— விழுப்பனூர் கண்ணன்**

# போட்டிக்கதை - 13

அது அப்பத்தாவின் குரல் போலத் தான் இருந்தது.

"கொய்யாப் பழம்..."

அந்தக் குரல் ரொம்பவும் நடுங்கி ஒலித்தது. பள்ளிக் கூடத்திற்கு வெளியே கூவிக் கொண்டிருந்தது.

"கொய்யாப் பழம்..."

சரவணன் குரலை உற்றுக் கேட்டான். பழக்கமான அந்தக் குரலின் அடையாளம் தெளிவாகிவிட்டது. அப்பத்தாவின் குரலேதான். ரொம்ப நாட்களுக்கு அப்புறம் அப்பத்தாவின் குரலைக் கேட்கிறான். ஒண்ணாம் வகுப்பு படிக்கிற போது அப்பத்தாவைப் பார்த்தது. இப்போது சரவணன் இரண்டாம் வகுப்பு படிக்கிறான்.

குழந்தைகளின் சத்தம் அதிகமாகிக் கொண்டே போனது. வாத்தியார் டேபிளை பலமாகத் தட்டினார்.

"உஷ்... என்ன சத்தம்?" என்று அதட்டி விட்டு பிரம்பைக் கையில் எடுத்துக் கொண்டு எழுந்ததும் மாணவர்களின் சத்தம் மெதுவாக ஓய்ந்தது.

"கண்ணு... கொய்யாப் பழம்.."

அப்பத்தாதான். வெளியே கொய்யாப் பழம் விற்கிறாள். இன்றைக்கு அப்பத்தாவைப் பார்க்கலாம் என்று சந்தோஷப்பட்டுக் கொண்டான். சீக்கிரம் இண்டர்வெல் விட்டால் தேவலை.

"கவனி... கூட்டல் வாய்பாடு சொல்றேன். எல்லாரும் கூடவே சொல்லணும். சொல்லுங்க பார்க்கலாம்."

வாத்தியார் வகுப்பு மத்தியில் வந்து நின்று கொண்டு சொல்லத் துவங்கினார்.

"ஒண்ணும் ஒண்ணும் ரெண்டு."

"ஒண்ணும் ஒண்ணும் ரெண்டு."

மாணவர்களின் குரல்கள் பின் தொடர்ந்தன. சரவணன் அப்பத்தாவின் குரல் கேட்கிறதா என்று காதுகளைக் கூர்மையாக்கிக் கொண்டான். அவன் ஜன்னலோரமாய் உட்கார்ந்திருந்தான். இலவம் பஞ்சு மரத்தின் கிளை ஜன்னலைத் தொட்டுக் கொண்டிருந்தது.

"நாலும் ஒண்ணும் அஞ்சு."

"நாலும் ஒண்ணும் அஞ்சு."

இண்டர்வெல் விடுவதற்குள் அப்பத்தா போய்விடுவாளா? போகக் கூடாது. இன்றைக்கு அப்பத்தாவைப் பார்த்துவிட வேண்டுமென்று எல்லா சாமிகளையும் வேண்டிக் கொண்டான்.

அப்பத்தா பாவம் என்று நினைத்துக் கொண்டான். அப்பத்தாவை அப்பா அடித்து விட்டார். 'பெத்த தாயைக் கை நீட்டி அடிக்கலாமா?' என்று கேட்ட பக்கத்து வீட்டு ஜோசப் மாமாவையும் திட்டி அனுப்பி விட்டார்.

பாவம் அப்பத்தா... அன்றைக்கு அழுது கொண்டு போனவள்தான். அதுவும் ராத்திரி நேரம். மழை வேறு 'பிசு பிசு' என்று பெய்து கொண்டிருந்தது.

சரவணன் அன்றைக்கு சரியாகத் தூங்கவில்லை. அப்பத்தாவைப் பற்றிய கவலை. பெரியப்பாவும், 'இனிமேல் வீட்டுப் பக்கமே வரக் கூடாது' என்று துரத்தி விட்டார்.

அப்பத்தா எங்கே போவாள் என்று விசனப்பட்டான். அம்மாவிடம் கேட்டான்.

"கெழவி எங்கயோ தொலையட்டும். நமக்கென்ன வந்தது? தொந்தரவு விட்டுது" என்றாள் அம்மா.

தொந்தரவா? அப்பத்தாவால் என்ன தொந்தரவு? அப்பத்தாவின் மடியில் படுத்துக் கொண்டு கதை கேட்பதில் எவ்வளவு சுகம்? கோயிலுக்கு கூட்டிப் போவாளே? நெற்றி நிறைய திருநீறு பூசுவாளே? அப்பத்

**கனகராஜன்**



தாவின் கையைப் பிடித்துக் கொண்டு நடந்தால் சலிப்பே தெரியாது. எந்த சந்தேகம் கேட்டாலும் அமைதியாக, பொறுமையாக பதில் சொல்வாள்.

"அப்பத்தா... ஆலமரத்தில் என்ன சடை மாதிரி தொங்குது?"

"விழுது கண்ணு... தாய் மரம் விழுகாம தாங்கிப் புடிக்கறதுக்காக குழந்தைக மாதிரி விழுது முளைக்குது."

இதை அப்பா அம்மாவிடம் கேட்டால், "வாயை மூடுடா. தொண தொணன்னு பேசிக்கிட்டு..." என்று அதட்டுவார்கள்.

"பத்தும் ஒண்ணும் பதினொண்ணு."

"பத்தும் ஒண்ணும் பதினொண்ணு."

சரவணனுக்கு அப்பத்தாவை ரொம்பப் பிடிக்கும். அப்பத்தா பெரியப்பா வீட்டில் கொஞ்சம் நாள்- இவர்கள் வீட்டில் கொஞ்சம் நாள் என்று மாறி மாறி இருப்பாள். இப்போது இருவர் வீட்டிலும் இல்லை.

ஆற்று மேட்டில் கண்ணாமூச்சிக் கிழவியின் குடிசையில் இருப்பதாக பக்கத்து வீட்டு ருக்குமணி அக்கா அம்மாவிடம் சொல்லிக் கொண்டிருந்தாள். அது ரொம்பத் தொலைவில் இருக்கிறதாம். இவன் போன

# ஒரு அப்பாத்தாவின் கதை

இல்லை. கண்ணாமூச்சிக் கிழவியும் மகனால் துரத்தப்பட்டவளாம். அவள் மகன் ஏதோ கட்சியில் பெரிய ஆளாம். டவுனில் நல்ல வசதியாக இருக்கிறானாம்.

எதிர் வீட்டில் ரமேஷின் பாட்டியை எவ்வளவு பாசமாகப் பார்த்துக் கொள்கிறார்கள்? இவர்கள் மட்டும் ஏன் இப்படி?

அப்பத்தாவிற்கு மூன்று மகன்கள். ஒரு மகள். யாரிடமும் ஒற்றுமை இல்லை. ஏதாவது ஒரு விதத்தில் பிரச்னையை ஏற்படுத்திக் கொண்டு, சண்டை போட்டுக் கொண்டு பிரிந்து விட்டார்கள்.

பெரியப்பாவின் வீடு மெயின் ரோட்டில் இருக்கிறது. அவருக்கு வாத்தியார் வேலை. இன்னொரு பெரியப்பா இருப்பது கோயமுத்தூரில். கார் ஒர்க் ஷாப் வைத்திருக்கிறாராம். அத்தை திருப்பூரில் வாழ்க்கைப்பட்டிருக்கிறாள். சரவணன் அத்தையைப் பார்த்ததே இல்லை. கடைசியில் சரவணனின் அப்பா. அவருக்கு பஞ்சு மில்லில் வேலை.

அப்பத்தாவின் பெயரில் சொந்தமாக பெரிய பழைய வீடு ஒன்று இருந்தது. நல்ல விலைக்குக் கேட்டார்கள். வீட்டை விற்றுப் பங்கு போட வேண்டுமென்று மகன்கள் எல்லோரும் ஒற்றைக் காலில் நின்றார்கள்.

வீட்டை விற்று, பணம் பங்கு போடப்பட்டது. அப்புறம் அப்பத்தா பெரியப்பா வீட்டிலும் சரவணன் வீட்டிலும் மாறி மாறி இருந்தாள். அப்பத்தாவிடம் அப்போது இருபதாயிரம் ரூபாய் இருந்தது. காட்டு வேலை, கூலி வேலை என்று அவள் உழைப்பில் சேமித்த பணம். அவள் பேங்கில் போட்டு வைத்திருந்தாள். பணம் இருந்த வரையில் அப்பத்தாவின் மேல் மகன்களுக்கு அக்கறை இருந்தது.

ஒரு நாள் கோயமுத்தூர் பெரியப்பா வந்தார். மனைவிக்கு ஆபரேசன் என்றார். பணம் அவசரமாகத் தேவை என்று கேட்டார். அப்பத்தாவை கடைசிக்காலம் வரை தன்னோடு வைத்துக் கொள்வதாக பணம் வாங்கிச் சென்றவர்– அதற்குப் பின் எட்டியே பார்க்கவில்லை. பொய் சொல்லி பணம் வாங்கிப் போய்விட்டார்.

இதுதான் அப்பா–பெரியப்பா கோபங்களுக்குக் காரணம்.

"ரெண்டாவது மகன்தானே உனக்குப் பெரிக. போ.... அவன்கிட்டயே போ. இந்தப் பக்கம் எட்டியே பார்க்காதே'' என்று பெரியப்பா அப்பத்தாவை விரட்டி விட்டார்.

அப்பத்தா இங்கே வந்தாள். வந்தவள் எப்போதும் போல நிறைய வேலைகள் செய்தாள். பெருக்குவது, பாத்திரம் கழுவுவது, கடைக்குப் போவது என்று வேலைகள் வாங்கினார்கள். அப்பாவுக்கு கோபம். அப்பத்தாவிடம் இருந்த பணம் தனக்குக் கிடைக்காமல் போய்விட்டதே என்கிற எரிச்சல். காரணமே இல்லாமல் அப்பத்தாவின் மேல் எரிந்து எரிந்து விழுந்தார்.

ஒரு நாள் அப்பத்தா உடம்பு சுகமில்லாமல் படுத்து விட்டாள். அன்றைக்கு அப்பா குடித்து விட்டு வந்தார்.

இரவு நேரம். மழை லேசாகத் தூறிக் கொண்டிருந்தது. அம்மா அப்பாவிடம் புலம்பினாள்.

"ஏங்க... கெழவிக்கு உடம்பு சரியில்லே. கெடையில விழுந்துட்டா எல்லா வேலையும் நம்ம தலையிலதான் விழும். செலவு பூரா நாமதான் செய்யணும். கழுவறது... வழிக்கறது... நாமதான் சின்னப்பட்டுச் சீரழியணும்.''

"அம்மா... நாங்களே இங்க கஷ்டத்தில் இருக்கிறோம். நீ உன்னோட மூத்த மகன் வீட்டுக்கே போயிடு. அவன்தான் வசதியா இருக்கிறான்.''

அப்பா சொன்னதும் அப்பத்தா கலங்கிப் போய்விட்டாள். அவளால் ஒன்றும் பேச முடியவில்லை.

"உம்... புறப்படு புறப்படு...'' என்றார் அதட்டலாக.

"நான் எங்க சாமி போவேன்? உங்க அண்ணன் இனிமேலு வீட்டுப் பக்கமே வராதேன்னு சொல்லிட்டானே?''

"எங்காச்சும் போய்த் தொலை. எனக்கென்ன வந்துச்சு? ரெண்டாவது மகனுக்கு பணத்தை வாரிக் கொடுத்திலே... அவன் கிட்ட போ... எம் மேல பாசம் இருந்திருந்தா.... எங்களுக்கும் பணம் கொடுத்திருக்கணும்.''

அப்பத்தாவின் கண்களில் பொலபொலவென்று கண்ணீர் வழிந்தது. அப்பாவின் கோபம் பெரிதாகிக் கொண்டே போனது.

"நீ வெளிய போ. பெரிய மகன் வீட்டுக்குப் போ.''

"வேண்டாம் சாமி... நான் இங்கேயே ஒரு மூலையில இருந்துக்கறேன்.''

"வேண்டாம் வேண்டாம்... நீ இங்க செத்துத் தொலைஞ்சா செலவு பூராவும் நான்தான் பண்ணித் தொலையணும். நீ எடத்தைக் காலி பண்ணு.''



கருத்து: அம்பை தேவா

அப்பத்தா கவலையோடு எல்லோரையும் பார்த்தாள். அவள் பார்வையில் பயம் இருந்தது. சரவணனுக்கு மனசு தாங்கவில்லை.

"போறியா...? இல்லையா?"

"நான் எங்க சாமி போவேன்?"

அப்பத்தா உட்கார்ந்து கொண்டே இருந்தாள்.

அப்பாவிற்கு கோபம் பொத்துக் கொண்டு வந்தது. அப்பத்தாவை இழுத்துக் கொண்டு போய் வெளியே நிறுத்தினார்.

"வேண்டாம் சாமி... ராத்திரி நேரத்தில..." என்று உள்ளே புக முயன்ற அப்பத்தாவை பேசவிடவில்லை. அப்பா கைகளால் தடுத்து நிறுத்திவிட்டு இரண்டு அடி கொடுத்தார்.

"போன்னு சொல்றனல்ல...?" என்று அப்பா கத்தினார்.

அப்போது போன அப்பத்தாதான்.

"**கொ**ய்யாப் பழம்.."

"ஆறும் ரெண்டும் எட்டு."

சரவணன் ஓட்டு சந்து வழியாக விழுந்த வெயிலைப் பார்த்தான். அது டேபிள் காலைத் தொட்டு விட்டால் இண்டர்வெல் விட்டு விடுவார்கள் என்கிற கணக்கு. வெயில் டேபிள் காலை நெருங்கி விட்டிருந்தது.

பெல் அடித்தது.

"ஹேய்ய்ய்..." என்று உற்சாகமாய் கூச்சல் கிளம்பியது. மாணவர்கள் திபுதிபுவென்று வெளியே ஓடினார்கள். சரவணன் வெளியே ஓடி வந்து அப்பத்தாவைத் தேடினான்.

"டேய்... தொட்டு விளையாட்டுக்கு வர்றியா?"

"வேண்டாம்... திருடன் போலீஸ்..."

மண்ணில் விளையாடினார்கள்.

அப்பத்தா எங்கே எங்கே என்று கண்கள் அலை பாய்ந்தன.

சரவணன் மேல் மூன்றாம் வகுப்பு பையன் ஒருத்தன் வேகமாக மோத கீழே விழுந்தான். மண்ணைத் தட்டிக் கொண்டு எழுந்தான். துழாவினான்.

"கொய்யாப் பழம்..."

குரல் வந்த திக்கைப் பார்த்தான். அரச மரத்து விநாயகர் கோயில் பக்கத்தில் அப்பத்தா உட்கார்ந்திருந்தாள். அப்பத்தாவைச் சுற்றி நான்கைந்து பையன்கள் நின்று கொண்டிருந்தார்கள். வேகமாக ஓடினான். பையன்களை விலக்கி விட்டு எட்டிப் பார்த்தான்.

"அப்பத்தா..." என்றான் உற்சாகமாக.

அப்பத்தா ஒடுங்கிப் போய் உட்கார்ந்



**"ஒவ்வொரு மந்திரி கழுத்திலும் என்ன அட்டை தொங்குது?"**

**"பின்னே, எழுபது அமைச்சர்கள் பெயர்களையும் எப்படி பிரதமர் ஞாபகம் வைச்சுக்கிறதாம்?"**

**—ஏ.வி.கிரி**

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●

திருந்தாள். அப்பத்தாவின் முன்னால் ஒரு சின்னக் கூடை. அதில் ஏழெட்டு கொய்யாப் பழங்கள்.

அப்பத்தாவா இது? பழைய வெள்ளைச் சேலை. அதில் நிறைய கிழிசல்கள். அப்பத்தா ஒடுங்கிக் கொண்டு இருந்தாள். எதனால் இப்படி நடுங்கிக் கொண்டிருக்கிறாள்?

"பாட்டி... ஒரு பழம் எவ்வளவு?" ஒரு பையன் கேட்டான்.

"நாலணா..."

அப்பத்தாவின் குரலும் நடுங்குகிறது.

"அப்பத்தா..." என்று சரவணன் கத்தினான்.

"நல்ல பழம் கண்ணு..."

"அப்பத்தா..."

கிட்ட போய் அப்பத்தாவைத் தொட்டான். அப்பத்தா கண்களைக் குறுக்கிக் கொண்டு அவனைப் பார்த்தாள்.

"யாரு சாமி?"

"அப்பத்தா..."

உற்றுப் பார்த்தாள். முகம் சட்டென்று மலர்ந்தது.

"கண்ணு... சரவணா... நீயா சாமி?"

"என்ன அப்பத்தா? என்னை அடையாளம் தெரியலே?"

"சாமி.... கண்ணு சரியா தெரியறதில்லே சாமி."

அவன் அப்பத்தாவின் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டான்.

"எத்தனாம் வகுப்பு படிக்கறே?"

"ரெண்டாம் வகுப்பு."

"ராசா... ரெண்டாவது படிக்கறியா?" என்று அவன் தலையை பாசமாகத் தடவி

**கி**ரிக்கெட் ஆர்வமுள்ள அந்த இளைஞருக்கு ஆறு வருடங்கள் முன்பு சண்டிகரில் கபில் அகடமியில் பயிற்சி பெறும் வாய்ப்புக் கிடைத்தது. பெருமகிழ்ச்சியுடன் கிளம்பிப் போனவர், நண்பர்களுடன் அரட்டை அடிக்க முடியவில்லையே என்கிற 'ஏக்கத்'தில் பாதியிலேயே திரும்பி வந்து விட்டார்.

இந்தியக் கிரிக்கெட் அணியில் இடம் பெறும் வாய்ப்பு கொஞ்சம் தள்ளிப் போனது. பலன்! இப்போது அவர் இடம் பெற்று விட்டார்; ஆஸ்திரேலியாவுக்குச் செல்லும் நம் அணியின் புதுமுக வேகப்பந்து வீச்சாளராக!

## அடேங்கப்பா குமரன்!

பெயர் – குமரன்

ஊர் – நம்மூர்தான்.

பந்து வீசும் வேகம்– 150 கி.மீ/மணி.

''அடேங்கப்பா'' என்கிறார்கள், கிரிக்கெட் ஆசாமிகள். அகர்கர் மாதிரி ரிவர்ஸ் ஸ்விங் போட்டு மிரட்டுகிற இந்த இளைஞரின் எதிர்காலம் படு பிரகாசம் என்று சர்டிபிகேட் தருகிறார் கபில்தேவ்.

அவர் வேகப்பந்து வசிஷ்டரல்லவா?

– சிம்மம்

படம்: உமாமணி

னான். அப்பத்தாவின் கை பட்டதும் ஏதோ பரவசமாக உணர்ந்தான்.

"இந்தா சரவணா... கொய்யாப் பழம்" என்று அவனிடம் ஒரு கொய்யாப் பழத்தை எடுத்துக் கொடுத்தாள்.

"வேண்டாம் அப்பத்தா..."

"வேண்டாம்னு சொல்லாத தங்கம்."

அப்பத்தாவின் கண்கள் கலங்கி விட்டிருந்தன. அவள் உடம்பு சூடாக இருந்தது.

"ஏன் அப்பத்தா உடம்பு சூடா இருக்குது?"

"காய்ச்சல் சாமி..."

"டாக்டர்கிட்ட போகலே?"

"என் கண்ணு... என் பேரனுக்கு என் மேல எவ்வளவு அக்கறை? டாக்டர்கிட்ட போக அப்பத்தாகிட்ட காசு இல்லே சாமி..."

"பாவம் அப்பத்தா நீ... உனக்கு யாருமே காசு கொடுக்கறதில்லே...?"

அதற்கு அப்பத்தா சிரித்தாள். சிரித்துக் கொண்டே இருந்தாள். ரொம்ப நாள் கழித்து சிரிக்கிற மாதிரி இருந்தது.

கொஞ்சம் நேரம் கழித்து அப்பத்தாவின் காலைப் பார்த்தான். இடது காலில் பழைய துணியால் ஒரு கட்டு போடப்பட்டிருந்தது.

"என்ன அப்பத்தா காலில் காயம்?"

"நாய் கடிச்சுப் போடுச்சு."

"அய்யய்யோ... எப்ப அப்பத்தா?"

"போன வாரம் சாமி. வடக்காலத் தெருவில கீரை விற்கப் போனனா? அப்ப நாய் ஒண்ணு கடிச்சுப் போடுச்சு."

அவன் அப்பத்தாவைப் பரிதாபமாகப் பார்த்தான்.

"வலிக்குதா அப்பத்தா?"

"இல்ல சாமி... நீ கேட்டதிலேயே மனசு ரொம்ப குளிர்ந்து போச்சு."

மூன்று கொய்யாப் பழங்கள்தான் விற்றன.

சரவணன் அப்பத்தாவையே பார்த்துக் கொண்டிருந்தான். வாடி வதங்கிப் போன பூ மாதிரி இருந்தாள். கைகள் நடுங்கிக் கொண்டிருந்தன.

பெல் அடித்தது.

"அப்பத்தா... பெல் அடிச்சாச்சு. நான் வகுப்புக்குப் போறேன்" என்று எழுந்தான்.

"சரவணா... இந்தா சாமி..."

"என்ன அப்பத்தா?"

மூன்று நாலணா காசுகள்.

''வேண்டாம் அப்பத்தா... எனக்கு காசெல்லாம் வேண்டாம்."

அப்பத்தாவிடம் திருப்பிக் கொடுத்தான்.

''வேண்டாம்னு சொல்லக் கூடாது ராசா."

"வேண்டாம் அப்பத்தா."

''ஆசையா குடுக்கறேன். வேண்டாமுன்னு சொன்னா மனசு கஷ்டப்படும்ல?"

"அப்பத்தா... நீயே காசில்லாம கஷ்டப்படறே..."

''வாங்கிக்க ராசா...'' என்று அவன் கையில் திணித்தாள்.

"சரவணா... கடைசி காலத்தில அப்பா அம்மாவை நல்லா பார்த்துக்கணும். போயிட்டு வா சாமி." ●




மூன்றாம் அத்தியாயம்

## பருந்தும் புறாவும்

ஆதித்த கரிகாலன் சுட்டிக் காட்டிய திசையில் ஆற்றங் கரை மண்டபம் ஒன்று இருந்தது. அது கல் வேலையினால் ஆன மண்டபம். வழிப் போக்கர்கள் வெயிலிலும் மழையிலும் தங்குவதற்காக யாரோ தர்மவான் அதைக் கட்டியிருக்க வேண்டும். அந்த மண்டபம் வெயிலிலும் மழையிலும் வெகு காலம் அடிபட்டு முதுமையின் அறிகுறிகளைக் காட்டிக்கொண்டிருந்தது. மண்டபத்தின் முனைகளில் சிற்ப வேலைப்பாடு உடைய உருவங்கள் சில காணப்பட்டன. அவை இன்னவை என்று கிழவராகிய மலையமானுக்குத் தெரியவில்லை.

"பார்த்தீர்களா, தாத்தா!" என்றான் ஆதித்த கரிகாலன்.

"குழந்தாய்! அந்த மண்டபத்தைத் தானே சொல்லுகிறாய்? அதில் வேறு ஒன்றும் எனக்குத் தெரியவில்லையே? மண்டபமும் வெறுமையாகத்தான் இருக்கிறது. அதில் யாரும் இருப்பதாகக் காணவில்லையே!" என்றார்.

"தாத்தா! உங்களுக்கு வயதாகி விட்டது என்று இப்போதுதான் எனக்கு நன்றாய்த் தெரிகிறது. அதனால் கண் பார்வை குன்றியிருக்கிறது. அதோ பாருங்கள்! ஒரு பெரிய இராஜாளி! எத்தனை பெரிது? அதன் சிறகுகள் எவ்

அமரர் கல்கி

வளவு விசாலம்? கொடுமை! கொடுமை! அது தன் கால்களில் ஒரு சின்னஞ்சிறு புறாவைப் பிடித்துக்கொண்டிருக்கிறதே, தெரியவில்லையா? இராஜாளியின் கூரிய நகங்கள் கிழித்துப் புறாவின் இரத்தம் சிந்துகிறதே, தெரியவில்லையா? கடவுளே! இது என்ன விந்தை! அதோ இன்னொரு புறாவைப் பாருங்கள், தாத்தா! அந்தப் பயங்கரமான இராஜாளியின் அருகில் வட்டமிடுகிறது! அது இராஜாளியிடம் எப்படிக் கெஞ்சுகிறது? இராஜாளியின் கால்களில் அகப்பட்டுக் கொண்டிருக்கும் புறா அதனுடைய காதலனாக இருக்க வேண்டும்! காதலனுக்கு உயிர்ப் பிச்சை கொடுக்கும்படி அது கெஞ்சுகிறது! தாத்தா! அந்தப் புறா கெஞ்சுகிறதா? அல்லது இராஜாளியிடம் சண்டைக்குப் போகிறதா? இறகை அடித்துக் கொள்வதைப் பார்த்தால் சண்டைக்குப் போவதாகவே தோன்றுகிறது. கடவுளே! அந்தப் பெண் புறாவுக்கு என்ன தைரியம் பாருங்கள்! இராஜாளியுடன் சண்டைக்குப் போகிறது! காதலனுடைய



உயிரைக் காப்பாற்றுவதற்காக அந்தப் பயங்கர ராட்சதனுடன் போராடப் போகிறது! தாத்தா! இராஜாளி மனம் இரங்கும் என்று நினைக்கிறீர்களா? இரங்காது! இரங்காது! ஒருநாளும் இரங்காது! இம் மாதிரி எத்தனையோ புறாக்களை அது கொன்று தின்று கொழுத்துக் கிடக்கிறது! சண்டாள இராஜாளியே! இதோ உன்னைக் கொன்று போடுகிறேன்!" என்று கூறிக்கொண்டே ஆதித்த கரிகாலன் பக்கத்தில் கிடந்த ஒரு கூழாங் கல்லை எடுத்து வீசி எறிந்தான். அந்தக் கூழாங்கல் மண்டபத்தை நோக்கிச் சென்று அதன் ஒரு முனையில் பட்டு விட்டுக் கீழே விழுந்தது.

ஆதித்த கரிகாலன், "ராட்சதனே! உனக்கு நன்றாய் வேண்டும்!" என்று சொல்லிவிட்டு, இடி இடி என்று பயங்கரமாகச் சிரித்தான்.

பேரப் பிள்ளையின் சித்த சுவாதீனத்தைப் பற்றி ஏற்கெனவே கிழவருக்குச் சிறிது சந்தேகம் இருந்தது. அது இப்போது இன்னும் அதிகமாயிற்று.

"தாத்தா! ஏன் என்னை இப்படி வெறித்துப் பார்க்கிறீர்கள்? மண்டபத்தின் அருகில் போய்ப் பாருங்கள்!" என்றான் கரிகாலன்.

அவ்விதமே மலையமான் மண்டபத்தைச் சற்று நெருங்கிச் சென்று கரிகாலனின் கல் விழுந்த இடத்தை உற்றுப் பார்த்தார். அங்கே ஒரு சிற்பம் காணப்பட்டது. அந்தச் சிற்பத்தில் இராஜாளி ஒன்று தன் கால் நகங்களில் ஒரு புறாவைக் கொத்தித் தூக்கிக் கொண்டிருப்பது போலவும், இன்னொரு புறா அந்த இராஜாளியின் மீது கோபத்துடன் பாயப் போவது போலவும் தத்ரூபமாக அமைக்கப்பட்டிருந்தது.

மலையமான் திரும்பி வந்து, "குழந்தாய்! எனக்கு வயதாகி விட்டது என்பது உண்மைதான்! கண் பார்வை



முன் போல் துல்லியமாக இல்லை. அருகில் சென்று உற்றுப் பார்த்த பிறகுதான் தெரிந்தது. நல்ல சிற்ப வேலை!'' என்றார்.

''நல்ல சிற்ப வேலையா? சிற்ப அற்புதம் என்று சொல்லுங்கள், தாத்தா! மகேந்திர வர்மர் - மாமல்லர் காலத்துச் சிற்ப சக்கரவர்த்தி யாரோ ஒருவன் இதையும் செய்திருக்க வேண்டும்! முதலில் பார்த்ததும் உண்மையாக நடப்பது போலவே எனக்குத் தோன்றி விட்டது!'' என்றான் கரிகாலன்.

''ஆதித்தா! அற்புதம் அந்தக் கல்லிலே மட்டும் இல்லை! உன் கண்ணிலும் இருக்கிறது; உன் மனத்திற்குள்ளேயும் இருக்கிறது. இந்த வழியாக எவ்வளவோ பிரயாணிகள் தினந்தோறும் போகிறார்கள். அவர்களில் முக்கால் வாசிப் பேர் இந்தச் சிற்ப அற்புதத்தைக் கவனித்துக் கூட இருக்க மாட்டார்கள். மற்றும் பலர் பார்த்தும் பார்க்காதது போலவே போய் விடுவார்கள். உன்னைப் போல் ஒரு சிலர்தான் ஒரு சிற்பத்தைப் பார்த்து இவ்வளவு ஆச்சரியப்படுவார்கள்...!''

''நான் ஆச்சரியப்படவில்லை, தாத்தா! கோபப்படுகிறேன். அந்தச் சிற்பத்தை இப்போதே இடித்துத் தள்ளிவிட வேண்டுமென்று எனக்கு ஆத்திரம் உண்டாகிறது. இவ்வளவு கொடூரமான சிற்பத்தை அமைத்தவனை அதிகமாகப் புகழ்ந்து பாராட்டுவதுகூட எனக்குப் பிடிக்கவில்லை...!''

''கரிகாலா! இது என்ன விந்தை! உன்னுடைய வைர நெஞ்சு எப்போது இவ்வளவு இளக்கம் கொடுத்தது? இராஜாளி புறாவைக் கொன்று தின்பது அதனுடைய இயற்கை. சிங்க ராஜா ஆட்டினிடம் இரக்கம் கொள்ள ஆரம்பித்தால் அது சிங்க ராஜா அல்ல; அதுவும் ஆடாகத்தான் போய் விடும். சிம்மாசனத்தில் வீற்றிருந்து அரசு புரிய ஆசைப்படுகிறவர்கள் பகைவர்களையும் சதிகாரர்களையும் கொன்றுதான் ஆக வேண்டும். சக்கரவர்த்தியாயிருந்து உலகை ஒரு குடை நிழலில் ஆளப் பிறந்தவர்கள் பகையரசர்களைக் கொன்றுதான் தீர வேண்டும். இராஜாளி புறாவைக் கொல்லாவிட்டால், அது இராஜாளியாயிருக்க முடியுமா? இதைப் பற்றி ஏன் உனக்கு இவ்வளவு கலக்கம்?'' என்றார் மலையமான்.

''தாத்தா! நீங்கள் சொல்வதெல்லாம் சரிதான்! ஆனால் அந்தப் பெண் புறா அப்படித் தவிப்பதைப் பார்த்த பிறகு இராஜாளிக்கு இரக்கம் வர வேண்டாமா? பெண்ணுக்கு இரங்கி ஆணை விடுதலை செய்ய வேண்டாமா? ஐயா! நீங்களே சொல்லுங்கள். உங்கள் பகைவன் ஒருவனை நீங்கள் கொல்லப் போகும் சமயத்தில் அவனுடைய காதலி குறுக்கே வந்து புருஷனுக்கு உயிர்ப் பிச்சை கேட்டால் என்ன செய்வீர்கள்? அப்போது உங்கள் மனம் இரங்காமலிருக்குமா?'' என்று கரிகாலன் கேட்டான்.

''அப்படி ஒரு பெண் குறுக்கே வந்தால் அவளை என் இடது காலினால் உதைத்து விட்டு என் பகைவனைக் கொல்லுவேன். கரிகாலா! அதைப் பற்றிச் சந்தேகமே இல்லை. பகைவர்கள் 'தொழுத கையினில்' ஆயுதம் வைத்திருப்பார்கள் என்றும், அவர்கள் 'அழுத கண்ணீரிலும்' ஆயுதம் மறைந்திருக்கும் என்றும் வள்ளுவர் கூறியிருக்கிறார். ஆண்களின் கண்ணீரைக் காட்டிலும் பெண்களின் கண்ணீர் அபாயமானது. ஏனெனில், பெண்களின் கண்ணீருக்கு இளகச் செய்யும் சக்தி அதிகம் உண்டு. அப்படி மனத்தை இளக விட்டு விடுகிறவனால் இவ்வுலகில் பெரிய காரியம் எதையும் செய்ய முடியாது. அவன் பெண்களிலும் கேடு கெட்டவனாவான்!''

''தாத்தா! இது என்ன? பெண்களைப் பற்றி ஏன் நீங்கள் இவ்வளவு குறைவாகப் பேசுகிறீர்கள்! பெண்களைப் பற்றிக் குறைவாய்ப் பேசுவது என் தாயாரையும் குறைவு படுத்துவதாகாதா...?''

''குழந்தாய்! கேள்! உன் தாயாரிடம் நான் வைத்திருந்த அன்புக்கு இந்த உலகத்தில் இணை ஒன்றுமே இல்லை. எனக்கு ஆறு மகன்கள் பிறந்தார்கள்.

பீமனையும், அர்ச்சுனனையும் ஒத்த வீரர்களாய் வளர்ந்தார்கள். அவ்வளவு பேரையும் யுத்தகளத்தில் பலி கொடுத்து விட்டேன். அவர்கள் இறந்த செய்தி வந்த போதெல்லாம் நான் வருத்தப்பட வில்லை. ஆனால் உன் தாயாரை மணம் செய்து கொடுத்து அனுப்பி வைத்த போது, அவள் சாம்ராஜ்ய சிங்காதனத்தில் அமரப் போகிறாள் என்று தெரிந்திருந்தும் என் மனம் அடைந்த வேதனையைச் சொல்ல முடியாது. ஆனால் அந்த வேதனையை வெளிப்படையாகக் காட்டிக் கொண்டேனா? இல்லை! அவளிடந்தான் வெளியிட்டேனா? அதுவும் இல்லை! உன் தாயை மணம் செய்து கொடுப்பதற்கு முதல் நாள் அவளைத் தனியாக அழைத்து என்ன சொன்னேன் தெரியுமா? கேள், கரிகாலா! 'மகளே! மாநிலம் புரக்கப் போகும் மன்னனை நீ மணந்து கொள்ளப் போகிறாய்! அதற்காகக் கர்வங் கொள்ளாதே! மன்மதனையொத்த சுந்தரபுருஷனை நீ மணந்து கொள்ளப் போகிறாய்! அதற்காகவும் நீ கர்வம் அடையாதே! அவ்வளவு புகழ் வாய்ந்த கணவனை மணந்து கொள்வதினால் உனக்குக் கஷ்டந்தான் அதிகமாயிருக்கும். உன் அரண்மனையில் பணி செய்யும் பணிப்பெண்கள் பலரும் உன்னைக் காட்டிலும் சந்தோஷமாயிருப்பார்கள். துக்கப்படுவதற்கும் வேதனைப் படுவதற்கும் உன்னை நீ ஆயத்தம் செய்து கொள்! உனக்குக் குழந்தைகள் பிறக்கா விட்டால் உன் புருஷன் வேறு ஸ்திரீகளைக் கட்டாயம் மணந்து கொள்வான். அதை நினைத்து நீ வேதனைப் படக் கூடாது. உனக்கு மக்கள் பிறந்தால் அவர்களை வீர மக்களாய் நீ வளர்க்க வேண்டும். அவர்கள் போர்க்களத்தில் உயிர் விட்டதாகச் செய்தி வந்தால் ஒரு சொட்டுக் கண்ணீர் கூட விடக் கூடாது. உன் கணவன் சந்தோஷமாயிருந்தால் நீயும் சந்தோஷமாயிரு! உன் புருஷன் துக்கப்பட்டால் நீ அவனைச் சந்தோஷப் படுத்தப் பார்! உன் பதி நோய்ப் பட்டால் நீ அவனுக்குப் பணிவிடை செய்! உன் கணவன் இறந்தால் நீயும் அவனுடன் உடன்கட்டை ஏறி விடு! உன் நெஞ்சில் உதிரம் கொட்டினாலும் உன் கண்களில் மட்டும் கண்ணீர் சொட்டக் கூடாது! மலையமான் வம்சத்தில் பெண்களுடைய குலாச்சாரம் இது!' என்று இவ்விதம் உன் அன்னைக்குப் புத்திமதி கூறினேன். அம் மாதிரியே உன் அன்னை இன்று வரை நடந்து வருகிறாள்; நடத்தி வருகிறாள். கரிகாலா! உன்னையும் உன் சகோதரனையும் இணையில்லாத வீரர்களாக வளர்த்து வந்திருக்கிறாள். உன் தந்தை நோய்ப்பட்ட பின்னர் இரவு பகல் அவர் பக்கத்திலிருந்து அவளே எல்லாப் பணிவிடைகளையும் செய்து வருகிறாள். உன் அன்னையை என் மகளாகப் பெற்றதை நினைக்கும்போதெல்லாம் என் தோள்கள் பூரிக்கின்றன!'' என்றார் மலையமான்.

''தாத்தா! என் தாயை நினைக்கும் போதெல்லாம் நான் அடையும் பெருமிதத்துக்கும் அளவில்லை. ஆனால் ஒன்று கேட்கிறேன், சொல்லுங்கள். என் தந்தையின் கொடிய பகைவன் ஒருவன் அவரைக் கொல்லுவதற்குக் கத்தியை ஓங்கிக்கொண்டு வருவதாக வைத்துக் கொள்ளுங்கள். என் தாயார் அப்பொழுது என்ன செய்வாள்? முன்னால் நின்று கண்ணீர் பெருக்கிக் கணவனைக் காப்பாற்றும்படி அப் பகைவனை வேண்டிக் கொள்வாளா? முக்கியமாக, அப்படி வருகிற பகைவன் என் அன்னைக்குத் தெரிந்தவனாகவும் இருந்து விட்டால்...''

''குழந்தாய்! உன் தாயார் ஒரு நாளும் அப்படிப் பகைவனிடம் உயிர்ப்பிச்சை கேட்க மாட்டாள். மலையமான் மகள் அவ்விதம் ஒருகாலும் தான் பிறந்த குலத்தையும் புகுந்த குலத்தையும் அவமானப் படுத்த மாட்டாள். அவளுடைய புருஷனுடைய பகைவனைத் தனக்கும் கொடிய பகைவனாகவே கருதுவாள். பகைவன் முன்னால் கை கூப்ப மாட்டாள்; கண்ணீரும் விட மாட்டாள். கணவன் உயிர் துறந்தால் உடனே அவன் மீது விழுந்து தானும் உயிரை விடுவாள்! அல்லது மனத்தைக்

கல்லாகச் செய்து கொண்டு உயிரோடிருப்பாள்; பகைவனைப் பழிக்குப் பழி வாங்குவதற்காக மட்டுமே உயிரை வைத்துக்கொண்டிருப்பாள்!''


தைக் கேட்ட ஆதித்த கரிகாலன் ஒரு நெடிய பெருமூச்சு விட்டு, "தாத்தா! நான் போய் வரவா?'' என்றான்.

''அவசியம் போகத்தான் வேண்டுமா?''

''அதைப் பற்றி இன்னும் என்ன சந்தேகம், தாத்தா! பாதி வழிக்கு மேலே வந்தாகி விட்டதே!''

''ஆம்; பாதி வழிக்கு மேல் வந்தாகி விட்டது. நானும் முதலில் உன்னைப் போக வேண்டாம் என்றேன். அப்புறம் போகும்படி சொன்னேன். உன் தம்பியைப் பற்றிய செய்தி கேட்ட பிறகு நீ போவதே நல்லது என்று தீர்மானித்தேன். அருள்மொழி வர்மன் இறந்திருப்பான் என்று நான் நம்பவில்லை...''

''நானும் அதை நம்பவில்லை...''

''உன் தந்தையின் இளம்பிராயத்தில் சில காலம் அவர் இருக்குமிடம் தெரியாமலிருந்தது. அது போல் அருள்மொழியும் ஏதேனும் ஒரு தீவில் ஒதுங்கியிருப்பான். சில நாளைக்கெல்லாம் வந்து சேர்வான் என்றே நம்புகிறேன்! ஆனாலும் அச் செய்தி சோழ நாடெங்கும் கொந்தளிப்பை உண்டாக்கி விட்டிருக்கிறது என்று அறிகிறேன். உன் பெற்றோர்களும் கவலையில் ஆழ்ந்திருப்பார்கள். இச் சமயம் அவர்கள் பக்கத்தில் இருந்து நீ ஆறுதல் சொல்லுவது அவசியம். அப்படிப் போகும்போது பழுவேட்டரையர்களின் விரோதியாகப் போவதைக் காட்டிலும் சிநேகமாகப் போவது நல்லது. ஆகையினால்தான் நீ சம்புவரையர் அழைப்புக்கு இணங்கிப் போவதற்குச் சம்மதித்தேன். அவன் வேண்டுமென்றே என்னை அழைக்கவில்லை. அழைத்திருந்தால் நானும் வந்திருப்பேன்...''

''தாத்தா! எனக்காக அவ்வளவு தூரம் நீங்கள் பயப்படுகிறீர்களா? என்னை அவ்வளவு கையினாலாகாதவன் என்று எண்ணி விட்டீர்களா?'' என்று கேட்டான் கரிகாலன்.

''இல்லை, தம்பி! இல்லை! நீ எத்தகைய வீராதி வீரன் என்பது எனக்குத் தெரியாதா? கொடிய ஆயுதங்களைத் தரித்த பதினாயிரம் பகைவர்களின் நடுவில் நான் உன்னைத் தன்னந் தனியாக நம்பி அனுப்புவேன். ஆனால் கண்ணீர் பெருக்கி உன் மனத்தைக் கலங்கச் செய்யக் கூடிய ஒரு பெண்ணின் முன்னால் உன்னைத் தனியாக அனுப்புவதற்கு மட்டும் பயப்படுகிறேன்...''

''சம்புவரையர் மகள் அப்படியெல்லாம் ஜால வித்தையில் தேர்ந்தவள் என்று நான் கேள்விப்படவில்லை! தாத்தா! ஆண் மக்கள் முன்னால் வருவதற்கே அஞ்சக்கூடிய பெண்ணாம் அவள். கந்தமாறன் சொல்லியிருக்கிறான். நானும் அப்படியெல்லாம் அவசரப்பட்டுத் தாய் தந்தையர் சம்மதம் இல்லாமல் ஒரு காரியத்தைச் செய்து விட மாட்டேன். உங்களுடைய பழங்குடியில் பிறந்த இரண்டு பெண்கள் இன்னும் மணமாகாமல் இருக்கிறார்கள் என்பதும் எனக்கு நன்றாகத் தெரியும்...''

''ஆதித்தா! அதைப் பற்றிச் சிந்தனையே எனக்கு இல்லை. என் மூத்த மகனுடைய பெண்கள் இரண்டு பேர் திருமணப் பிராயம் வந்தவர்கள் இருக்கிறார்கள்தான். ஆனால் அவர்களை உன் கழுத்தில் கட்டும் எண்ணம் எனக்குச் சிறிதும் இல்லை. ஏற்கெனவே சோழ நாட்டுச் சிற்றரசர்கள் பலரும் என் மீது பொறாமையும் பகைமையும் கொண்டிருக்கிறார்கள். இதுவும் வேறு சேர்ந்து விட்டால் கேட்க வேண்டியதில்லை. அதற்குப் பதிலாகச் சம்புவரையர் மகளையே நீ கட்டிக் கொண்டால் நான் ஒருவாறு திருப்தி அடைவேன். எனக்கோ வயது அதிகமாகி விட்டது. உடல் தளர்ந்து விட்டது. சில சமயம் உள்ளமும் நெகிழ்ந்து விடுகிறது. மறுபடியும் என் அருமைப் பேரனைக்

காண மாட்டேனோ, இதுதான் உன்னை நான் பார்ப்பது கடைசி முறையோ என்றெல்லாம் சில சமயம் எண்ணிக் கொள்கிறேன். இனி மேல் என்னால் உனக்கு உதவி எதுவும் இல்லை. புதிய சிநேகி தர்கள் சிலர் உனக்கு அவ சியம் வேண்டும். உன் விஷயத்தில் சிரத்தை கொள்ளக் கூடியவர்கள் வேண்டும். ஆகையால் சம்பு வரையர் மகளை நீ மணந்து கொண்டால் நான் உண் மையில் மகிழ்ச்சியே அடை வேன்."

"தாத்தா! உங்கள் மகிழ்ச் சிக்காகக் கூட அதை நான் செய்ய முடியாது. சம்பு வரையர் மாளிகைக்கு நான் விருந்தாளியாகப் போவது அவருடைய சிநேகத்தை விரும்பியும் அல்ல; அவர் மகளை மணம் புரியவும் அல்ல. நீங்கள் அதுபற்றி நிம் மதியாயிருக்கலாம்."



"அப்படியானால் எதற்காகப் போகி றாய், குழந்தாய்! என் னிடம் உண்மையைச் சொல்லக் கூடாதா? உன்னுடைய நண் பர்கள் இருவரும் பேசிக் கொண் டிருந்ததில் சில வார்த்தைகள் அவ்வப்போது என் காதில் விழுந் தன. பெரிய பழுவேட்டரையன் அறு பது வயதுக்கு மேல் கல்யாணம் செய்து கொண்டானே, அந்த மோகினிப் பிசாசு உனக்கு ஓலை அனுப்பியிருக்கிறாள் என்றும், அதனாலேதான் நீ கடம்பூர் வரச் சம்மதித்தாய் என்றும் அவர்கள் பேசிக்கொண்டார்கள், அது உண் மையா?"

"ஆம், தாத்தா! அது உண்மைதான்!" என்றான் ஆதித்த கரிகாலன்.

"கடவுளே! இது என்ன காலம்?

கரிகாலா! நான் சொல்வதைக் கேள். நீ பிறந்த சோழ குலம் இரண்டாயிரம் ஆண்டுகளாக வாழையடி வாழையாக வந்து பெருமை பெற்ற குலம். உன்னுடைய மூதாதைகள் சிலர் உலகத்தை ஒரு குடையில் ஆண்ட சக்கரவர்த்திகளாயிருந்திருக்கிறார்கள். சில சமயம் உறையூரையும் அதன் சுற்றுப் புறத்தையும் மட்டும் ஆண்ட குறுநில மன்னர்களாயிருந்திருக்கிறார்கள். சிலர் ஏகபத்தினி விரதங்கொண்டு இராம பிரானைப் போல் இருந்ததுண்டு. சில பல தாரங்களை மணம் செய்து கொண்டு வீரப் புதல்வர்கள் பலரை ஈன்றதுண்டு. சிலர் சிவ பக்தர்கள்; சிலர் திருமாலின் பக்தர்கள். சிலர் 'சாமியுமில்லை; பூதமுமில்லை' என்றும் சொல்லி வந்தவர்கள். ஆனால் அவர்களில் யாரும் தங்கள் நடத்தையில் களங்க முண்டாக்குமாறு நடந்ததில்லை. பிறன்மனை விழைந்ததில்லை. குழந்தாய்! கன்னிப் பெண்களாயிருப்பவர்கள் எத்தனை பேரை வேண்டுமானாலும் மணந்து கொள். உன் பாட்டனின் தந்தை – புகழ் பெற்ற பராந்தக சக்கரவர்த்தி. ஏழு பெண்களை மணந்துகொண்டார். அவரைப் போல் நீயும் மணந்து கொள். ஆனால் பெரிய பழுவேட்டரையனை மணந்து கொண்ட மாயமோகினியைக் கண்ணெடுத்தும் பாராதே!"

"மன்னிக்க வேண்டும் தாத்தா! அந்த மாதிரி குற்றம் ஒன்றும் நான் செய்ய மாட்டேன். சோழ குலத்துக்கும் மலையமான் குலத்துக்கும் களங்கம் உண்டு பண்ண மாட்டேன்!"

''அப்படியானால் அவள் அழைப்புக்காக ஏன் போகிறாய், குழந்தாய்?''

"உண்மையை உங்களிடம் சொல்லிவிட்டே போகிறேன். அவளுக்கு ஒரு சமயம் நான் ஒரு பெரிய தீங்கு செய்தேன். அதற்காக அவளிடம் மன்னிப்புக் கேட்டுக் கொள்ளப் போகிறேன்!'' என்றான் கரிகாலன்.

''இது என்ன வார்த்தை? ஒரு பெண்ணிடம் நீ மன்னிப்புக் கேட்டுக் கொள்ளவாவது? என் காதினால் கேட்கச் சகிக்கவில்லையே?'' என்றார் மலையமான்.

ஆதித்த கரிகாலன் சிறிது நேரம் தலை குனிந்த வண்ணமாக இருந்தான். பிறகு மனத்தைத் திடப்படுத்திக்கொண்டு பாட்டனாரிடம் பழைய வரலாற்றை ஒருவாறு கூறினான். வீர பாண்டியனைத் தான் தேடிச் சென்று அவன் ஒளிந்திருந்த இடத்தைக் கண்டுபிடித்ததையும், நந்தினி குறுக்கிட்டு உயிர்ப்பிச்சை கேட்டதையும், தான் அதைக் கேட்காமல் ஆத்திரப்பட்டு அவனைக் கொன்றதையும், அது முதல் தன் மனம் நிம்மதியில்லாமல் அலைப்புறுவதையும் பற்றி விவரமாகக் கூறினான்.

"அந்த ஞாபகம் என்னை ஓயாமல் கஷ்டப்படுத்திக் கொண்டிருக்கிறது, தாத்தா! அவளை ஒரு தடவை பார்த்து மன்னிப்புக் கேட்டுக்கொண்டால்தான் என் மனம் நிம்மதி அடையும். அவளும் போனதையெல்லாம் மறந்து விடத் தயாராயிருப்பதாகக் காண்கிறது. இராஜ்யத்தில் குழப்பம் விளையாமல் பார்த்துக் கொள்வதிலும் சிரத்தை கொண்டிருக்கிறாள். அதற்காகவே என்னை அழைத்திருக்கிறாள். போகும் காரியத்தை முடித்துக்கொண்டு வெகு சீக்கிரமாகவே காஞ்சிக்குத் திரும்பி விடுவேன், தாத்தா! திரும்பி வந்ததும் என் தம்பியைக் கண்டுபிடித்துக் கொண்டு வருவதற்காகக் கப்பல் ஏறிப் புறப்படுவேன்'' என்றான் ஆதித்த கரிகாலன்.

கிழவர் மலையமான் ஒரு பெருமூச்சு விட்டு, "இதுவரையில் விளங்காமலிருந்த பல விஷயங்கள் இப்போது எனக்கு விளங்குகின்றன. இன்றுவரை மர்மமாக இருந்த பல காரியங்கள் அர்த்தமாகின்றன. விதியை வெல்ல யாராலும் முடியாது என்பது நிச்சயந்தான்!'' என்றார்.

(தொடரும்)

# ஞாபகங்கள் தீயாகும்

திடீரென்று அந்தப் பெண்ணின் ஞாபகம் வந்தது. அந்தப் பெண்ணின் பெயர் என்ன நிர்மலாவா? ஊர்மிளாவா? சரியாக ஞாபகம் இல்லை. மருமகளின் பெயர் கூட எனக்கு ஞாபகம் இல்லை. ஞாபகத்தில் வைத்திருக்கவில்லை. மகனின் காதல் மனைவி. வீட்டை முறித்துக் கொண்டு மணம்முடித்துக் கொண்டதால், மகனையே வேண்டாம் என்று துறந்த போது, அவனின் மனைவி பெயரை மட்டும் ஞாபகத்தில் வைத்துக் கொள்ளப் போகிறோமா?

ஆனால் இப்போது யார் மீதும் விரோதம் பார்க்க முடியாது. மகன் உயிரோடு இல்லை. காதல் கல்யாணம் முடிந்த மூன்றே மாதத்தில் ஒரு விபத்தில் இறந்து போனான். போஸ்ட்மார்ட்டம் முடிந்து - ஜி.ஹெச்சில் மகனின் உடலை பெற்றுக் கொள்வதற்கு ஆஸ்பத்திரிக்குப் போயிருந்த போது, மருமகளை, அவளது வீட்டாரை பார்த்ததோடு சரி. மற்றபடி இறுதி சடங்குக்குக்கூட அவள் வீட்டார் வரக் கூடாது என்று கமலா சொல்லி விட்டாள்.

அவர்களும் வரவில்லை. அது நடந்து மூன்று மாதமாகி விட்டது. இதுவரை அவர்கள் துளியும் ஞாபகத்தில் கொள்ளவில்லை. முக்கியமாய் மருமகளின் ஞாபகம். ஒரு தடவைதான் வெளியே போயிருந்தபோது, மருமகளின் வீட்டார், 'சங்கரன் போட்டோ இருந்தாக் கொடுங்க' என்று போட்டோ வாங்கிப் போக வந்திருந்தனர். மனைவி கமலா - போட்டோவை கொடுக்காமலே அனுப்பி விட்டாள். 'எம்புள்ளைய கொன்னுட்டாங்க பாவிங்க' என்று ஏசினாள்.

இன்று ஏன் திடீரென்று மருமகளின் ஞாபகம் எனக்கு வந்தது என்று தெரியவில்லை. திடீரென்று இன்று காலையிலிருந்தே ஒருவித இம்சை. இன்று சங்கரின் பிறந்த நாள். முன்னெல்லாம் அவன் பிறந்த நாள் என்றால் தீபாவளி போல் குதூகலமாய் இருக்கும் வீடு. ஒரே மகன், இரண்டு பொண்ணுங்க. அதனால் அவனுக்குச் செல்லம் அதிகம்தான். வீடு முழுக்க பலூன் கட்டி, கேக் வெட்டி, வீதியில் வெடி போட்டு...

போன வருஷ பிறந்த நாளில் கூட அப்படித்தான். ஆனால் போன வருடம் முதன் முதலாய் ரத்ததானம் வழங்கி விட்டு வந்ததாய்ச் சொன்னான். "ரத்தம் கொடுக்கிறதுன்னா பயந்துடாதீங்க. நம்ம உடம்புல நூற்றியெண்பது அவுன்ஸ் ரத்தம் இருக்குப்பா. அஞ்சு அவுன்ஸ் ரத்தம்தான் ஒரு முறை ரத்ததானம் கொடுக்கும்போது எடுக்கிறாங்க" என்றான். அவனுக்கு ரொம்பவும் இளகிய மனசு.

ஆறு மாதம் முன், திடீர் என்று ஒருநாள் தன்னுடன் பணிபுரியும் பெண்ணை விரும்புவதாயும், அவளைத்தான் மணம் முடிக்க விரும்புவதாயும் சொன்னான். நான் ரொம்பவும் கௌரவம் பார்ப்பவன். ஜாதி சங்கத்தில் வேறு இருக்கிறேன். என் புள்ளை ஜாதி விட்டு கல்யாணம் பண்ணிக் கொள்வதை ஏற்றுக் கொள்ள முடியுமா? அவன் பிடிவாதக்காரன் என்பது தெரியும். அவன் மனசை மெல்ல மெல்ல மாற்றிவிட முயன்று கொண்டு இருந்த வேளையில், கல்யாணம் பண்ணிக் கொண்டதாய் போனில் தகவல் சொன்னான்.

என் கோபம் அவனுக்குத் தெரிந்ததுதான். அதன் பிறகு அவன் இங்கு வரவில்லை. அவனாக வரட்டும் என்று இருந்தேன். இறந்து போன் செய்திதான் மூன்று மாதம் கழித்து வந்தது.

இன்று சங்கரின் பிறந்த நாள். மருமக

வின் ஞாபகம் வந்தது. அவளைப் போய்ப் பார்க்க வேண்டும் என்று தோன்றியது. அவளைப் பார்த்தால், மனசு கொஞ்சம் ஆறுதல் அடையும். மகளைப் பார்ப்பது போன்று இருக்கும் என்று தோன்றியது. இத்தனை நாளும் அந்த கைம் பெண்ணை ஏன் போய்ப் பார்க்கவில்லையென்று தோன்றியது. மனசு இத்தனை கல்லாக இருக்கக் கூடாது. இப்படி இருந்து என்ன சுகம் கண்டோம்? இருக்கும் வரை இதமாய் வாழ்ந்து விட்டுப் போவதுதானே சரி.

கமலா சொன்னாள், "இல்லாத வீட்டுப் பொண்ணு போல் இருக்கு. இவளை வளைச்சுப் போட்டுட்டா. வீட்டோடுதான் இருக்கானாம். அந்தப் பொண்ணு வீட்டுல ஏகப்பட்ட கும்பல். முதலில் அவள் சம்பாத்தியத்தை மட்டும் நம்பியிருந்தது. இப்போ இவனும் உழைச்சுக் கொட்டுறான். அவன் தலையெழுத்து. திட்டம் போட்டுத் தான் செய்திருக்கா."

**கா**லையில் விடிந்ததும் குளித்து, சாப்பிட்டு விட்டு முதல் வேலையாகக் கிளம்பினேன். இன்று ஞாயிற்றுக் கிழமைதான். வீட்டில் இருக்கக் கூடும். நான் போவதை அவர்கள் விரும்புவார்களா? முகவரி எழுதியிருந்த டைரியை எடுத்துக் கொண்டு கிளம்பினேன். சங்கரை நான் உதாசீனப் படுத்தியிருக்கக் கூடாது. ஒவ்வொரு காலகட்டத்திலும் ஒவ்வொருவரின் சிநேகம் அவனுக்குத் தேவையாய் உள்ளது. அவன் யாரோடு பழக, சிநேகம் வைக்க வேண்டும் என்று சொல்லாத போது, மனைவியை மட்டும் நாங்கள் குறிப்பிடும் பெண்ணாக இருக்க வேண்டும்



என்று நினைப்பதில் நியாயம் இருப்பதாய்த் தெரியவில்லை.

அவன் விருப்பப்படி வாழ்ந்து விட்டுப் போகட்டும் என்று விட்டிருக்கலாம். இன்று சங்கர் இல்லை. எங்களோடு இருந்திருந்தாலும் கூட அவனது மரணத்தை தவிர்த்திருக்க முடியாதுதான். மரணம் வருவதை தடுக்கக்கூடிய சக்தி மனிதனுக்கு இருக்கிறதா என்ன? எங்களோடு இருந்திருந்தால் இன்னும் அதிகப்படியான சந்தோஷங்களுடன் அந்த மூன்று மாதம் இருந்திருப்பான்.

பஸ் ஸ்டாண்ட் வந்து விட்டது. காந்தி நகர் செல்லும் பஸ்ஸில் ஏறிக் கொண்டேன். கமலாவுக்குத் தெரிந்தால், கோபப்படுவாள். 'புள்ளையே இல்லை. அவ மட்டும் எதுக்கு?' என்று கேட்பாள். யாரும் யாருக்கும் தேவையில்லை என்று இருக்க முடியாது. எல்லோரும் எல்லோருக்கும் தேவைதான். நாம் விரும்புவதையே பிறர் விரும்ப வேண்டும் என்கிற நப்பாசை ஏன்? பிறர் விரும்புவதை நம்மால் ஏற்றுக் கொள்ள முடியாதே? அதே போன்றுதான் பிறரும்.

சங்கரின் உணர்வுகளை நான் மதித்திருக்க வேண்டும். சின்ன வயது முதல் நான் எது சொன்னாலும், 'சரிப்பா' என்று கேட்டுக் கொள்வான். ஒரு தடவை சிகரெட் பிடித்திருப்பான் போலும். வாசனையை உணர்ந்து, "அதெல்லாம் கெட்ட பழக்கம்: விட்டு விடு" என்றேன். அதன் பிறகு அவன் சிகரெட் பிடித்ததாய் ஞாபகம் இல்லை. காலேஜில் சேரும் போது, "பி.பி.ஏ. படிக்கிறேன்" என்றான்.

"பி.எஸ்ஸி., கம்ப்யூட்டர் சயின்ஸ் படி. ப்யூச்சர் நல்லாயிருக்கும்" என்றேன். "சரிப்பா" என்றான். இதுமாதிரி பல விஷயங்களில் என் விருப்பத்தை ஏற்றுக் கொண்டான். கொஞ்ச நாட்களுக்கு முன், டெல்லியில் வேலை கிடைக்கக்கூடிய வாய்ப்பிருந்தது அவனுக்கு.

"சங்கர், நீதான் எங்களுக்குத் துணை. வேற பசங்களும் இல்லை. பொண்ணுங்க, அவங்க கணவன், பிள்ளைங்க, அவங்க குடும்பம்னு இருப்பாங்க. நீ டெல்லிக்கு போகணுமா? உனக்கு இங்கேயே நல்ல வேலை கிடைக்கும் தானே" என்றேன். மறுப்பான் என்று பார்த்தேன். "சரிப்பா" என்றான். அவனுக்காக, நான் அவன் காதலை அங்கீகரித்திருக்க வேண்டும். அப்போதெல்லாம் அப்பா என்கிற மமதை எனக்கு இருந்தது. பரம்பரை பணக்காரன் என்கிற நினைப்பு கொம்பை வளர்த்து விட்டிருந்தது.

மூன்று மாதத்தில் அந்தப் பெண் கணவனை இழந்து விட்டாள். இனி அவளின் வாழ்க்கை எவ்விதம் இருக்கப் போகிறதோ? அவளுக்கு ஏதேனும் உதவி செய்யக்கூடிய

# தாங்குவோமா, தலையில்லா மனிதனை?

மருத்துவ விஞ்ஞான உலகின் லேட்டஸ்ட் பரபரப்புக் கண்டுபிடிப்பு, செயற்கை இதயம். இதய மாற்று அறுவைச் சிகிச்சையும் செயற்கை இதயம் பொருத்துகிற முயற்சியும் ஏற்கெனவே நடைபெற்று வருவதென்றாலும் ஒட்டோவாவைச் சேர்ந்த டாக்டர் ராய்.ஜி. மாஸ்டர்ஸ் என்பவர் ஒரு நூதன முறை பற்றி விளக்குகிறார்.

அதன்படி, டிடானியத்தால் ஆன செயற்கை இதயம், முழுமையாக நவீனப்படுத்தப்பட்டு 2000ஆவது வருஷத்தில் நடைமுறைக்கு வந்து விடும் என்கிறார்.



"உங்க மனைவி ஊருக்குப் போனதற்காக வருத்தப்படறீங்களே ஏன்?"

"ஒரே நாள்ல திரும்பி வந்துடறேன்னு சொல்லிட்டா...!"

— பா. ஜெயக்குமார்

இது குறித்த ஆய்வுகளும் விவாதங்களும் உலகளவில் நடந்து கொண்டிருக்க, ''இந்த செயற்கை இதய சமாசாரம் நடைமுறைக்கு வருவதில் பல சிக்கல்கள் உண்டு'' என்கிறார் டாக்டர் செரியன். இது அவ்வளவாக ஒத்துவராது என்று கருதும் செரியன், ''மனிதனின் மரபணுக்கள் புகுத்தப்பட்ட பன்றியின் இதயம் வேண்டுமானால் மனிதனுக்கு ஏற்றதாக இருக்கலாமே தவிர, டிட்டானிய செயற்கை இதயம் நடைமுறைக்கு அத்தனை ஏற்றதாயிருக்குமா என்று ஐயமாயிருக்கிறது'' என்கிறார்.



• டாக்டர் செரியன்

இந்த செயற்கை இதயமாவது பரவாயில்லை. குளோனிங் டெக்னிக்கைத் தொடர்ந்து இங்கிலாந்தில் டாக்டர் ஜோனாதன் ஸ்லாக் என்பவர் தலையில்லாத தவளையை உருவாக்கிக் காட்டிவிட்டு, ''இதே மாதிரி தலையில்லாத மனிதனைக் கூட உண்டாக்க முடியும்'' என்றிருக்கிறார்.

எதற்காக உருவாக்க வேண்டும்?

''தலையில்லாத மனிதனை வாழவைக்கும் உத்தேசமில்லை. அவனது உடலுறுப்புகளை மட்டும் எடுத்து மாற்று அறுவைச் சிகிச்சைகளுக்குப் பயன்படுத்தலாமே!'' என்கிறார் இவர்.

'அப்படியா?' என்று செரியனிடம் கேட்டால், ''ஆளை விடுடா சாமி'' என்கிற பாணியில் அலறி, ''இது சாத்தியமில்லை என்று சொல்லமாட்டேன். பிறகு மனித குலத்துக்கு நேரும் கலவரங்களுக்கு யார் பொறுப்பு?'' என்கிறார்.

21ம் நூற்றாண்டு பல விந்தைகளை அரங்கேற்றப் போகிறது போலிருக்கிறது.

– மதுமனோ

வாய்ப்புக் கிடைத்தால் சந்தோஷமாய்ச் செய்ய வேண்டும்.

**கா**ந்தி நகர் வந்து விட்டது. பஸ் ஸ்டாப்பில் இறங்கி, முகவரி இருந்த டைரியை பார்த்து விசாரித்து, அந்தச் சின்ன தெருவுக்குள் சென்றேன். மாடி வீடு. மாடிப்படி ஏறினேன். சங்கர் கடைசியாய் இருந்த வீடு. அங்கு நிறைய போர்ஷன்கள் இருந்தன. மாடிப்படி ஏறவே இடைஞ்சலாய் இருந்தது. நல்ல வசதியான வாழ்க்கை வாழ்ந்த சங்கர், இங்கு குடியிருக்க நிறைய சிரமப்பட்டிருக்கலாம். ஆனால், அந்தச் சிரமத்தையும் சந்தோஷமாய் ஏற்றுக் கொண்டிருப்பான்.

வசதியாய் இருந்தால்தான் சந்தோஷம் வரும் என்பதெல்லாம் மனசு சொல்லும் பொய். எங்கும், எந்நிலையிலும் சந்தோஷமாய் இருக்கலாம் – மனசு சஞ்சலமாய் இல்லாதிருந்தால்.

முதல் மாடியில் கடைசி போர்ஷன். கதவு பூட்டியிருந்தது. சோர்ந்து போய்த் திரும்பியபோது, அவள் வந்து விட்டாள்.

"வாங்க... வாங்க!" – பேச்சில் பதற்றம் இருந்தது.

"நா... நா சங்கரோட அப்பா" என்றேன்.

"தெரியும்" என்று உள்ளே அழைத்துப் போனாள். என்ன பேசுவதென்றே தெரியவில்லை. சௌக்கியமா என்று கேட்க முடியாது. யாரும் சௌக்கியமாய் இல்லை. சந்தோஷமாய் இல்லை என்பதுதான் நிதர்சனம்.

"காப்பி சாப்பிடறீங்களா?"

"இருக்கட்டும்மா. என்னவோ தெரியலை. திடீர்னு மருமகளைப் பார்க்கணும்னு தோணிச்சு. சங்கரோட பிறந்த நாள். அவன் பொறந்ததுல இருந்து இன்னிக்குத்தான்..." அழுகை வந்தது. கட்டுப்படுத்திக் கொண்டு, "கையில என்ன?" என்றேன்.

"அவர் எப்பவும் ரத்த தானம் பண்ணணும்னு சொல்வார். அதான் ரத்த தானம் பண்ணப் போயிருந்தேன். அவர் பிறந்த நாள் இல்லையா...?"

குபீர் என்றது – அவள் சொன்னது. இறந்த பிறகும் அவன் செய்து வந்த ஒரு நல்ல காரியத்தை அவனுக்குப் பிறகு நாம் செய்வதுதானே அவனுக்கு நாம் செய்யும் சிறந்த அஞ்சலி? அவனது பிறந்த நாளை நாம் உண்மையாக நினைவுகூர்வதற்கு அர்த்தமாகும்!

இதுநாள் வரை இவளைப் புறக்கணித்ததற்காக – என் மீது எனக்கே கோபமாய், எரிச்சலாய் வந்தது. ●




மலைகளும் குன்றுகளும் சூழ்ந்த அந்த மேட்டுப் பகுதியில் ரஷ்ஷூவின் கிளைடர் நின்று கொண்டிருந்தது. இங்கே எப்படி? ஆகாயத்தில் வேலை என்றவனுக்கு தரையில் இங்கே என்ன வேலை? மெதுவாகக் கிட்டே சென்றான் சூர்யா. இருக்கை காலியாக இருந்தது.

''ரஷ்ஷூ!'' – ஊஹூம்.

''ரஷ்ஷூ...!'' – பதிலில்லை. எங்கே போனான்? என்ஜினைத் தொட்டுப் பார்த்தான். சூடு ஆறிப் போயிருந்தது. வந்து ரொம்ப நேரமாகியிருக்கிறது.

''ரஷ்ஷ்...ஷூ... ஷூ...'' – தன் பலம் கொண்ட மட்டும் உரக்க கத்திப் பார்த்தான். ஊஹூம் நிசப்தம். ஒருவேளை... ஒருவேளை... மயிர்க்கால்கள் விறைத்துக் கொண்டன. செவ்வாய் கிரக ஜீவராசிகள் ஏதாவது...

குப்பென்று பயம் கவ்விக் கொள்ள விரைவாய் லேசர் கன்னை தூக்கிப் பிடித்துக்கொண்டான். ஸ்விட்ச்சில் தயாராய் ஆள்காட்டி விரல். கூப்பிட்டுக்கொண்டே நடந்தான். ஆனால் அவன் இருப்பதற்கான அறிகுறியே தெரியவில்லை. பயமும் துக்கமும் கவ்விக் கொள்ள, நடந்து கொண்டேயிருந்தான். எதிரே உயர்ந்த மலை ஒன்று நிற்கிறது. எவ்வளவு உயரம்! மேலே இலேசாய்ப் புகை கசிந்துகொண்டிருந்தது. இது... இது... எஸ். இதுதான் "நிக்ஸ் ஒலிம்பிகா" எரிமலையாயிருக்க வேண்டும். வேகம் தணிந்து விட்ட நிலை போலும். அதை பார்த்துக்கொண்டே வர தூரத்தில் அதன் இடது பக்கமாக சலனம் தெரிந்தது. பைனாகுலர் எடுத்தான். ரஷ்ஷூவேதான்! நடந்து கொண்டிருந்தான். கையில் ஒரு கறுப்புப் பெட்டி. என்னவாயிருக்கும்? அவனைப் பிடிக்க வேண்டும். வேகமாக ஓடினான்.

"ரஷ்...ஷ்...ஷூ...ஷூ...!" – திரும்பியவன்

# தேடித் தேடி

## 11

செய்யாறு தி. தா. நாராயணன்

திடுக்கிட்டு, பின்பு பெட்டியை பின்பக்கம் மறைத்தபடி கூப்பிட கூப்பிட ஓட்டமாய் ஓட ஆரம்பித்தான்.

"ரஷ்ஷு...! ஓடாதே நில்!" - சூர்யாவும் விடவில்லை. எப்படியும் அவனைப் பிடித்து அந்தப் பெட்டியில் என்னவென்று பார்க்க வேண்டும். ரகசியம் தெரிந்து விடும். முழு மூச்சாய் ஓடி ஓடி...

இல்லை... அவனால் முடியவில்லை. அவன் வேகத்துடன் போட்டி போட முடியவில்லை. சற்று நேரத்தில் கிளைடர் கிளம்பும் சப்தம் கேட்டது. அதைத் தொடர்ந்து வானத்தில் அது எழுந்து, ஒரு வட்டமடித்து விட்டு மறைந்தது. எதையாவது ஒன்று கிடக்க ஒன்று செய்து மாட்டிக் கொள்ளப் போகிறானே என்றிருந்தது. அப்படி என்கிட்ட மறைக்க என்னதான் ரகசியம்? கீழே அப்பாவிடம் பேசிப் பார்க்கலாமா? ஊஹூம் எல்லோரும் சேர்ந்து திட்டமிட்டுத்தானே இந்த நாடகமாடுகிறார்கள். "நத்திங் சூர்யா" என்று சிரிப்பார்.

அந்த இடத்திலேயே நெடு நேரம் உட்கார்ந்திருந்தாள். தனிமை இப்போதெல்லாம் கிலியூட்டுவதில்லை. செவ்வாய் கிரகவாசிகள் பற்றிய பயம் அறவே தெளிந்திருந்தாலும், அவ்வப்போது எட்டிப் பார்த்துக்கொண்டு தானிருந்தது. பேய்கள் பற்றிய நம் நம்பிக்கை போல.

எல்லா எண்ண ஓட்டங்களையும் ஒதுக்கி விட்டு, விட்ட இடத்திலிருந்து தன் வேலையைத் தொடங்கினாள். சிலவகை ட்யூட்ரியம் பொதிந்த பாறைகள் மண் மாதிரிகள், சிலிக்கான் பாறையின் மாதிரிகள்... ஆயிற்று. எல்லாவற்றையும் சேகரித்து பேக் பண்ணி முடித்தபோது மாலை நெருங்கிவிட்டது. சூரியன் மறைய ஆரம்பித்திருந்தது. மேகங்கள் கருக்கத் தொடங்க, ஜில்லென்று குளிர்காற்று. சற்று நேரத்தில் மழை வரும் அறிகுறி. வண்டியைக் கிளப்பி ராக்கெட்டைச் சென்று அடைவதற்குள் சடசடவென்று பிடித்துக் கொள்ள, காற்றும் சுழன்று சுழன்று அடிக்க, நனைந்தபடியே தட்டுத் தடுமாறி ராக்கெட்டிற்கு வந்து சேர்ந்தாள்.

உள்ளே யாருமில்லை. ரஷ்ஷு...! இன்னும் வந்திருக்க மாட்டான். கோபக்ஸ் எங்கே போயிற்று? உணவு வில்லைகள் சிலதை கொறித்துவிட்டுச் சாய்ந்தாள். காலையிலிருந்து பட்ட அலைச்சலில், சாய்ந்தவுடன் தூக்கம் சொக்கியது. வெளியே காற்றும் மழையும் அசுர கதியில் நறநற வென்று அடித்துக் கொண்டிருந்தன.

அசந்து தூங்கிக் கொண்டிருந்தாள். இன்றைக்குக் கூடுதல் வேலை. இன்றுடன் நூறு கிலோ மீட்டர் ரேடியஸ் தூரம் கவர் பண்ணியாயிற்று. அங்கங்கே பழமர வித்துக்களை ஊன்றி, ஊன்றி தண்ணீர் விட்டு ஏக களைப்பு.

உயரமான மலை. செங்குத்து. ஒரு சவாலாய் அப்பாவும் பெண்ணும் ஏறுகின்றார்கள். அப்பாவின் கையைப் பிடித்துக்கொண்டிருக்கிறாள். மூச்சுத் திணறுகிறது. முடியவில்லை. கையை உதறி விட முயற்சி செய்கிறாள். அப்பா விடவில்லை. அவளை மேலே இழுக்கிறார். "சீக்கிரம் வாம்மா!" தரதரவென்று இழுத்துச் செல்கிறார். உயரம் அவளுக்கு பயமாக இருக்கிறது. "அப்பா... அப்பா!" - அவர் நிற்கவில்லை. மலை உச்சியை நெருங்கியாகி விட்டது. கீழே கிடுகிடு பாதாளம். நிற்பதோ செங்குத்துப் பாறை. இம்மி அசைந்தாலும் அதள பாதாளம் இழுத்துக்கொண்டு விடும்.

ஆளைத் தூக்கும் காற்று. தலை சுற்றுகிறது. நிதானமாய் நகர்கிறார்கள். உச்சி குறுகலாய் இருக்கிறது. அந்த நேரம் பார்த்து ஒரு சின்னக் கல் கனம் தாளாமல் 'ப்ளக்' என்று பெயர அப்பா நிலை தடுமாறி, சுதாரிக்க முயன்று முடியாமல் கீழே பாய... "அப்பா.... அப்பா...!" சூர்யா அவர் கையை தன் பலம் கொண்ட மட்டும் பிடித்து இழுத்தான். அவரும் உயிரின் கடைசி நிமிட போராட்டமாய், தன்னைக் காப்பாற்றிக் கொள்ள, கிடைத்ததைப் பிடிக்க அலைந்து முடியாமல்...

கீழே... கீழே... போய்க் கொண்டேயிருந்தார்.

"சூர்யா! ஜாக்கிரதை. தம்பியைக் கவனித்துக் கொள். ஜா...க்...கி..." - அவர்

"நா காணாமல் போயிட்டேன்னு என் கணவர் புகார் தந்து போட்டோவும் குடுத்திருப்பாரே..."

"ஆமா... அது நீங்கதானா?"

"அந்த போட்டோ நல்லா இருக்காது... டீவில போட வேற நல்ல போட்டோ தந்துட்டுப் போகத்தான் வந்தேன்!"

— அம்பை தேவா

குரல் தேய்ந்துக்கொண்டே போய் இறுதியில் மறைந்து விட்டது.

"அப்பா... அப்பா...!" - தொண்டை கிழிய கத்துகிறான் நெஞ்சையடைக்கிறது. அப்பா! ஐயோ! அப்பா!"

சே! கனவு. எழுந்து உட்கார்ந்தான். உடல் தொப்பலாய் நனைந்து விட்டிருந்தது. முகமெங்கும் முத்து முத்தாய் வியர்வை. வெளியே இன்னும் இலேசாய்த் தூறிக் கொண்டிருந்தது. நேரம் பார்த்தான். இரவு ஒரு மணி. அங்கே ரஷ்ஷூவின் படுக்கை காலியாயிருந்தது. கோபக்ஸூம் காணவில்லை. எங்கே இவர்கள்? ஒருவேளை இன்னும் திரும்பவில்லையோ. ஒரு நோட்டம் பார்த்தான். இல்லை. ரஷ்ஷூவின் படுக்கை விரிக்கப்பட்டிருக்கிறது. கோபக்ஸின் இருக்கையும் இடம் மாறியிருக்கிறது. வந்து விட்டார்கள். எங்கே அவர்கள்?

வெளியே இப்போது கடுங்குளிர். மைனஸ் நாலு டிகிரி.

மேலும் கீழும் மூன்று சேம்பரிலும் தேடிப் பார்த்தான். இல்லை. மெதுவாக நடந்து எக்ஸிட் கதவைத் தொட்டான். திறந்துகொண்டது. திறந்தவுடன் ஜில் வென்று குளிர் தாக்கியது. ஓவர்கோட்டை எடுத்து மாட்டியபடி வெளியே கால் வைத்தான். மழை விட்டுப் போயிருந்தது.

எங்கிருந்தோ கிசுகிசுவென்று பேசும் குரல் கேட்கிறது. சூர்யா ஒவ்வொரு அடியாக மெதுவாக இறங்க, சற்று தூரத்தில் ஒரு பாறையின் மீது இருவரும் இவனுக்கு முதுகைக் காட்டிக்கொண்டு உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். ரஷ்ஷூ குளிருக்காக கம்பளி கோட்டில் இருந்தான். ரஷ்ஷூவின் பக்கத்தில் அந்த கறுப்புப் பெட்டி. காதை கூர்மையாக்கிக் கொண்டான்.

"கோபக்ஸ்! ஹைட்ரஜன் பாம் சரியான தேர்வு."

"எப்படி மிஸ்டர் ரஷ்ஷூ?"

"அதன் செயல்தான் அட்டாமிக் ஃப்யூஷன். அளவு கடந்த உஷ்ணம். நாம் எதிர்பார்க்கும் எஃபெக்ட்."

"எஸ்...எஸ்... வெப்பம் ஏறக்குறைய பிளாஸ்மா ஸ்டேட்டுக்கு. எல்லாம் பொசுங்கி விடும்" - சூர்யாவை பார்த்து விட்டு கோபக்ஸ் டக்கென்று பேச்சை நிறுத்தி விட்டது. உடனே சூர்யா உஷாராகி விட்டான்.

"ஹேய்! ரஷ்ஷூ...!"

ரஷ்ஷூ திடுக்கிட்டுப் போய் விலுக்கென்று எழுந்து பெட்டியைப் பின்பக்கம் மறைத்தவாறு படு கேஷூவலாய் வந்து கிட்டே நின்றான்.

"தயவு செய்து யாராவது உண்மையைப் பேசுங்க. என்ன செய்யறீங்க இங்கே?"

"சந்தேகமா?" - ரஷ்ஷூ சிரித்தான்.

"நீ அசந்து தூங்கிக்கொண்டிருந்தாய். எனக்குத் தூக்கம் வரவில்லை. கோபக்ஸூக்கு தூக்கம் என்பது அதன் ப்ரோக்ராமில் இல்லை. உன்னை டிஸ்டர்ப் செய்ய வேண்டாமென்றுதான் இங்கே வந்து பேசிக் கொண்டிருக்கிறோம்."

"பொய்... பொய்... அந்த கறுப்புப் பெட்டியில் என்ன? ஏன் மறைக்கறீங்க? இப்போதே எனக்கு உண்மை தெரிஞ்சாகணும். விட மாட்டேன். ஹைட்ரஜன் பாம் ஐ -

பற்றி ஏதோ சொன்னீர்களே என்ன? கமான், கம் அவுட்."

ரஷ்ஷுக்கு முகம் மாறியது. சற்று நிதானித்து அப்புறம் பேச ஆரம்பித்தான்.

"அக்கா! ப்ளீஸ் இனிமேல் இது சம்பந்தமாய் எதுவும் கேட்க வேண்டாம். ரகசியம்."

"என்னிடமா ரஷ்ஷு?" - அவனைப் பிடித்து உலுக்கினாள். கோபக்ஸ் குறுக்கிட்டு அவளை விலக்கியது.

"சூர்யா! மீண்டும் மீண்டும் தொந்தரவு செய்யாதீர்கள். ரகசியம் என்றால் ரகசியம் தான். காப்பாற்றப் பட வேண்டியது முக்கியம். இது உங்களுக்கு எச்சரிக்கை. என் அனலைஸிங் நியூரான்களுக்கு உறவு தாட்சண்யம் தெரியாது. அப்புறம் உங்களை எதிரியாக பாவிக்க வேண்டி வரும். எதிரிகளுக்கு என் தண்டனை எப்போதும் மரணம்தான்" - சொல்லி விட்டு அது லேசர் துப்பாக்கியின் மேல் கை வைத்தது.

அவள் செய்வதறியாது ஒரு நிமிடம் குழப்பமாய் நின்றாள். சுதாரித்துக்கொண்டு ஆத்திரம் மேலிட எதைப் பற்றியும் கவலையின்றி இரண்டு எட்டில் பாய்ந்து, ரஷ்ஷுவிடமிருந்த கறுப்புப் பெட்டியை அவன் ஜாக்கிரதையில்லாமல் நின்றிருந்த அந்த தருணத்தில் பிடுங்கிக்கொண்டு தூர ஓடிப் போய் உள் வாங்கித் திரும்பி நின்றாள். ஒரு சில வினாடிகள் போதும். அவர்கள் ஓடி வருவதற்குள் திறந்து பார்த்து விட வேண்டும். அவசரமாய்த் திறக்க முயற்சி செய்தாள். கடினமாய், திறக்க முடியவில்லை. எந்தப் பக்கமாய்த் திறப்பது? என்று தெரியாமல் தடுமாறி அவசரமாக மேலும் கீழுமாய் திருப்பித் திருப்பி ஆராய, அந்த சொற்ப நேரம் கோபக்ஸுக்கு போதுமானதாக இருந்தது.

ஒரே பாய்ச்சல். தடுத்த சூர்யாவின் கையை எந்திரமாய்ப் பற்றி, பின்பக்கமாய் முறுக்கி பெட்டியைப் பிடுங்கிக்கொண்டு, அவள் அலற அலற கலபமாய்த் தூக்கி தூர வீசியது. எல்லாம் கண் இமைக்கும் நேரத்திற்குள்.

என்ன முரட்டுத்தனம்! இவ்வளவு வன்முறையை அவள் எதிர்பார்க்கவில்லை. தோள் பட்டையில் வலி பொறுக்க மாட்டாமல் கீழே புரண்டாள். அத்தனை வலியிலும் அதுகூட அவளுக்குப் பெரிதாய் தெரியவில்லை. எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டு, கொஞ்சம்கூட சலனமில்லாமல் ரஷ்ஷு நின்று கொண்டிருந்தான்.




"டி.வி பெட்டி மேல் வேப்பிலைக் கொத்து கட்டியிருக்கியே! எதுக்குடா?"

"திகில் தொடர்களில் வருகிற ஆவி, பேய் எதுவும் வீட்டிலிருக்கிறவர்களை அடிச்சிடாம இருக்கத்தான்!"

— உ. ராஜாஜி

"ரஷ்ஷு! சிரிக்கிறியாடா?"

அவன் விருட்டென்று திரும்பி கோபக்ஸை இழுத்துக்கொண்டு ராக்கெட்டை நோக்கிச் சென்றான். சூர்யா அசையாமல் கிடந்தாள். கண்கள் ததும்பின. ஹும் இவனா என் ரத்தம்? இருவருமே அபாயகரமானவர்கள். என்னைக் கொல்லவும் தயங்க மாட்டார்கள். அதுதான் யந்திரம்...! இவன் புத்திக்கு என்னாச்சு? எல்லாம் மூளைச் சலவை செய்திருப்பார்கள். கோபக்ஸ் எதைச் சொல்லியோ முடக்கி வைத்திருக்கிறது. அது ஒன்றும் கஷ்டமில்லை. ரஷ்ஷுவுக்குப் பகுத்தாராயும் குணம் கம்மி. எடுப்பார் கைப்பிள்ளை. ஆல்ரைட்! இதுவரை நடந்தது போதும். ஒரு யந்திரம் மனிதர்களை அடக்கி வைத்திருப்பதை அனுமதிக்க முடியாது, அனுமதிக்கக் கூடாது. அப்புறம் இவைகளையெல்லாம் உருவாக்கிய மனிதனின் மூளைக்கு அர்த்தமேயில்லை. ஒரே செயல் அதன் இயக்கத்தை நிறுத்தி விட வேண்டும். எஸ்! நிதானமாய்த் திட்டம் போட்டு ஜாக்கிரதையாய்ச் செய்ய வேண்டும். நமக்குத் தெரியாத புதிய மாடல் என்றாரே அப்பா. டேஞ்ஜரஸ் என்றுகூட சொல்லியிருக்கிறார். நிறைய யோசிக்க வேண்டும். அது கண்டதுக்கெல்லாம் லேசர் கன்னைத் தூக்கி விடும்.

"உன்னை தீர்த்திடறேன்!" - சூர்யா கோபத்தில் கத்தினாள். வேண்டாம். ஆத்

## புகைகளுக்கு 'முட்டை தெரபி'



**ட்ரக் அடிக்ட்ஸ் மற்றும் புகை பிடிப்பவர்களுக்கு ஒரு வர பிரஸாதம். மலேசியாவில் ஒரு மருந்து கம்பெனியினர் 'முட்டை தெரபி' முறையை அறிமுகப்படுத்தியுள்ளனர். இதன்படி மேற்கண்டவர்களின் உடலில் முட்டை தேய்க்கப்படுகிறது. அப்போது அவர்கள் கண்களை மூடிக்கொண்டு இருக்க வேண்டும். கூடவே புனித குரானிலிருந்து சில குறிப்பிட்ட பகுதியையும் கூறுகின்றனர். இந்த சிகிச்சைக்குப் பிறகு ட்ரக் மற்றும் புகை பிடிக்கும் எந்தப் பழக்கத்துக்கும் பெரிய கும்பிடுதானாம். அந்தப் பக்கம் தலை வைத்துக்கூட படுப்பது இல்லையாம்.**

**நன்றி: இந்தியன் எக்ஸ்பிரஸ்.**

**தகவல்: மஞ்சு தேவன்**

திரத்தில் செய்யும் காரியம் பாழாகி விடும். மனசை ஒரு நிலைக்குக் கொண்டு வர முயற்சி செய்தாள். மாலிக்யூலர் கம்ப்யூட்டிங் III ஸ்டேஜில் சில நியரம்களை மனத்திற்குள் அசை போட ஆரம்பித்தாள். கொஞ்ச நேரத்தில் மனக் குமைச்சல் அடங்கித் தெளிவு வர, மெதுவாய் எழுந்தாள்.

கொஞ்ச நாட்கள் பொறுத்து அதன் இயக்கத்தை 'வாட்ச்' பண்ண வேண்டும். பவர் இன்புட் எங்கே என்று தேட வேண்டும். ஒருகணம் அப்பாவிடம் சொல்லலாமா? என்று நினைத்தாள். வேண்டாம். கூடாது. டென்ஷன் மனிதர். சந்தோஷங்களை மட்டுமே அவருடன் பகிர்ந்து கொள்வதுதான் நல்லது. என்னவோ தெரியவில்லை. கொஞ்ச நாட்களாக அப்பா லைனில் கிடைக்க மாட்டேன்கிறார். கேட்டால் அவுட் ஆஃப் ஹெட்குவார்ட்டர்ஸ் என்று மொட்டையாய் பதில் வருகிறது. அவர் ஆத்ம நண்பர் மயன் அங்கிளைக் கேட்கலாமென்றால் அவரும் கிடைப்பதில்லை. என்னாயிற்று? இன்றைக்கும் முயற்சி செய்வோம். விடுவதில்லை.

அன்றைக்கு மாலை சீக்கிரமே ரஷ்ஷு வந்து சேர்ந்துவிட்டான். கொஞ்ச நேரம் கழித்து எங்கிருந்தோ கோபக்ஸ் வந்து சேர்ந்தது. சூர்யா மத்தியானமே வந்துவிட்டிருந்தாள். படுக்கையில் உட்கார்ந்திருந்தாள். பூமியிலிருந்து வந்த செய்தி, அவளை இடியாய்த் தாக்கியிருந்தது. அழக்கூட முடியாமல் பயத்தில் நாக்கு வறண்டு விட்டிருந்தது. எப்படியாவது அப்பாவுடன் பேச வேண்டும் என்று தரைக் கட்டுப்பாட்டு நிலையத்துடன் தொடர்பு கொண்டபோது வழக்கம்போல் அப்பா அவுட் ஆஃப் ஹெட்குவார்ட்டர்ஸ் என்று பதில் வந்தது. ஒரு நிமிடம் இடைவெளி விட்டு ஒரு அனாமதேய செய்தி. யார் அனுப்பினார்கள்? தெரியவில்லை. சங்கேத வார்த்தைகளை உபயோகித்திருந்தார்கள்.

"என்னக்கா உடம்புக்கு?"

''ஒன்றுமில்லை'' - எழுந்து நெட்டி முறித்தாள்.

''சொல்லு... அழுதிருக்கிறாய். என்ன விஷயம்?''

கோபக்ஸும் அருகில் வந்தது.

''இன்னும் கொஞ்ச நாட்களில் கிளம்பலாம். கவலை வேண்டாம் சூர்யா! விரைவில் உங்கள் அப்பாவைப் பார்க்கப் போகிறீர்கள்."

உடனே சூர்யா கத்த ஆரம்பித்தாள்.

"ஸ்டாப் இட்! என்ன பாசாங்கு? இதெல்லாவற்றையும்கூட உன் சிஸ்டத்தில் சேர்த்திருக்காங்களா கோபக்ஸ்? போதும்... போதும்.. இன்று உன் நோக்கத்தை தெரிந்து கொண்டு விட்டேன். கீழிருந்து எனக்குத் தகவல் சொன்னார்கள்." சொல்லிவிட்டு முகத்தை மூடிக்கொண்டு குலுங்கினாள்.

"கண்டதைக் கற்பனை செய்துகொண்டு அழாதே சூர்யா! என்னத்தை தெரிந்து கொண்டாய்?"

"S.E - RENO - 2200" - என்று சொல்லிவிட்டு கோபக்ஸை அழுத்தமாய் பார்த்தாள். அந்த வார்த்தையைக் கேட்ட மாத்திரத்தில் கோபக்ஸ் அசையாமல் நின்றுவிட்டது.

(தொடரும்)

# ஆரோக்கியமான தூக்கத்திற்கு அருமருந்து!



DP Foam வழங்கும் PUF மெத்தைகள், கனிந்து வரும் முதுகளுக்கு மிருதுவான மருந்து. நாளெல்லாம் உழைத்த சோர்வு தீர உறங்க சுகமான படுக்கைகள். **DP Foam** மெத்தைகள் மற்ற **Foam** மெத்தைகளைவிட அடர்த்தியாக இருப்பதால் முதுகிற்கு இதமான பாதுகாப்பு தருகின்றன. நீண்டகாலம் உழைக்கின்றன. பருத்தி மெத்தைகளில் ஆவது போல் தூசி படாது. சுருட்டலாம். சுலபமாக மடித்தும் வைக்கலாம்.

குடும்பத்தில் அனைவரும் நிம்மதியாக தூங்கி புத்துணர்ச்சியுடன் விழித்தெழ, உங்கள் மெத்தைகள் **DP Foam** ஆக இருக்கட்டும்.

**DP Foam** ஸ்வீட் ட்ரீம்ஸ் மெத்தைகள், காண்டோர் தலையணைகள், அதிஅடர்த்தி மெத்தைகள், கன்வல்யூட் மெத்தைகள், கேரி கட், ஸ்போர்ட் ஷீட்ஸ் மற்றும் போல்ஸ்டர்கள், சென்னையிலும் பாண்டியிலும் உள்ள எங்கள் கம்பெனி கடைகளில் மட்டுமே கிடைக்கும்.




Sweet Dreams

Mattresses

**துடிப்பான துவக்கத்திற்கு, நிம்மதியான இரவுகள்.**




- **சென்னை:** 180, லஸ் சர்ச் சாலை, கடை எண் 29, **T. N. H. B.** ஷாப்பிங் காம்ப்ளெக்ஸ், லஸ் கார்னர், மைலாப்பூர், சென்னை-4. (காமதேனு தியேட்டர் அருகில்) போன்: 498 2663.
- **பாண்டிச்சேரி:** 13, ரங்கப்பிள்ளை தெரு, பாண்டிச்சேரி-605001 போன்: 221095

FIDELIS -DP FOAM-366

## வீடில்லாமல் வாடுபவர்கள்

மஹாராஷ்டிரத்தில் அமைச்சராகியும் வீடில்லாமல் திண்டாடுபவர்கள் நிலை 'அந்தோ பரிதாபம்'! 'ஹவுஸிங்' மினிஸ்டர் நவாப் மாலிக்குக்கே 'ஹவுஸ்' இல்லை என்றால் நிலைமையின் பயங்கரத்தைப் பார்த்துக் கொள்ளுங்கள்! செடி கொடிகளை 'ட்ரிம்' பண்ணுவது போல் எங்கள் முதல்வரும் தன் அமைச்சரவையை வெட்டி ஒட்டித்தான் பார்த்தார். அப்படியும் 61-லிருந்து 55 ஆகத்தான் ஆக்க முடிந்திருக்கிறது. இவர்கள் உட்காரவே, முதலில் இடமில்லை; அப்புறம்தானே வசிப்பதைப் பற்றிச் சிந்திப்பதற்கு? மந்த்ராலயத்தின் (தலைமையகம்) நாலாவது மாடியில், விஸிட்டர்களுக்கென ஒதுக்கப்பட்ட இடத்தில் தற்சமயம் ஸ்டீல் கப்போர்டுகளை வைத்து, சின்ன அறை போல அமைத்து, அங்கே குமாஸ்தாக்களை அமர்த்தி விட்டு, அவர்கள் இருந்த இடத்தி லெல்லாம் அமைச்சர் களுக்கு இட மொதுக்கப் பார்க்கிறார் கள். இப்படியே ஆறு மாடிகளிலும் கொஞ்சம் "அட்ஜஸ்ட்மெண்ட்" செய்து மற்றவர்களைத் திணிக்கலாம். ஆனால் காலியான கஜானாவை வைத்துக் கொண்டு, பங்களாக்களுக்கு எங்கே போவது? "ஸ்டேட்-லெவல்-கலாமிடி" என அறிவித்து ஏதாவது அமைச்சர்கள் நிவாரண நிதி திரட்டுவார்களோ?

## தீப ஒளி போதாதா?

இப்படிக் கேட்டவர்கள் ஜெயா பச்சன், எஸ்.பி. கோத்ரெஜ், கவாஸ்கர் வகையறா வி.ஐ.பிக்கள். வெடிச் சத்தத்தால் காது செவிடாகிப் போகும் பயங்கரத்தைப் பிட்டுப் பிட்டு வைத்தார்கள். நவம்பர் மாதத்தில் ஏற்கெனவே இருக்கும் பனி மூட்டத்துடன், மும்பையில், ஸல்ஃபர், கார்பன், வாகனங்கள் வெளியிடும் புகை, பட்டாசு மத்தாப்பு புண்ணியத்தில் எழும் மேகங்கள் எல்லாமாகச் சேர்ந்து கொண்டு தீபாவளி போனஸாக, ஆஸ்த்துமா, ப்ராண்கைடிஸ், ஹைபர் டென்ஷன், இன்ஸோம்னியா இன்னபிற வியாதிகளை அள்ளி வழங்கும் கொடுமையை சுற்றுச் சூழல் பாதுகாவலர்களுடன் சேர்ந்து கொண்டு பட்டியலிட்டார்கள்.

# மும்பையின் ஹீரோயின் அஸ்தானியாம்!

வருடந்தோறும் 24,000 பெரியவர்களும், 2.2 லட்சம் சிறியவர்களும் மூச்சுத் திணறல் சம்பந்தப்பட்ட வியாதிகளால் அல்லலுறுவதாக எல்லோருமே கூக்குரலிட்டாலும், மும்பை மாநகராட்சி மட்டும், "பொலயூஷனா... அப்படி என்றால்...?" என்கிறது!



• மாதுரி தீட்சித்



அண்ணன் அஜீத்தின் மீது பாசம் என செக்ரட்டரி "ரிக்கு" (ராகேஷ் நாத்) சொல்லி வந்ததைக் கஷ்டப்பட்டு ஜீரணித்துக் கொண்டது. இப்போது ரிக்குவே, "இது அண்ணன் ஏற்பாடு செய்த அரேன்ஜ்ட் மேரேஜ்" என்று சொல்வதையும் நம்பித் தொலைக்கிறது. அப்படி ஒன்றும் இவர் சினிமாவைத் தியாகிக்கப் போவதாகவெல்லாம் சொல்லவில்லை; ஹவாய்யில் குட்டி ஹனிமூனை முடித்துக் கொண்டு மும்பை பறந்து வந்து விட்டார். தலைத்தீபாவளியைக் கூட இங்கேதான் (தனியாக...?) கொண்டாடினார். திருமணமும், மஹாராஷ்ட்ரிய பிராமணர்களின் முறைப்படிதான் செய்து கொண்டாராம்; ஜாதகப் பொருத்தமும் பார்க்கப்பட்டதாம். இரண்டு சகோதரிகள், ஒரு சகோதரர் ஏற்கெனவே அமெரிக்காவில் செட்டிலாகி விட்ட நிலையில், இவரும் அங்கேயே நிம்மதியாக செட்டிலாகாமல், "பொருத்தமான ரோல்களில் நடிப்பேன்" எனச் சொல்லிக் கொண்டு மும்பை "செட்" களை சுற்றி வருகிறாரே? "பீவி (மனைவி) நெ.1"ஐக் காட்டிலும் "ஹீரோயின் நெ.1"ல்தான் நாட்டம் அதிகம் போலும்!

## நெஞ்சம் மறப்பதில்லை

'பட்டாக வெடிக்காதீர்கள்' என ஆளாளுக்குக் கதறுகிறார்களே, எங்கேயாவது தீபாவளி களையிழந்து விடப் போகிறதே என்ற கவலை மாதுரி தீட்சித்திற்கு! சமயம் பார்த்து வீசினார் ஒரு ஆட்டம்பாமை! ஆடிப் போய் விட்டனர் அவர் விசிறிகள்! அக்டோபர் 17ம் தேதியே அவருக்குத் திருமணம் ஆகிவிட்டதாமே! அதுவும் லாஸ் ஏஞ்சல்ஸில்! அறுவையாளர் (சர்ஜன்தான்) ஸ்ரீராம் நேநேவைக் கட்டிக் கொண்டு ஏராளமான கனவுக் கண்ணன்கள் நெஞ்சில் குத்தீட்டியைப் பாய்ச்சுவதற்கு தீபாவளிக்கு முன் தினம்தானா முகூர்த்தம் பார்க்க வேண்டும்? கொஞ்ச காலமாகவே இவர் அமெரிக்காவுக்கு அடிக்கடி போய் வருவதில், "குச் குச் ஹோதா ஹை" (என்னவோ விஷயமிருக்கிறது) என மீடியா கவலைப்பட்டுக் கொண்டிருந்தது.

பி.கு : மும்பையின் ஹிட்லர் யார் தெரியுமா? அத்வானியாம்! மனித சமூகத்துக்கு எதிராக அக்கிரமங்கள் செய்த மனிதர்களின் சித்திரங்களை மாட்டி வைத்திருக்கும் "Museum of Tolerance" (லாஸ் ஏஞ்சல்ஸ்), இடிஅமீன், சதாம் ஹுசைன் போன்றோருடன் இவர் படத்தையும் மாட்டி, இப்படி ஒரு தலைப்பும் கொடுத்திருக்கிறது...! அதுவும் 1993லேயே! இப்போதுதான் சுனில் ஆகி (இந்திய... அமெரிக்க அரசியல் அமைப்பு) என்பவர் எதிர்ப்புக் குரல் எழுப்பியிருக்கிறார். நம்மவர்களிடையே இவ்வளவு Tolerance ஆ?

— ஜெயஸ்ரீ ராஜ்



• எப்போ....



• ... வருவாரோ?

● எஸ். ராமசுப்பிரமணியன், தூத்துக்குடி.
? இந்தத் தொடரில் டெண்டுல்கரின் ஆட்டம் எப்படி?
! முதல் ஒருநாள் டெஸ்டில் கோட்டை விட்டாலும் இரண்டாவது ஒருநாள் டெஸ்டில் தனியாகவும் ராகுலுடன் இணைந்தும் புதிய சாதனைக் (ரிகார்ட்) கோட்டைகளை எழுப்பி அசத்தி விட்டாரே!

● அரு. நாச்சம்மை, ஈரோடு – 3.
? இந்தியாவில் எத்தனை சர்க்கஸ் கம்பெனிகள் இருக்கின்றன?
! அரசியல் கட்சிகளை இப்படியெல்லாமா கிண்டலடிப்பது!

● ஜான் சாமுவேல், மும்பை – 19.
? ஒரிசாவில் புயல், மழை அழிவு பயங்கரம், மத்திய அரசின் விலை ஏற்ற நடவடிக்கைகள்... தீபாவளியை எப்படிக் கொண்டாடினீர்கள்?
! முதல்வரின் கோரிக்கையை ஏற்று என்னால் இயன்ற அளவில் ஒரு தொகையை ஒரிசா புயல் நிவாரண நிதிக்கு அனுப்பி வைத்து ஆறுதல் அடைந்த நிலையில் அடக்கமாகக் கொண்டாடினேன்.

● ராமகிருஷ்ணன், காயக்காடு.
? அரசின் நலத்திட்டங்கள் முழுமையாகக் கிடைத்து, மக்கள் நல்வாழ்வைப் பெற ஏதாவது ஒரு வழி சொல்லுங்களேன்?
! நல்வாழ்வுக்கு வழி அரசு நலத் திட்டங்கள் அல்ல – (குறிப்பாக இலவசத் திட்டங்கள்) அவற்றைத் தவிர்த்து வேலை வாய்ப்புகள் உருவாக்கி, கல்விப் பெருக்கத்துக்கு வழி செய்தாலே நல்வாழ்வு அமையும்.

● கே. ராஜேந்திரன், மருதாடு.
? கி.பி. 2001-இல் காமராஜர் ஆட்சி அமைப்போம் என்று மூப்பனார் பேசியுள்ளாரே?
! 'ஜெ' துணையோடு என்று அவர் பேசி விடவில்லையே! அந்த மட்டில் சந்தோஷப்படுங்கள்.

● ஆர். பி. ப்ரியன், வேலூர் – 1.
? தீபாவளிக்கு ரிலீசான புதிய திரைப் படங்களில் ஜெயித்த முதல் படம் எது?
! முதல்வன்தான்! இரண்டாவது முதல்வனிடமிருந்து வெகு தூரத்தில் அமைந்திருக்கிறது என்பது முதல்வனின் மதிப்பைக் கூட்டுகிறது.

# தீபாவளி ரிலீஸில் முதல் படம்

• அறியாய சமாதானம்!







• 'தனி' மகிழ்ச்சி

• 'அப்பா' அரசியல்!

● மல்லிகை மன்னன், மதுரை – 17.
? "இரண்டு ரூபாய் டிக்கெட்டை 45 ரூபாய் கொடுத்து வாங்கி சினிமா பார்க்கத் தயங்காத மக்கள் மண்ணெண்ணெய், டீசல் விலை உயர்வைக் கண்டு வயிற்றெரிச்சல்படுவது என்ன நியாயம்?" என நெற்றிக்கண் திறக்கிறாரே வாழப்பாடி?
! இதைத்தான் வெந்த புண்ணில் வேல் பாய்ச்சுவது என்று சொல்வது. இரண்டு ரூபாய்க்கு சினிமா டிக்கெட் எங்கே கிடைக்கிறது என்று முதலில் வாழப்பாடி சொல்லட்டும். அதை 45 ரூபாய் கொடுத்து வாங்கிப் பார்ப்போர், மொத்த ஜனத் தொகையில் மிகச் சிலர்தான். அந்த நஷ்

டத்தை அவர்கள் அனுபவிக்காமல் இருக்கப் போவதில்லை. ஆனால் அத்தியாவசியப் பொருள்களின் விலை உயர்வு பிளாக்கில் டிக்கெட் வாங்காத பெரும்பான்மை மக்களையும்தானே பாதிக்கிறது – தொடர்ந்து பாதித்து வருகிறது!

● **எம். பிச்சைக்கனி, இருமால்பூர்.**

*? லஞ்ச ஊழலை ஒழிக்க, மத்திய அமைச்சர்கள் தங்கள் பெயரிலோ உறவினர்கள் பெயரிலோ இருக்கும் சொத்து விவரங்களை மத்திய அரசிடம் உடனடியாகத் தெரிவிக்க வேண்டும் என்று கோரிக்கை விடுத்து, பாராளுமன்றத்தில் அ.தி.மு.க. எம்.பி. பி. எச். பாண்டியன் பேசியிருப்பது பற்றி...?*

! அ.தி.மு.கவினர் அமைச்சர்களாக இல்லை என்கிற தைரியத்தில் பேசிய பேச்சு இது. பதவியிலிருக்கும் போது பேசினால் பாராட்டலாம்; இப்போது அல்ல.

● **சூரியன், லால்குடி.** ❑

*? தமிழ்நாட்டில் பத்து மாதங்களில் 360 கற்பழிப்பு நடந்துள்ளதாம். சட்டங்கள் பல போட்டும் இவ்வாறு அதிகரிப்பதற்குக் காரணம் என்ன? இது எதைக் காட்டுகிறது?*



• சொத்து சவால்!

எதற்கு?

! சட்டப்படி, பாலியல் பலாத்காரத்துக்கு உள்ளானதாக நிரூபிக்க வேண்டியது, சம்பந்தப்பட்ட பெண்ணின் பொறுப்பாகிறது. இது கஷ்டமானது மட்டுமல்ல. மனத்தை மிகவும் புண்படுத்தும் அனுபவம். அத்தனை மனத் துயருக்குப் பிறகும் குற்றவாளிக்குத் தண்டனை கிடைக்கும் என்ற உறுதியும் இல்லை. எனவே பாதிக்கப்பட்ட பலர் ஒதுங்கிவிட, குற்றங்களும் அதிகரிக்கின்றன. இவ் விஷயத்தில் சட்டத் திருத்தம் அவசிய மாகிறது.

● **உமரி பொ. கணேசன், மும்பை – 37.**

*? எங்காவது தென் மாவட்டங்களில் பனை வெல்லக் காப்பி குடித்ததுண்டா? அதன் சுவை எப்படி?*

! பில்டர் காப்பிக்கு பனைவெல்லம் உதவாது. சுக்குக் காப்பிக்குத்தான் சூப்பர். இதற்கு தென் மாவட்டங்களுக்குப் போவானேன்? சென்னையிலுள்ள காதி கிராமோத்யோக் பவனிலேயே கிடைக்கிறது. அந்தப் பக்கம் போகும்போதெல்லாம் குடிப்பதுண்டு.

● **ஜி. ஜெயராமன், கூந்தலூர்.**

*? அடங்கிப் போவதற்கும் அனுசரித்துப் போவதற்கும் என்ன வித்தியாசம்?*

! அடங்கிப் போவது அடிமைத்தனத்தின் அடையாளம்; அனுசரித்துப் போவது அன்பின் வெளிப்பாடு. முன்னது அடிப்படை தர்மங்களில் விட்டுக்கொடுப்பதாகும். பின்னது நடைமுறை சாத்தியங்களையொட்டி நடந்து கொள்வதாகும்.

● **சி. கொ. தி. முருகேசன், கோபிச்செட்டிபாளையம்.**

*? காங்கிரஸ் கட்சியில் ப்ரியங்காவுக்குப் பதவி வழங்கப்படும் என்று சோனியா காந்தி அறிவித்துள்ளது பற்றி...?*



• எழும்பிய...



• ... கோட்டை!

! அப்படி எதுவும் சோனியா சொல்லவேயில்லை என்று அனைத்திந்திய காங்கிரஸ் கமிட்டி சார்பில் அஜித் ஜோகி மறுத்திருக்கிறார். ராகுல், ப்ரியங்கா இருவரையுமே இப்போதைக்குப் பொறுப்பில் அமர்த்தப் போவதில்லை என்று விளக்கியிருப்பதைப் பார்க்க, 'விரைவில் எதிர்பாருங்கள்' என்று சொல்வதைப் போல்தான் இருக்கிறது.

● **புளியரை கணேசன், சென்னை – 30.**

*? தாமரைக்கனி மீண்டும் அ.தி.மு.க.வில் சேர்ந்திருப்பது குறித்து...?*

! தானாடாவிட்டாலும் சதையாடும் அல்லவா! பிள்ளைகளின் எதிர்காலம் கருதி தாமரைக்கனி மனம் மாறியிருக்கிறார். மகன்களையும் அழைத்துக் கொண்டு போய் போயஸ் கார்டனில் சரணடைந்திருக்கிறார்!

❑ ரூ. 50 பரிசு பெறுபவர் : சூரியன்,17, மெயின் ரோடு, லால்குடி அஞ்சல், திருச்சி மாவ. - 621 601.

# மந்திரப் புன்னகை — 15



அப்போது என்னுடைய ஷோ குஜராத் மாநிலம் பரோடா நகரில் நடந்துகொண்டிருந்தது. என் மகன், கல்லூரிப் படிப்பை முடித்து விட்டு, கல்கத்தாவில் குடும்பத் தொழிலான துணி வியாபாரத்தில் ஈடுபட்டிருந்தான். கல்கத்தாவிலிருந்து கிளம்பி அவன் பரோடா வந்தான். அவன் வந்ததற்கு இரண்டு முக்கிய காரணங்கள் இருந்தன. ஒன்று குஜராத்தில் துணிகளுக்குப் புகழ் பெற்ற சூரத் நகரி லிருந்து, கல்கத்தாவில் எங்களது கடைக்கு சரக்கு வாங்கிச் செல்வது. இரண்டாவது அப்படியே பரோடா வந்து எங்களுடன் சில நாட்கள் தங்கியிருப்பது.

மிகவும் சந்தோஷத்துடன், எங்களுடைய மகனின் வருகைக்காகக் காத்திருந்தோம். அவனும் வந்து சேர்ந்தான். அப்போது பிஸினஸ் பற்றி பேச்சு வந்தது. ''எனக்கு பிஸினஸில் பெரிய ஆர்வம் இல்லை. கூட்டுக் குடும்பம் என்பதால், உங்களைத் தவிர உங் களின் மற்ற சகோதரர்கள், அவர்களுடைய மகன்கள் என்று ஏகப்பட்ட பேர். எவ்வளவு லாபம் வந்தாலும், எல்லாருக்குமாய் பிரிக் கப்படுகிறபோது, அதிகம் கிடைப்பதில்லை. எனவே, எனக்கும் உங்களைப் போலவே மேஜிக் கலைஞராகி, மேடையில் என் திற மையை வெளிப்படுத்தி, பேரும், புகழும், பணமும் சம்பாதிக்க வேண் டும் என்று ஆசையாக இருக்கிறது!'' என்றான்.

''உன் அம்மா காதில் விழுந்து விடப் போகிறது'' என்று அவனை எச்சரித்தேன். அவனோ, ''இன்று மேஜிக் உலகில் முடி சூடா மன்னனாக நீங்கள் விளங்கு கிறீர்கள். உலகப் புகழ் பெற்ற மேஜிக் நிபுணர் கள் எல்லாம் உங்கள் மீது எத் தனை மதிப்பும், மரியாதையும் வைத்திருக்கிறார் கள்! இப்படிப்பட்ட பெருமைக்குரிய உங்களுடைய குடும்பத்துக்கு மட்டுமில்லாமல், மேடையிலும் வாரிசாக நான் இருக்க விரும்புகிறேன்!'' என்று செண்டிமென் டலாக ஒரு போடு போட்டான். எனக்கு உள்ளூர சந்தோஷம் பொங்கியது.

மனைஜயின்

''சரி! உனக்குத்தான் நான் மேஜிக் பற்றி ஒன் றுமே சொல்லித் தரவில்லையே! உனக்கோ இருபத்தி நாலு வயது. இனிமேல் கற்றுக் கொண்டு, நிபுணன் ஆவது எப்படி? அதற் கும் மேலே, உன் அம்மா இதற்குச் சம்மதிக்க வேண்டுமே!'' என்றேன்.

அப்போது அவன் சொன்னது எனக்கு இனிய ஆச்சரியத்தைக் கொடுத்தது.

''நீங்கள் எனக்கு மேஜிக் சொல்லித் தர வில்லை என்பது வாஸ்தவம்தான். ஆனால், நானாகவே கடந்த சில வருடங்களாக மேஜிக் கற்றுக் கொண்டேன்!'' என்றான். யார் உனக்கு மேஜிக் கற்றுக் கொடுத்தது? என்று ஆர்வத்துடன் கேட்டேன். ''பள்ளிக் கூடத்தில் படிக்கிறபோதே எனக்கும் மேஜிக் கற்றுக் கொள்ளும் ஆர்வம் வந்துவிட்டது. மேஜிக் பற்றி நிறைய புத்தகங்கள் வாங்கிப் படித்தேன். குஜராத்தின் சில பெரிய மேஜிக் கலைஞர்களிடம் அவ்வப்போது, நேரிடை

யாகவும் பயிற்சி பெற்றேன். நான் உங்கள் பிள்ளை என்றும், உங்களுக்கும், அம்மாவுக்கும் நான் மேஜிக்கில் ஈடுபடுவதில் இஷ்டமில்லை என்பதால்தான் அவர்கள் உதவியை நான் நாடுவதாகவும் சொன்னதும், மகிழ்ச்சியுடன் எனக்கு மேஜிக் கற்றுத் தருவதற்கு சம்மதித்தனர். அது மட்டுமில்லை. என் வேண்டுகோளின்படி, இந்த விஷயத்தை எக்காரணம் கொண்டும் உங்கள் காதுக்கு வராதபடியும் பார்த்துக்கொண்டனர்!" என்றான்.

அது மட்டுமா? கல்கத்தாவில் எங்கள் துணிக் கடைக்கு என்று ஒரு சரக்குக் கிடங்கு உண்டு. அங்கே ஒரு பகுதியில், நான் மேடையில் மேஜிக் செய்வதற்கு என்னென்ன உபகரணங்களைப் பயன்படுத்துகிறேனோ, அவற்றின் இன்னொரு செட் வைத்திருப்பேன். பிளைவுட், ரெக்ஸின், பெயிண்ட் ஆகியவற்றைப் பயன்படுத்தித் தயாரிக்கப்பட்ட சாதாரண உபகரணங்களையே நான் மேடையில் பயன்படுத்துவேன். ஆனால், பளபளக்கும் எவர்சில்வர், மைக்கா ஷீட் என்று உயர்ரகமான பொருட்களைப் பயன்படுத்தி தயாரிக்கப்பட்ட இன்னொரு செட்டை, கிடங்கில் வைத்திருப்பேன். அயல்நாட்டுக்குப் போனால், அந்த சுபீரியர் குவாலிடி உபகரணங்களையே எடுத்துக்கொண்டு போவேன். ஜூனியர், கல்கத்தாவில் இருந்த சமயம், கடை விடுமுறை நேரத்தில், கிடங்கின் சாவியை எடுத்துக்கொண்டு போய், அங்கே ரகசியமாய் மேஜிக் பயிற்சி பெற்றிருக்கிறான். மேலும், கல்கத்தாவின் சில மேஜிக் நிபுணர்களும் அவனுக்கு உதவியிருக்கிறார்கள். ஆக, நான் எதுவும் கற்றுக் கொடுக்காமலேயே, என் மகன் என் மேடை வாரிசு ஆனான்.

மொத்த கதையையும் சொல்லிவிட்டு, "நானும் உங்களைப் போலவே மேஜிஷியன் ஆகிறேன் என்று அம்மாவிடம் சொன்னால், நிச்சயம் ஒப்புதல் அளிக்க மாட்டார். எனவே, இதை அம்மாவிடம், பக்குவமாக எடுத்துச் சொல்லி, அவரை சம்மதிக்க வைக்கும் பொறுப்பை உங்களிடமே ஒப்படைக்கிறேன்" என்றான்.

நானும், "அதை என்னிடம் விட்டு விடு! ஆனால் அதற்கு முன்பு, நீ எந்த அளவுக்கு மேஜிக் கற்றுக்கொண்டிருக்கிறாய் என்பதை நானே நேரடியாகப் பார்க்க வேண்டும்" என்று சொன்னேன். இரண்டு நாட்கள் கழித்து, என் நிகழ்ச்சி நடந்துக்கொண்டிருந்த அரங்கிலேயே, நான் பயன்படுத்துகிற உபகரணங்களையே பயன்படுத்தி, ஏழெட்டு ஐட்டங்களைச் செய்து காட்டினான். உண்மையிலேயே எனக்கு மேடையில் ஒரு வாரிசு தயாராகி விட்டது என்று சந்தோஷப்பட்டேன். அடுத்து மூன்று, நான்கு தினங்கள், அவனுக்குக் கடுமையான பயிற்சி கொடுத்தேன். அவனை மேடையில் அறிமுகப்படுத்துவதற்கான நாளை மனத்துக்குள்ளே குறித்துக்கொண்டேன்.

# கோபம்; மகனின் தாபம்!

அன்றைய தினம், என் மனைவியை நிகழ்ச்சிக்கு வரும்படி அழைத்திருந்தேன். முதல் வரிசையில் அவள் அமர்ந்துகொண்டிருந்தாள். நான் மேடையில் தோன்றி, வழக்கமான பரபரப்புடன் வலம் வந்தேன். சிறிது நேரம் கழித்து, "உங்களுக்கு ஒரு மேஜிக் நட்சத்திரத்தை அறிமுகப்படுத்தப் போகிறேன். அது வேறு யாருமில்லை! என் மகன்தான்" என்ற அறிமுகத்துடன், அவனை மேடையில் தோன்ற வைத்தேன். அரங்கத்தில், மகிழ்ச்சி பொங்கும் வரவேற்பு; கைத்தட்டல். ஆனால் என் மனைவி முகத்தில் மட்டும் இதைச் சற்றும் எதிர்பாராத அதிர்ச்சி.

அன்றைய நிகழ்ச்சி முடிந்தது. என் மனைவி என்னுடனோ, என் மகனுடனோ பேசவே இல்லை. எங்களால் காரணத்தை யூகிக்க முடியாதா என்ன? "அவனுக்கு மேஜிக் கலைஞராக வேண்டும் என்றுதான் ஆசை. அதனால் படிக்கிற காலத்திலேயே எனக்குத் தெரியாமலேயே தானாகவே

**மேஜிக் நிபுணர் கே. லால்**

மேஜிக் கற்றுக்கொண்டிருக்கிறான்!" என் றேன்.

இதைக் கேட்டு என் மனைவி சமாதான மடையவில்லை என்பது மட்டுமில்லை; ஏதோ நானும், அவனும் சேர்ந்து ரகசியமாய், அவளை ஏமாற்றி விட்டதாக (தவறாக) நினைத்துக்கொண்டு எங்கள் மீது கோபப் பட்டாள். அதிலும், என் மீது அதிக கோபம். இந்தக் கோபத்தின் உச்சகட்டமாக, இரண் டாவது நாள் கல்கத்தாவுக்குத் தனியாகவே புறப்பட்டுப் போய்விட்டாள். என்னால் அது போல, நினைத்தவுடன் புறப்பட்டுப் போய் விட முடியுமா?

என் நிகழ்ச்சி தொடர்ந்தது. ஆனாலும், மனைவி கோபித்துக்கொண்டு புறப்பட்டுப் போன பின், தொடர்ந்து மேஜிக் ஷோ நடத் திக்கொண்டிருப்பது எனக்குக் கொஞ்சம் சங்கடமாகத்தான் இருந்தது. பரோடாவில் நிகழ்ச்சியை ஏற்பாடு செய்தவரிடம் "டிக் கெட் முன்பதிவு' செய்வதை நிறுத்தி விடுங் கள். டிக்கெட் விற்பனை ஆகியுள்ள தினம் வரை மட்டும் நிகழ்ச்சியை நடத்திக் கொடுத்து விட்டு ஊருக்குப் புறப்படுகிறேன்" என்று கூறினேன், என் நிலைமையைப் புரிந்துகொண்டு அவர்களும் ஒத்துழைப்புக் கொடுத்தார்கள்.

ஊருக்குப் புறப்பட்டுப் போனோம். என் மனைவியின் கோபம் சற்று தணிந்திருந்தது. நானும், ஜூனியரும், குடும்பத்தின் மற்றவர் களும், அவளுக்கு எடுத்துச் சொன்னோம். கரைப்பார் கரைத்தால் கல்லும் கரையு மில்லையா? என் மனைவியும், நிலைமை யைப் புரிந்துக்கொண்டு, மேஜிக் உலகில் ஒரு புது ஸ்டார் பிரவேசிக்க சம்மதம் தெரி வித்தாள்.

என் மகன் என்கிற காரணத்துக்காக ஜூனியரை, உடனே எனக்கு அடுத்த ஸ்தானத்தில் நிறுத்தி என் நிகழ்ச்சிகளை நடத்த விடவில்லை. வேறு யார் யாரிடமோ பயிற்சி பெற்றிருந்தாலும் அவன் என்னிடம் நேரடியாகப் பயிற்சி பெற வேண்டியது மிகவும் அவசியம் என்று நான் நினைத்தேன். எனவே, அவனையும், என் மேஜிக் குழுவில் ஒரு ஊழியனாக சேர்த்துக்கொண்டேன். அவனுக்கு ஸ்பெஷல் சலுகைகள் எதுவும் கிடையாது என்பது மட்டுமில்லை. மற்ற ஊழியர்கள் அவனைத் தங்களில் ஒருவனா கவே நினைக்க வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டேன்.

இரண்டு வருடங்கள் இப்படியே ஓடின. தனியே தன்னால் நிகழ்ச்சியினை நடத்த முடியும் என்கிற தன்னம்பிக்கை அவனுக்கு வந்தது. இனி அவன் தனியே சமாளித்துக் கொள்ளுவான் என்ற நம்பிக்கை எனக்கும் ஏற்பட்டது. என் நிகழ்ச்சியின் போதே, இடைஇடையே சில நாட்கள் மேடையில் தோன்றி, மேஜிக் ஐட்டங் களைப் பற்றிய அறிவிப்புகளை மட்டும் நான் செய்துவிட்டு, நிகழ்ச்சிகளைச் செய்கிற பணியை முழுமையாக ஜூனியரிடமே விட்டு விட்டேன். என் நிகழ்ச்சியைப் போலவே, அவனுக்கும் நல்ல வரவேற்பு. ஆக, எனக்கு மேடை வாரிசு உருவாகி விட் டான் என்ற திருப்தி ஏற்பட்டது.

1980ம் ஆண்டு, ஜப்பானிலிருந்து எனக்கு அழைப்பு வந்தது. ஜப்பானிய ஸ்பான்ஸர் என்னைக் கூப்பிட்டபோது, ஜூனியர் நன்றாக மேஜிக் செய்வதாலும், அவன் தனியே நிகழ்ச்சிகள் தர ஆரம்பித்துள்ள தாலும், அவனை அனுப்பி வைக்கிறேன் என்று நான் கூறினேன். ஆனால் அதற்கு ஜப்பானிய ஸ்பான்சர் ஒப்புக் கொள்ள வில்லை.

(தொடரும்)

---



"மாடில குடியிருக்கற டாக்டர் வாடகை பாக்கி வச்சருக்கார்னு சொல்றீங்களே, போய் கேட்க வேண்டியது தானே?"

"என்னை டெஸ்ட் பண்ணிட்டு மாடி ஏறக் கூடாதுனு கண்டிப்பா சொல்லிட்டாரே!"

"அவர் டாக்டரா இருக்கலாம். அதுக்காக இப்படியா?"

"என்ன சங்கதி?"

"எவ்வளவு சீரியசாப் பேசினாலும் டேக் இட் ஈ.சி.ஙிங்கிறார்!"

— அம்பை தேவா



# அக்னிசர்மா பக்கம் நவம்பர் 17 முதல் 23 வரை



**மேஷம்** : *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

இந்த வாரம் அலைச்சலும் செலவும் ஏராளமா இருக்கும். உடல் நலன் சரியா இருக்காது. வேலைப் பளு அதிகமாகவும் பலன் குறைவாகவும் இருக்கும். புருஷன் மனைவி உறவுல சில பிரச்னைகள் வரும். வீட்டுல அமைதி நிலைக்கணும்னா, நீங்க கொஞ்சம் விட்டுக் கொடுத்து நடந்துக்கணும். ஆபீஸ்ல மேலதிகாரிகள் பலவிதமா தொந்தரவு தருவாங்க. கவனமா இருக்க வேண்டிய வாரம்.



**ரிஷபம்** : *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருக சிரிஷம் 2-ம் பாதம் வரை)*

புத்திசாலித்தனமான காரியங்கள் செய்து புகழ்பெறுவீங்க. பேச்சு சாதுர்யம் ஒரு முக்கிய விஷயத்தை சாதிச்சிக் கொடுக்கும். எதிர்பாராத அதிர்ஷ்ட வாய்ப்புகளுக்குத் தயாரா இருங்க. சிலருக்கு திருமண ஏற்பாடுகள் நடக்கும். வெளியூர்ப் பயணம் இருக்கும். பெண்களுக்கு புரமோஷன் வாய்ப்பு பிரகாசமா இருக்கு. சிலருக்கு நகை, வீடு வாங்கற யோகமும் உண்டு.



**மிதுனம்** : *(மிருகசிரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர் பூசம் 3-ம் பாதம் வரை)*

சிரமமே இல்லாம எதிலும் ஜெயிக்கலாம். இந்த வாரம் உங்க நீண்ட நாள் கனவு ஒண்ணு நனவாகும். வீடு, கார் ஏதாவது வாங்குவீங்க. நண்பர்களால ஆதாயம் உறுதி. பெண்களுக்குத் தாய் வீட்டுலேருந்து சொத்து ஏதாவது கிடைக்கலாம். உத்தியோகத்தில பெரிய அபிவிருத்தி இருக்காதுன்னாலும் சிலருக்குப் புகழ் கூடும். குறிப்பா, எழுத்தாளர்களுக்குப் பிரமாதமான வாரம் இது.



**கடகம்** : *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

போன வாரம் எதிர்பாராத சங்கடங்களால கொஞ்சம் சிரமப்பட்டிருப்பீங்களே? இப்ப எல்லாம் சரியாயிடும். வீட்டுல நடக்கப் போற ஒரு விசேஷம்; உங்க வாழ்க்கைத் துணையோட இருந்த ஊடலை நீக்கிடும். நண்பர்கள் உதவுவாங்க. அறிமுகமில்லாத நபர்கள்கிட்ட கொஞ்சம் எச்சரிக்கையா இருங்க. பண இழப்பு, பெயர் கெட்டுப் போறது நடக்கலாம்! வெளியூர்ப் பயணங்கள் வேணாம். யாராவது ஏழைக்கு ஒருவேளை சாப்பாடு போட்டுட்டுத் தொடங்கற முக்கிய காரியங்கள் பிரமாதமா ஒர்க்-அவுட் ஆகும்.



**சிம்மம்** : *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

எதிரிகள் ஓடி ஒளியற வாரம். தொழில்ல இருந்து வந்த பிரச்னைகளெல்லாம் காணாம போகும். கலைத் துறையினருக்கு நல்ல புகழும் வருமானமும் கூடும். மக்களால ஆதாயம் உண்டு. ஷேர் மாதிரி முதலீடுகள் வேண்டாம். பயணத்துல எச்சரிக்கையா இருங்க. ரொம்ப நெருக்கமான உறவினர் ஒருத்தரைப் பிரிய வேண்டி வரலாம். சிலருக்கு வெளியூர் டிரான்ஸ்ஃபர் இருக்கும். பெண்களுக்கு இது ஜாலி வாரம்.



**கன்னி** : *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

இந்த வாரம் உங்க காரியங்களுக்குத் தடையே வராது. மனசுல உற்சாகம் பொங்கும். ராப்பகலா உழைச்சி நல்ல பேர் அடைவீங்க. ஆனா, நிர்வாகத் துறையினருக்குச் சில பிரச்னைகள் வரலாம். தொழில் துறையினருக்கு, கூட வேலை பார்க்கறவங்க, பார்ட்னர்களால ப்ராப்ளம் வரும். புதிய ஒப்பந்தங்கள் கிடைக்கும்னாலும் எதையும் தீர யோசிச்சுச் செயல்படறது நல்லது.



**துலாம்** : *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம், 3-ம் பாதம் வரை)*

எதையும் ஒரு தடவைக்கு ரெண்டு தடவை யோசிச்சி செய்யுங்க. யாரையும் முழுக்க நம்பிடாதீங்க. குறிப்பா, அறிமுகமில்லாதவங்களோட அதிக சகவாசம் வேணாம். வீட்டுல சில பிரச்னைகள் வரலாம். சொத்து விஷயத்துல சிக்கல்கள் வரும். கோர்ட் கேஸுனு கூட சிலருக்கு அலைய வேண்டி வரும். பெற்றோர் உடல் நலத்துல கவனமா இருங்க. உங்க அலுவலகப் பிரச்னைகளை நண்பர்கள்கிட்ட பேச வேணாம். கண்ட இடங்கள்ல சாப்பிடாம இருக்கறதும் நல்லது.



**விருச்சிகம்** : *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

மனசு உற்சாகமா இருக்குமே? சுறுசுறுப்பா ஆக வேண்டியதைப் பாருங்க. நண்பர்கள், உறவினர்கள் எல்லாருமே உங்க சப்போர்ட்டுக்கு வருவாங்க. வீடு வாங்கறதோ,



மீன ராசிக்காரரான பிரபு தேவாவுக்கு ஆதாயமான வாரமாம்!

# நடக்குமென்பார், நடக்கும்!

கல்யாணம் போன்ற காரியங்களுக்கோ, தொழிலை மாத்திக்கறதுக்கோ இது சரியான நேரம். ஆனா, மனைவி உடல்நலத்துல கவனமா இருக்கறது அவசியம். ராத்திரி பயணம் வேணாம். சிலருக்கு செருப்புக்கடி அலர்ஜி மாதிரி ஏதாவது கோளாறு வரலாம். வாரக் கடைசில ஒரு இன்ப அதிர்ச்சி உங்களுக்கு இருக்கு.



**தனுசு :** (மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)

பிரச்னைகள் நிறைய வரும்தான். ஆனா, எதையும் சமாளிக்கற உறுதியும் சாமர்த்தியமும் உங்களுக்கு இருக்கு. இந்த வாரம் மின்சார சம்பந்தப்பட்ட பொருட்கள் விஷயத்துல எச்சரிக்கையா இருக்கணும். பல்பு மாட்டற வேலை கூட வேணாம். பொதுப் பிரச்னைகள்ல தலையிடாதீங்க. வம்பு தும்புகள் பக்கம் போக வேணாம். ஆபீஸ்ல அதிகாரிகள் பத்தி கமெண்ட் அடிக்காதீங்க. நண்பர்களே எதிரியாகி, மாட்டி விடறதுக்கு வாய்ப்பிருக்கு.



**மகரம் :** (உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)

கிரகங்கள் சாதகமா இல்லை. உங்க நடவடிக்கைகள்ல அதிக கவனம் அவசியம். புதிய திட்டங்கள் எதுவும் இப்ப வேணாம். சிலருக்குக் காதல் கசக்கும். மனைவியோட ஊடல் வரலாம். பணப் பிரச்னை வரும். கடன் குடுத்தவங்களால தொல்லை அதிகரிக்கும். யாருக்கும் இப்ப ஜாமீன் கையெழுத்துப் போடாதீங்க. வழக்கு ஏதும் இருந்தா வாய்தா வாங்கப் பாருங்க. வீட்டு மனுஷங்ககிட்ட அன்பா நடந்துக்கங்க.



**கும்பம் :** (அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)

சமூக சேவைல நாட்டமுள்ள உங்களுக்குப் புகழ்ப் பஞ்சமே இல்லை. இப்ப நீங்க தொட்டதெல்லாம் துலங்கற நேரம். உறவினர்களால் ஆதாயம் உண்டு. சிலருக்குத் திருமண யோகம் கூடி வரும். பணப் பிரச்னை இருக்காது. வீடு ஈடு வாங்குவீங்க. பழைய பாக்கிகள் வந்து சேரும். பையன்களால் சில நல்ல காரியங்கள் நடக்கும். வீட்டுப் பிரச்னைகளை வெளில பேசாம இருக்கறது நல்லது.



**மீனம் :** (பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)

உங்க பிரச்னைகள் வந்த சூட்டுல காணாமல் போயிடும். வழக்கு விவகாரங்கள் சாதகமான பலனையே தரும். கலைத் துறையினருக்கு ஆதாயமான வாரம். பெண்களால சில பிரச்னைகள் வரலாம். பயணத்துல கவனமா இருங்க. டூ வீலர் பயணம் வேணாம். கைல கால்ல அடி பட்டுப்பீங்க. சிலருக்கு நாய்க்கடி சான்ஸ் உண்டு! எச்சரிக்கை அவசியம்.

# ஒயலின் ஓசிப்பாரா நீங்க?

**ரா**ஜீவ் கொலையாளிகளுக்குத் தூக்குத் தண்டனை விதிச்சதுக்கு எதிரா, பெரிய அள வுல ஒரு கையெழுத்து இயக்கம் நடந்துட் டிருக்கு போலிருக்கு. (அஃப் கோர்ஸ், நான் போட மாட்டேன்னு எப்படியோ தெரிஞ்சி, யாரும் எங்கிட்ட வரலை)

ஒரு ஷூட்டிங் ஸ்பாட்ல ஒர்க் பண்ணிட் டிருந்த டைரக்டர்கிட்ட (பேர் வேணாம்னு நினைக்கறேன்.) ஒரு கோஷ்டி வந்து பேப்பரை நீட்டி 'சைன் பண்ணுங்க'ன்னு கேட்டிருக் காங்க.

அவர் கருமமே கண்ணாயினார் ரகம். தன் தொழிலுக்கு மீறின அக்கறைகள் அவ்வளவா அவருக்கு இல்லைன்னாலும் இந்த விஷயத் தைப் பொறுத்த வரைக்கும் தலையிடாம இருக் கறது பெட்டர்னு தோணிருக்கு.

"எதுக்கு என் கையெழுத்தெல்லாம்..."னு லாஃப்டா மறுக்கப் பார்த்தவருக்குக் கிடைச்ச ரிப்ளை: "போடுங்க சார் சும்மா. சி.எம்மே சொல்லிட்டாரு."

தனி நபர் விருப்பம், சம்மதம் மீறி கையெ ழுத்து வாங்கியே தீரணும்னு சி.எம். சொல்லி யிருப்பார்னு நான் நம்பலை.

இதுல இன்னொரு ஐரனி என்னன்னா, கையெழுத்துப் போட ரெஃப்யூஸ் பண்றவங் களை "நீங்கள்ளாம் ஒரு தமிழனா?"ன்னு திட் டற வேலையும் நடக்கறதா சொன்னார் அந்த யூனிட்ல ஒர்க் பண்ற என் ஃப்ரெண்ட் ஒருத்தர்.

முதல்ல சுய மரியாதை உள்ள ஒரு இந் தியனா இருக்கறதாலதான் இதை ஆதரிக்க ஒத் துக்கலைன்றதை அவங்க புரிஞ்சுக்கணும். அட் லீஸ்ட், சி.எம்மாவது எடுத்துச் சொல்லணும்.

● ● ●

**சு**ற்றுச் சூழல் பிரச் னையை மையமா வெச்சி எழுதின சுப்ரபாரதி மணி யனோட 'சாயத் திரை' பத்தி கொஞ்ச நாள் முன் னாடி எழுதியிருந்தேனில்லை? அதுக்கு லைப்ரரி ஆர்டர் கிடைச்சாச்சான்னு கேட் டிருந்தேன்.

இப்ப நியூஸ் வந்திருக்கு. வெற்றிகரமா, வழக்கம் போல ரிஜக்ட் பண்ணிட்டாங்க. (சுப்ரபாரதி மணியன் தன் நாவலுக்கு 'அறு பத்தேழு விதமான அசைவ உணவுகள்'னு டைட்டில் வெச்சிருந்தா ஒருவேளை கிடைச் சிருக்கும். ரீஸண்டா, இந்தப் பாணி டைட்டில் களோட நாலஞ்சு புதுப் புஸ்தகங்கள், பப்ளிக் லைப்ரரில பார்த்தேன்.)

சரியான காரணம் சொல்லாம இது மாதிரி முக்கியமான புக்ஸ் ரிஜக்ட் ஆறது இது முதல் தடவை இல்லை.

சமீபத்துல சாகித்திய அகடமி விருது வாங்கின ஒருத்தரோட புஸ்தகத்தை ரிஜக்ட் பண்ணிட்டாங்களாம்.

அவர் தரப்புல, லைப்ரரி அதாரிடீஸ் கிட்ட போயி, "என்னங்க, சாகித்ய அகடமி விருது வாங்கினவருக்கே இந்த கதியா?"ன்னு கேட்டபோது கிடைச்ச பதில்:

"சாகித்ய அகடமி விருது வாங்கினவர்னு எங்களுக்கு எப்படித் தெரியும். புக்ல போட் டிருக்கா?"

தமிழ் வளர்ச்சித் துறைக்கு இப்ப இயக்கு நராகியிருக்கற ம. ராஜேந்திரன், நவீன இலக் கியம் தெரிஞ்சவர். அவரே ஒரு ரைட்டரும் கூட. அவராவது தலையிட்டு 'பெரிய இடத் துல' பேசி, இந்த நான் ஸ்டாப் அக்கிரமத் துக்கு ஒரு முடிவு கட்டினா கோடி புண்ணியம்.

● ● ●

**நா**ன் ரொம்ப அட்மைர் பண்ற ஒரு காலமிஸ்டை நேத்து பார்த்தேன் – என்னை மாதிரியே(!) தைரியமா நடுநிலையா எழுதிட்டு எல்லார்கிட்டேயும் வாங்கிக் கட்டிக்கற மிஸ் டர் தும்புரு!

"என்ன நியூஸ் சார் உங்க சர் கிள்ஸ்ல...?" ன்னப்போ 'அற்பப் பதரே! இது கூட தெரியாதா?" என்கிற மாதிரி ஒரு பார்வை பார்த்தார்.

இசை உலகமும் இளைஞர் உலகமும் சம மான எக்ஸைட்மென்டோட எதிர்பார்த்துக் கிட்டிருக்கற ஒரு நிகழ்ச்சி பத்தி சொன்னார். 31.12.99 அன்னிக்கு ராத் திரி 9.30க்கு ஆரம்பிச்சு, நள்ளிரவு தாண்டி 1.1.2000 அன்னிக்கு 12.30 ஏ.எம். வரைக்கும் நீடிக்கப் போற நிகழ்ச்சி. நிகழ்ச்சிக்குப் பேரு On a Musical Track. ஏதா வது பாப் அல்லது ராக் ப்ரோகிராமா இல்லே ஃப்யூஷன் சமாசாரமான்னா அதான் இல்லை..! ப்யூர் அன்ட் ஃபில்டர்ட் கர்நாடிக் மியூசிக்.

கடந்த ஆயிரம் வருஷத்து கர்நாடக சங் கீத சங்கதிங்களையெல்லாம் திரும்பிப் பார்த்து அசை போடற மாதிரியும் அதோட எதிர் காலத்தையும் கொஞ்சம் எட்டிப் பார்க்கற

மாதிரியும் அமைச்சிருக்காங்க - யூ கெஸ்ட் - ஒய் ஏ சி எம்காரங்கதான்! (YACM - Youth Association for Classical Music)

செம்மங்குடில ஆரம்பிச்சு, டி.கே.பி, கே.வி.என், லால்குடி, எம்.எஸ்.ஜி, சுதா ரகுநாதன், உன்னி கிருஷ்ணன், பாம்பே ஜெய்ஸ்ரீ, நித்யஸ்ரீ வரிசை வரைக்கும் மூணு தலைமுறை வித்வான்களை மேடையில ஏத்தி ஒரு 'கர்நாடிக் மியூசிக் ஸ்டார் நைட்'டே நடத்திக் காட்டப் போறாங்களாம்.

அவங்க ஏறப் போற மேடை எதுன்றதுதான் இன்னும் பெரிய சர்ப்ரைஸ்- ரொம்ப ரொம்ப ஆசாரமான மியூசிக் அகாடமி மேடை. அகாடமியோட சீசன் நிகழ்ச்சிகள்லே லாஸ்ட் நிகழ்ச்சியா இருக்கும் இந்த ப்ரோக்ராம். தன்னோட 73வது இசை விழாவிலே, முதல் முறையா வெளியாட்களை நம்பி ஒரு ப்ரோக்ராம் பொறுப்பை முழுசா ஒப்படைச்சிருக்கு அகாடமி. The next century belongs to the younger generationன்னு சிம்பாலிக்கா உணர்த்தற மாதிரியிருக்கில்லே...

கொடுத்த பொறுப்பை



"என்ன சார், நித்யஸ்ரீ வயலின் வாசிக்கப் போறாங்களா?"ன்னு கேட்டேன் மிஸ்டர் தும்புருகிட்டே....

"அதையெல்லாம்கூட தூக்கியடிக்கற மாதிரியான அதிசயங்களைப் பார்க்கலாம் சுமி! அடுத்த தடவை பார்க்கறச்சே சொல்றேன். அதுவரைக்கும் நகத்தைக் கடிக்காம இரு"ன்னுட்டுப் போயிட்டாரு!

• • •

ஒரு தமாஷுக்காக, பாம்பு மாத்திரைக்குப் பின்னாலே ஒரு தத்துவம் இருக்குன்னு நான் சொல்லப் போக, மெனக் கெட்டு அது என்ன தத்துவம்னு கேட்டு ரிப்ளை கார்டு அனுப்பியிருக்கற மன்ற உறுப்பினர் அஸ்வதி மணாளனுக்கு ஒரு நற நற!

வேணும்னா இப்படி வெச்சுக்கங்க. 'தீமை ஒழிந்து நன்மை நிலை பெறும் நாள் தான் தீபாவளி'ன்னு ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகள் வருஷா வருஷம் சொல்லுவார். அந்த வகைல, பாம்பு மாத்திரையைக் கொளுத்தினா கொசுங்கற தீமை ஒழிஞ்சு ஆரோக்யம்ங்கற நன்மை விளையுங்கறதுதான் இதனோட சிம்பாலிக் மீனிங். போதுமா?

— சுமி



## சுமி சூப்பர்மார்க்கெட்

ரொம்ப பய பக்தியோட நிறைவேத்தற அதே நேரத்துல, 'டோடலி அன் எக்ஸ்பெக்டட்' விஷயங்களை நிகழ்ச்சி முழுக்க தூவி விட்டிருக்காங்களாம் தயாரிக்கறவங்க.







# அருமருந்தாக இலவச இணைப்பு!

✉ ராஜீவ் குற்றமற்றவர் என்று நிருபிக்க வேண்டிய கட்டாயத்தில்தான் காங்கிரஸார் உள்ளனர். இதை விடுத்து ராஜீவ் பெயரை நீக்க வேண்டும் என்று மூடி மறைக்கப் பார்ப்பது ஊழலில் ஊறிப் போன காங்கிரஸுக்கு மேலும் ஒரு கரும்புள்ளியாகவே அமையும். தங்கள் தலையங்கம், காங்கிரஸ் கட்சி கற்றுக் கொள்ள வேண்டிய பாடம்.
நெல்லை, டி. செல்வன்.

✉ சிமெண்ட் விவகாரம் பற்றிய கலைஞரின் அறிக்கையைத் தொகுத்து, இவ்விஷயத்தில் உள்ள நியாயங்களை அறிய உதவி செய்ததற்கு நன்றி. கலைஞரின் அறிக்கை கல்கி தலையங்கத்திற்குக் கிடைத்த வெற்றி என்றே சொல்லலாம்!
ஈரோடு.க. நா. இராஜேஸ்வரன்.

✉ புனித போப் ஜான் பாலின் வண்ணப்படம் மிக அருமை. தாங்கள் அவ்வாறு வெளியிட்டதன் மூலம் பிற மதங்கள் மீது துவேஷம் கூடாது என்பதை உணர்த்தியிருக்கிறீர்கள். நன்றி.
மும்பை – 19, ஜான் சாமுவேல்.

✉ கமிஷனர் காளிமுத்து அவர்களின் 'நேருக்கு நேர்' நிகழ்ச்சி வரவேற்கத்தக்க ஒரு ஆரோக்கியமான அணுகுமுறை. இதனால் மக்களுக்கும், காவல் துறைக்குமிடையேயான இடைவெளி குறையும். இந்தப் புதிய முயற்சி எல்லா மாவட்டங்களிலும் பரவலாக்கப்பட்டால் மிகுந்த பயனைத் தரும் என்பதில் ஐயமில்லை!
மயிலாடுதுறை,
எல். துர்காதேவி.

✉ "ஆட்டுக்கு தாடி போல அரசுக்கு ஆளுநர்" என்று அண்ணா அன்று சொன்னார். ஆளுநருக்கு கார் வாங்க கால் கோடி ரூபாய் ஒதுக்கிய மகாராஷ்டிர அரசாங்கம் மகா தவறைச் செய்துள்ளது!
தஞ்சாவூர்.
வளர்மதி ஆசைத்தம்பி.

✉ ஆயுர்வேத மருத்துவத்தில் இருக்கும் நன்மைகளையும், வியாதிக்கு ஏற்ற மருந்துகளையும், ஆயுர்வேதம் பற்றிய அறிஞர்களின் கருத்தையும் வெளியிட்டு அருந்தொண்டாற்றி விட்டீர்கள்!
திருப்பரங்குன்றம்,
டி. கே. சுப்பிரமணியன்.

✉ தீபாவளிச் சிறப்பிதழுடன் இலவச இணைப்பாகக் கல்கி தந்துள்ள ஆயுர்வேதம் – இன்றைய பிணிசூழ் உலகுக்கு அருமருந்து. தனிமனிதனின் ஆரோக்கியம், சமூகத்துக்கு உறுதுணை. சமூகம் செம்மையுற ஆயுர்வேதத்தின் இன்றைய தேவை அறிந்து, கல்கி தந்தது பாராட்டுக்குரியது.
சென்னை – 83, தேவிமைந்தன்.

✉ டாக்டர். பி. ராமமூர்த்தியின் மனம் திறந்த மடல், இனி தலைக்கவசம் அணிவது என்று உறுதிகொள்ள வைக்கிறது!
திருச்சி – 17, செ. சக்திராஜ்.

✉ 'மாதம் ஒரு நகரம்' வரவேற்கப்பட வேண்டிய ஒன்று. அவ்வப்போது பத்திரிகைகளும் களத்தில் இறங்கி பிரச்னைகள், சாதனைகளை அலசினால்தான் மக்கள் பிரதிநிதிகளுக்குத் தங்கள் கடமைகளை ஆற்ற தூண்டுகோலாக அமையும் என்பதில் ஐயமேயில்லை!
நெய்வேலி – 3,
ப. உத்தண்டராமன்.

✉ கடந்த நான்கு வாரங்களாக வெளிவந்த "பிராத்தியம்" தொடர் ஒரு கதை என்ற முறையில் அனைத்து அம்சங்களையும் தன்னுள் அடக்கியிருந்தது. ஆனால், முஸ்லிமை, இஸ்லாமிய சமுதாயம் (ஜமா அத்) பிராந்திக் கடைகள் திறக்க உதவி புரிவதாகச் சித்திரித்திருப்பது ஆழ்ந்த வருத்தத்தைத் தருகிறது. மது, சாராயம் போன்ற போதை வஸ்துக்கள் குர்–ஆனிலும் நபிகளின் போதனைகளி(ஹதீஸ்)லும் முற்றிலும் தடைசெய்யப்பட்டவை. அதே போல் அவற்றைத் தயாரிப்பது, விற்பது அதற்கான வசதிகள் செய்து தருவதும் மாபெரும் பாவம் என்று இஸ்லாம் வலியுறுத்துகிறது.
சென்னை – 6,
மௌல்வி ஏ. ஜஃப்ருல்லா ரஹ்மானி.



## முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சாரியார்

## 43

ததிபாண்டன் கதையை ஏற்கெனவே சொல்லியிருக்கிறேன்.

எல்லார் கிருஹத்திலேயும் வெண்ணெயைத் திருடிவிட்டு கிடுகிடுவென்று ஓடினான் கிருஷ்ண பரமாத்மா! நான்மறைகள் தேடி ஓடியும் காணமாட்டாத எம்பெருமான் கடைசியில் ததிபாண்டன் வீட்டுக்குள்ளே ஓடினான்.

ததி என்றால் தயிர். தயிரைப் பானை பானையாக நிரப்பி வைத்துக் கொண்டிருக்கிறான் அந்த ததிபாண்டன். 'பகவான் இன்றைக்கு வருவான்; அவனுக்குத் தயிர் கொடுக்கலாம்' என்று பானையோடு எடுத்து வைப்பான். வைத்த தயிர் அப்படியே இருக்கும். மறுநாள் புதிதாக ஒரு பானை எடுத்து வைப்பான். அதுவும் அப்படியே இருக்கும். இதே மாதிரி வரிசையாகப் பானைகள்!

நமக்கெல்லாம் கூட 'கடம்' (பானை) என்று பெயரிட்டிருக்கிறது சாஸ்திரம். பானைக்கு என்ன குணமுண்டோ அது மொத்தம் நமக்கும் இருக்கிறது. அதிலேயும் தீர்த்தத்தை ஊற்றலாம்; இதிலேயும் தீர்த்தத்தை விடலாம். அதுவும் ம்ருண் மயம்; நமது உடலும் ம்ருண் மயம்; – இப்படி பானைக்கும் நமக்கும் ஏகப்பட்ட தொடர்பு.

இந்த மண் பானைகள் நிறையத் தயிரை நிரப்பினான் ததிபாண்டன். குழந்தை கிருஷ்ணன் பயந்துகொண்டு, கிடுகிடுவென்று ஓடி அவன் வீட்டிலேயே நுழைந்து விட்டது. நுழைந்துகொண்டு ஒவ்வொரு பானையாகத் திறந்து பார்க்கிறது. கடைசியிலே ஒரே ஒரு பானை அன்றைய தினம் தயிர் சேர்க்க வேண்டிய பானை காலியாக இருந்தது – பெரிய பானை! அந்தக் குழந்தை பானை மேலே ஏறி உள்ளே குதித்து விட்டது. உள்ளேயே உட்கார்ந்துகொண்டது!

ததிபாண்டன் பார்த்துக் கொண்டேயிருந்தான்.

வந்தாய் போலே வாராதாய்
வாராதாய் போல்
வருவானே

என்று நம்மாழ்வார் பாடியிருக்கிறார்.

ஒரு கிருஹத்துக்கு 'வரேன்' என்று சொல்லிவிட்டு வராமலே இருப்பான் கண்ணன். அவர்கள் எல்லாவற்றையும் எடுத்து வைத்துக் கொண்டு காத்திருப்பார்கள்! யார் எதிர்பார்க்கவில்லையோ, அங்கே போய் நிற்பான்! அவர்களைப் படாத பாடு படுத்துவான். அவர்கள் படுகிற அவஸ்தையைப் பார்த்து ஆனந்தப் படுவான்.

துரியோதனன் கிருஷ்ணனைப் பார்த்து என்ன கேட்கிறான்?...

'சக்ரவர்த்தி நானிருக்கும்போது, பீஷ்ம துரோணாசார்யர்களெல்லாம் இங்கே இருக்கும்போது, அந்த விதுரருடைய கிருஹத்திலே போய்ச் சாப்பிட்டாயே! அல்ப புத்தியைக் காட்டினாயே!' என்று கேட்கிறான்.

இவர்களெல்லாம் எதிர்பார்த்தார்கள். ஆனால் அவர்கள் எதிர்பார்க்கவேயில்லை. அங்கே போய் நின்றான் பகவான். அவர் நடுங்கிப் போய்விட்டார். ஆசனத்தைக் கொண்டு வந்து போட்டு விட்டு அதைத் தடவித் தடவிப் பார்த்துக்கொண்டு நிற்கிறார். வாழைப் பழத்தை பகவான் கையிலே கொடுக்கிறபோது, பழத்தை உரித்து, தோலியைக் கையில் கொடுத்து விட்டு பழத்தைக் கீழே போடுகிறார்!

அந்தத் தோலையே பரம போக்யமாக பரமாத்மா சாப்பிடுகிறான்.

விதுரனின் பக்தியதிசயத்தைப் பார்க்கிறான்.

பரமாத்மா இப்படிப் பல லீலைகள் புரிவான். எதிர்பார்த்த நேரத்தில் ததிபாண்டன் வீட்டுக்குப் போகாமல் எதிர்பார்க்காத நாளன்று வந்து பானைக்குள்ளே உட்கார்ந்து விட்டான். 'இதுதான் சமயம், பரமாத்மாவை விடக் கூடாது' என்று மூடி போட்ட மாதிரி பானைமேல் ஏறி உட்கார்ந்து கொண்டான் ததிபாண்டன்.

''ததிபாண்டா! என் குழந்தை கிருஷ்ணன் இங்கே வந்தானா?'' என்று யசோதை தேடி வருகிறாள். அப்பட்டமான பொய்யை அழகாகச் சொல்கிறான் ததிபாண்டன்.

"இல்லையே! நான் கிருஷ்ணனைப் பார்த்து ஆறு மாதம் ஆயிற்றே!" என்றான். யசோதை புறப்பட்டுப் போய்விட்டாள்!

'பார்க்கவேயில்லையே!' என்று பொய் சொன்ன ததிபாண்டனுக்கு மோக்ஷம் கிடைத்து விட்டது!

ஆனால், உண்மையே பேசி வந்த தசரதனுக்கு ஸ்வர்க பதவிதான் – மோக்ஷத்தைக் காட்டிலும் சற்று குறைவான நிலைதான் வாய்த்தது.

இதற்கு ஆசார்யர்கள் சொன்ன அற்புதமான அர்த்த விசேஷத்தைக் கவனிக்க வேண்டும். விசேஷ தர்மம் சாமான்ய தர்மம் என்று விளக்கம் சொல்கிறார்கள். சாமான்ய தர்மத்தை எப்போதும் நாம் பண்ணிக் கொண்டேயிருக்க வேண்டும். விசேஷ தர்மம், சாமான்ய தர்மத்துக்குப் பக்கத்திலே வரும்போது சாமான்ய தர்மத்தைக் கைவிட்டுவிட்டு, விசேஷ தர்மத்தைத்தான் நாம் கடைப்பிடிக்க வேண்டும்.

ஸூர்ய கிரஹணமும் அமாவாசையும்



சேர்ந்து வருகிறபோது இரண்டு தர்ப்பண மும் ஒரே நாளில் எப்படிப் பண்ணுவது? அமாவாசை தர்ப்பணம் பண்ணாமல் கிர ஹண தர்ப்பணம் பண்ணினால் போதும். அது விசேஷ தர்மம்.

பெருமாளை எழுந்தருளப் பண்ணுபவர்கள், இடையிலேயே ஆறு மணிக்கு சந்தியா வந்தனம் பண்ணும் நேரம் என்று நடுத் தெருவிலே ஆயக்கால் போட்டு அவனை நிறுத்திவிட்டுப் போகலாமா...?

மாலை சந்தியாவந்தனம் பண்ண வேண்டும் என்பது சாமான்ய தர்மம். இதுபோன்ற தெய்வ காரியங்களால் காலாதீதமானால் 'காலாதீத பிராயச்சித்த' மந்திரம் சொல்லி அதைச் செய்யலாம். ஆனால் அந்த சமயத்தில் பகவானை எழுந்தருளப் பண்ணுதல் தான் சரி. பகவானை நிறுத்திவிட்டுப் போனால் அது விகர்மா!

ஒரு குழந்தை போய்க்கொண்டே இருக்கிறது. தூங்கிக் கொண்டிருந்த குழந்தை எழுந்து அழுது கொண்டே போகிறது.

மேலே கட்டாமல், தரையோடு மட்டமாக ஒரு கிணறு அங்கே இருக்கிறது. குழந்தை அந்தக் கிணற்றிலே விழப் போகிறது! ஒருத்தர் அங்கே இருக்கிறார். அகர்மாவே கர்மாவாகக் கொண்டவர். இந்த உலகத்தோடு எனக்கு எந்த சம்பந்தமும் இல்லை; கர்மாவே பண்ணமாட்டேன் என்று உட்கார்ந்திருக்கிறார். அவர் இந்தக் குழந்தை போவதைக் பார்க்கிறார். அது கிணற்றிலே விழப் போகிறது. அப்போது அவர் என்ன பண்ண வேண்டும்?...

சாஸ்திரம் இதை விசாரிக்கிறது.

விசாரித்தால், அவர் அகர்மகராக இருந்தாலும் சரி, கர்மாவைப் பண்ணக்கூடியவராக இருந்தாலும் சரி, உடனே போய் அந்தக் குழந்தையைக் காப்பாற்ற வேண்டும். இல்லையானால், அகர்மா விகர்மாவாகி விடும்.

ஜடபரதருடைய சரித்திரத்திலே பார்க்கலாம். எல்லாவற்றையும் விட்டுவிட்டு அவர் காட்டுக்குப் போனார். இங்கே இருப்பதெல்லாம் உபத்திரவம் பண்ணுகிறது என்று காட்டிலே போய் அவர் ஒரு பர்ண சாலை அமைத்துக்கொண்டு வாழ்ந்தார். நதியிலே நீராடப் போனார். அங்கேயிருந்து, ஒரு நிறை கர்ப்பிணியான மான் தீர்த்தம் பருக வந்தது. அப்போது, எல்லா பிராணிகளையும் ஒடுக்கக்கூடிய சிம்ஹ கர்ஜனை ஒன்று கேட்டது. கேட்டவுடனே நிறை கர்ப்பிணியாக இருக்கும்படியான மானானது நடுங்கிப் போய், நதியிலிருந்து கரைக்கு ஓர் எகிறு எகிறியது! அப்படி எகிறிய வேகத்தில் பிரசவித்துவிட்டது அந்த மான்! அந்த பயத்திலேயே பிரசவித்துவிட்டது.

பிறந்த அந்த மான் குட்டி, நதியிலேயே விழுந்தது. ஜலத்தில் தத்தளித்து, அடித்துக் கொண்டே போகிறது.

எல்லாவற்றையும் விட்டவர், எதிலுமே பற்றில்லாதவர் ஜடபரதர் – அப்படிப்பட்டவர் எதிர்க் கரையிலிருந்து இதைப் பார்த்துக் கொண்டேயிருக்கிறார். உடனே ஓடி வந்து அந்த மான் குட்டியை ரக்ஷித்துவிட்டார். ஆனால், தாய் மான் மாண்டுவிட்டது. பயத்தினாலேயும் திடீர்ப் பிரசவத்தினாலேயும் இறந்து விட்டது.

'ஐயோ! பிறக்கிறபோதே தாயை இழந்து விட்டதே இந்தக் குழந்தை' என்று அதனிடம் பற்று வந்து விட்டது ஜடபரதருக்கு.

அப்புறம் அவர் பண்ணிய காரியம்தான் தப்பு! அந்த மான் குட்டியிடம் ஏகமாக ப்ரீதியை வைத்து விட்டார்! எல்லாவற்றையும் விட்டுவிட்டு வந்தவர், மான் குட்டியிடம் ப்ரீதியை வைத்துவிட்டு, அது ஒரு கணம் தென்படாமல் போனாலும் அவருக்குப் பிராணன் போகும் நிலை வந்துவிட்டது! மான் குட்டியை அகர்மகராகக் காப்பாற்றியவர் அந்த அகர்மாவே கர்மாவாக மாற அனுமதித்து விட்டார்! அது நுனிப்புல் மேய்ந்தால் கூட 'ஆஹா! என்ன அழகாக மேய்கிறது' என்று

## அருள்வாக்கு

உலக ஸம்பந்தமான உபாயங்களைக் கொண்டே உலகுக்கு அப்பாற்பட்ட சக்தியைப் பிடிப்பதற்குத்தான் மதாசாரம் என்பது ஒரு பக்கம் உண்மையென்றால், இங்கேயே ஒரு விதத்தில் அந்த ஈச்வர சக்தியை உபாயமாக வைத்துக்கொண்டு, உலக வாழ்க்கையிலே நன்மை பெற கார்யங்களைப் பண்ணுகிறோம். "இப்படிப்பட்ட கட்டுத் திட்டங்களுக்கு உட்பட்டுப் பண்ணு" என்று சாஸ்திரம் சொல்கிறபடி கட்டுப்பட்டு ஒழுங்கோடு பண்ணுகிறோம். இப்படி இதிலே தொக்கி நிற்கிற தெய்வபக்தி, நம்பிக்கை ஆகியவற்றாலும், side effect ஆக உண்டாகிற அடக்கம், ஒழுங்குமுறை இவற்றினாலும், நாம் கேட்காமலே நமக்கு கொஞ்சம் கொஞ்சமாகச் சித்த சுத்தியும் உண்டாக ஆரம்பிக்கிறது. அதிலே மேலே மேலே தேறிப் போகிறபோதுதான் தன்னாலே இது போன்ற அல்ப பலன்களுக்காக இல்லாமல் ஈச்வரனுக்காகவே மதாநுஷ்டானங்கள் பண்ண வேண்டும் என்ற பக்வம் உண்டாகிறது.

இப்படி ஏதோ ஒரு விதத்தில் தெய்வ சிந்

தனை, பூர்விகர் 'ஆசாரத்தில் ஒரு சிரத்தை இவற்றோடு கார்யம் பண்ணுவதற்கும், அடிமுதல் நுனிவரை எங்கேயுமே தெய்வத்திற்கோ, tradition-கோ கட்டுப்படாமல், முழுக்க லௌகிகமாகவே தற்குறியாக, தறிகெட்டுக் கார்யம் பண்ணுவதற்கும் ரொம்ப வித்தியாஸமிருக்கிறது. அதனால்தான் லோக வாழ்க்கைக்கானதையே பண்ணும்போது கூட, மத சம்பந்தமானவை ஒருத்தனுக்கு சித்த சுத்தியைக் கொடுக்க ஆரம்பிக்கிறதென்றால், வேறு விதமாகச் செய்வது சித்தத்தில் மேலும் அழுக்கையேற்றி அஹங்காரத் தடிப்பை ஜாஸ்தி பண்ணுகிறது.

ஒரு சின்ன த்ருஷ்டாந்தம் சொல்கிறேன். பலனை உத்தேசித்துத்தான் அநேக சடங்குகள் பண்ணுகிறோம். ஆனால் உத்தேசித்தப்படி பணம் வரவில்லை, பிள்ளை பிறக்கவில்லை. என்ன பண்ணுகிறோம்? அப்போதைக்கு ஒரு ஏமாற்றம் உண்டாகத்தான் செய்கிறது. ஆனால் அது ஆழமாகப் போய்விடுவதில்லை. என்ன இருந்தாலும் சாஸ்திரத்தை நம்பித் தானே செய்தோம்? அந்த சாஸ்திரத்தின் ஆணி வேரான கொள்கை என்ன? கர்மாப்படி நடக்கும் என்பது தானே? ஈச்வரானுக்ரஹ பலத்தால் அந்தக் கர்மாவை நமக்குக் கொஞ்சம் ஸாதகமாக்கிக் கொள்ளலாமென்றுதான் சாஸ்திரம் சொன்ன ஏதோ ஒன்றைப் பண்ணினோம்



பலிக்கவில்லை. பலிக்காவிட்டாலும் அந்த சாஸ்திரமே நம்மை, ''கர்மா! அநுபவித்துத் தானாகணும்'' என்று தேற்றிக் கொள்ளும்படி பண்ணுகிறது. நாம் எதையோ உத்தேசித்து தெய்வ ஸம்பந்தமான ஒன்றைச் செய்தோமென்றாலும், உத்தேசம் ஃபெயில் ஆன பிற்பாடும் அந்த தெய்வ ஸம்பந்தத்தையும், சாஸ்திர ஆசரணையையும் அதோடு விட்டு விடுவதற்கு மனஸு வருவதில்லை. இப்படிக் கொஞ்சங் கொஞ்சமாக நல்ல வழியிலேயே திருப்பி விடப் படுகிறோம்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்**

சந்தோஷம் அவருக்கு!

**க**ர்மாவும் விகர்மாவாகும்..! எப்படி என்பதை கவனிக்க வேண்டும்.

ஒரு பாம்பு இருக்கிறது. அது ஒரு தவளையைப் பிடித்துக்கொண்டு விழுங்கப் போகிறது.

பாம்பு தவளையைப் பிடிக்கிற நேரத்தில் தவளை ஒரு த்வனி எழுப்பும். ரொம்ப தீதமாக இருக்கும் அது கேட்பதற்கு. அந்த ஒலியைக்கொண்டே தவளை பிடிக்கப்பட்டிருப்பதைத் தெரிந்து கொள்ளலாம்.

ஆதி சங்கர பகவத் பாதாள் அழகாக ஒன்று சொல்கிறார்: தவளையின் பாதி உடம்பு பாம்புக்குள்ளே போயாயிற்று. அந்தத் தவளை இருக்கிறதே, அது முன்னே பறக்கிற ஈயைப் பிடிக்க நாக்கை நீட்டுகிறதாம். இந்த உலகத்தினுடைய தன்மையை என்னவென்று சொல்வது! இவனே ம்ருத்யுவிடம் அகப்பட்டுக் கொண்டிருக்க, இவன் இன்னொருத்தனை அடிக்க வேண்டும் என்று நினைக்கிறானே! மகா பாவி! என்று எடுத்துச் சொல்கிறார்!

அந்த மாதிரி பாம்பு தவளையைப் பிடித்துக் கொண்டிருக்கிற நேரத்தில், கிணற்றிலே விழப் போன குழந்தையைக் காப்பாற்றிய மாதிரி தவளையாகிற ஒரு பிராணி உயிரை விடாமல் காப்பாற்ற பாம்பைக் கல்லால் அடித்தோ, தடியால் அடித்தோ கொல்ல வேண்டுமா...?'

'கூடாது!' என்கிறது சாஸ்திரம். 'வாயை மூடிக்கொண்டு போ! கிட்டேயே போகாதே. அதை மீட்கிறேன் என்று சொல்லி, கல்லால் அடித்து, தடியால் அடித்து ஒன்றும் செய்யாதே! திரும்பிப் பார்க்காமல் போய்விடு' என்கிறது.

தவளையைப் பாம்புக்கு இரையாக பகவான் நியமித்திருக்கிறான். அதை மாற்ற நமக்கு சக்தி கிடையாது. அதனால் அதன் கிட்டே போகாதே என்கிறது.

ஆகையினாலே, தர்மங்களை நன்றாக உணர வேண்டும். அதிலே சத்யம் எது. அசத்யம் எது என்பதை உணர வேண்டும். சத்யம் எது. ருதம் எது என்று உணர வேண்டும்.

சில இடங்களில் சத்யத்தைத்தான் சொல்ல வேண்டும்; சில இடங்களில் ருதத்தைத்தான் சொல்ல வேண்டும். சத்யமாகவும் ருதமாகவும் பஞ்ச பூதங்களாகவும் எல்லாமாகவும் பகவானே - பரமாத்மாவே இருக்கிறான் என்பதை உணர வேண்டும்.

அதனால்தான், ''எல்லாமாய் நீ இருக்கிறாயே.. உன் பெருமையை நீயேதான் சொல்ல வேண்டும். என்னால் சொல்ல முடியுமா?'' என்கிறார்கள் கவிகளும் ஆழ்வார்களும்.

(தொடரும்)

# காஞ்சனா தாமோதரன்

"ஏ பாமா, நீ ரெடியா?" ராவுத்தர் மகள் சலிமா அக்கா வாசலில் நின்று குரல் கொடுத்தாள்.

"அவ எங்க ரெடி? இவ்ளோவ் நேரமா ஒரு பொஸ் தகத்தை வச்சிக்கிட்டு ஒக்காந்திருந்தா. நேரத்தோட குளிப்பி யான்னு நா இப்பத்தான் வெரட்டி விட்டேன்" – அரிசியைச் சுளவில் பரப்பிக் கல் பொறுக்கிக் கொண்டு முன் திண்ணை யில் உட்கார்ந்திருந்த பாமாவின் தாய் வாஞ்சையுடன் அலுத்துக் கொண்டாள்.

அவளுக்கு எல்லாம் கேட்டது. புத்தகம் படிக்க ஆரம்பித் தால் நேரம் காலம் போவது தெரியவில்லைதான். மாடப் பிறைக்கு மேல் மாட்டியிருந்த கண்ணாடியில் தன் முகத்தை இன்னொரு முறை பார்த்துக் கொண்டாள். சாயம் போன சிவப்புக் கண்ணாடி ஃபிரேமுக்குள் விளம்பரப் படம் மாதிரி அவள் முகம். குறுகுறுக் கும் பெரிய கண்கள், குளித்த ஈரத்தைத் தேக்கிக் கொண்டு, பனிச்சென்று பவுடர் பூச்சில் மினுங் கும் மாநிறம். நல்லாத்தான் இருக்கோம். மனசில் இயற்கையான துள்ளல். தலையில் செருகியிருந்த சீப்பை எடுத்துவிட்டு, ஒரு பின்னலை எடுத்து முன்னால் போட்டுக் கொண்டாள். அந்தக் கரும் பச்சை ஸ்டிக்கர் பொட்டையே வைத்திருக்கலாம் போல. இந்தப் பச்சைப் பொட்டு தாவணி கலருக்கோ பாவாடை பார்டர் கலருக்கோ சரியான மேட்ச் இல்லை. சரி, இனி பள்ளிக்கூடத்துக்கு நேரம் ஆயிற்று. சலிமா வேறு காத்திருக்கிறாள். ஒரு நாள் மேட்ச் ஆகாத பொட்டோடு போனால் தப்பில்லை. புத்தகப் பையை எடுத்துக் கொண் டாள்.

"போயிட்டு வா தாயி!" பள்ளிக்குப் போகும் மகளைப் பற்றி அம்மையின் முகத்தில் தெறிக் கும் பெருமை அவளுக்குப் பாராமலேயே தெரியும். அப்பன் என்பவன் அந்த வெறும் பெயரோடும் அடுத்த ஊரிலிருந்து வயலில் வேலை செய்ய வந்த ஒருத்தியோடும்





தென்னந்தோப்பு வீட்டோடும் நின்று விட்டான். அம்மைதான் ஆண் பிள்ளையாய். கல்யாணத்தின் போது போட்ட நகைகளை அடித்து மிதித்து அம்மையிடமிருந்து பிடுங்கினவன் அப்பன்காரன். அவன் பூர்வீக நிலத்தையும் பறிக்க அவன் வந்தபோது, பஞ்சாயத்து போர்டு வழியாக அதைத் தக்கவைத்துக் கொண்ட ஒரு புத்திசாலி, அம்மை. அந்தக் கையகல நிலத்தை ராவுத்தரிடம் குத்தகைக்கு விட்டு, வயிற்றைக் கழுவி அவளையும் படிக்க வைக்க வழி செய்திருக்கிறாள். அவ்வப்போது வந்து தொந்தரவு பண்ணும் அப்பனுக்கும் வாய்க்கரிசி போடுகிறாள். கல்லான தன் கணவன் புல்லினும் கீழான ஒரு புருஷன் என்று தெரிந்த பிறகும்....

"என்ன பாமா, மூஞ்சிய 'உர்'ருன்னு வச்சிக்கிட்டு பேசாம வார? இதுக்குள்ள நூறாயிரம் ஊர்க்கதைய வக்கணையா அளந்துருப்பியே..." சலிமாவின் குரல் நினைப்பைக் கலைத்தது.

"ஒண்ணுமில்ல சலிமாக்கா, சும்மாதான். இங்க பாரேன். அணில் கடிச்சுப் போட்டதும் காத்துல உதுர்றதுமா எவ்ளோவ் நவ்வாப்பழம் கீழ விழுந்து கெடக்கு. கொஞ்சம் நில்லுக்கா. நம்மளும் ரெண்டு மூணு பழம் பொறுக்கித் தின்னுக்கிட்டே போலாம். மொத பெல் அடிக்கவே இன்னும் கொஞ்சம் நேரம் இருக்குல்லா."

நாவல் பழங்கள் மேலிருந்த மணலை ஊதி ஊதித் தின்று கொண்டு, நாக்கு ஊதா நிறமாக மாறுவதை ரசித்துக் கொண்டே நடந்தார்கள். மண் சாலையின் இரண்டு பக்கங்களிலும் உள்ள நாவல் மரங்களும் அத்தி, ஆல மரங்களும் வளைந்து பின்னி வேய்ந்திருக்கும் பச்சைக் கூரை. நடுநடுவே பனிச்சிடும் காலைக் கதிர்களின் உள்ளே குளிர்காய்ந்து ஆட்டம் போடும் தூசுப் பட்டாளங்கள். மரங்களுக்கு அப்பால் அடர்ந்த சிவப்பு அரளிச் செடிகளிடம் கோடையில் சுருங்கிய ஆற்றின் மௌன முணுமுணுப்பு.

ஆடி மாதக் காற்றில் பாவாடைகள் கால்களைச் சுற்றும் குடைராட்டினமாயின. காற்றாடியாய் அலைந்த தாவணித் தலைப்பை இறுக இடுப்பில் செருகிக் கொள்ள வேண்டியிருந்தது. நெற்றியிலும் காதோரத்திலும் உள்ள குட்டைத் தலைமயிர் கலைந்து சுருள் சுருளாகச் சிலும்பிற்று. உச்சியைத் தொட்ட காற்று உடம்பு முழுதையும் நனைத்து பாதத்தை நோக்கி வழிந்தது.

"காத்து சொகம்மா இருக்குல்லக்கா?"

"ம்ம்ம்ம்... ஸ்கூல் ஆண்டு மலர்ல காத்தப் பத்தியும் காளானப் பத்தியும் கவிதை எழுதுறவா நீ. காத்து சொகமா இருக்குன்னு சொல்லுத. பாழாப் போன காத்து இப்படி பாவாடையப் பரத்தி மானத்த வாங்குதேன்னு நான் நெனச்சிக்கிட்டு இருக்கேன்." சலிமா அக்கா ஒரு யதார்த்தவாதி.

"இந்த வருஷம் பத்தாங்கிளாஸ் முடிச்சப்பறம் மேல ப்ளஸ்டூவுக்கு ஒங்க வீட்ல அனுப்புவாகளாக்கா?"

"இல்ல, நிக்காஹ்தான். வாப்பா நேத்து கூட உம்மாகிட்ட சொல்லிக்கிட்டிருந்தாக. பத்தமடை

# வழிப்பறி

லருந்து சொத்து பத்து உள்ள ஒரு நல்ல சம்பந்தம்னு."

"ஒனக்கு மேல படிக்கணும்னு ஆசையில்லையாக்கா?"

"ஸ்கூல் எனக்கு இப்பவே போரடிக்குது, பாமா. நீ என்ன மெத்தப் படிச்ச மேதாவியாகி கலெக்டர் உத்தியோகம் பார்க்கப் போறியாக்கும்?" – சலிமா அக்கா சிரித்தாள். பளீரென்று முகத்தில் விளக்கேற்றும் சிரிப்பு.

அவளும் சேர்ந்து சிரித்தாள். "கலெக்டர் உத்தியோகம்னு இல்லக்கா. அம்மைக்குக் கொஞ்சம் நெலம் நீச்சு இருக்கு. கூடவே கொஞ்சம் படிப்பும் இருந்துதுன்னா நல்லதுன்னு படுது. நாளக்கி நம்மளக் கட்டுறவனுக நெலத்தையும் நகையையும் அடிச்சு உதச்சு புடுங்கினாலும் புடுங்கிருவானுக. நம்ம படிப்பை அப்படி புடுங்கிற முடியாதுல்லா. அதான்."

சலிமா அக்கா மௌனமானாள். பாமா ஏன் அப்படிப் பேசுகிறாள் என்பது அவளுக்குப் புரிந்ததுதானே.

"தளுக்கி மினுக்கிக்கிட்டு பொட்டச்சி இவா பள்ளிக்கூடத்துக்குப் போணுமாங்கும்?"

"வீட்ல ஒரு ஆம்பள இருந்தா ரெண்டு தட்டு தட்டிப் போட்டிருப்பான். கட்டின புருசனை எவாகிட்டயோ கூட்டிக் குடுத்துப்புட்டு, இவா இங்க பவுசு பண்ணத பாரேன்."

"படிக்கல்லா போறாளாம்க்கா. பெரிய ஐயமாருவ பொண்ணுன்னு நெனப்பு போல. கொஞ்சம் செவத்த தோலா இருந்தா போதுமே, ஆடிருவாளுவ."

"என்னத்த படிச்சி என்னத்துக்கு, ரெண்டு கொம்பா மொளக்கப் போவுது? நாளக்கி இவளும் நம்மள மாதிரி சட்டி சொரண்டைத்தான போறா, மயினியோவ்?"

"இவா அம்மாக்காரிக்கி கோட்டி (பைத்தியம்) புடிச்சுருக்கு. இல்லன்னா ஒரு சமஞ்ச கொமரிய (குமரி) இப்பிடி ஊரு தாண்டி பள்ளிக்கூடத்துக்கு அனுப்புவாளா?"

சொந்தபந்தத்தின் ஏச்சுக்களும் எகத்தாளமும் நினைவுக்கு வந்தன. கூடவே அம்மையின் வைராக்கியமான மௌன பதிலும். வைராக்கியத்தையே வாழ்க்கையாக்கி விட்ட அம்மை.

**ஆ**றும், அதை ஒட்டிய மரங்கள் அடர்ந்த சாலையும் வளைந்து விலகிப் போயின. இனி ஒரு குறுகிய முடுக்கைக் கடந்தால் பள்ளிக்கூடம். முடுக்கின் இருபுறமும் மண்ணாலான வீடுகள். சாணம் தெளித்து திருத்தமான புள்ளிக்கோலங்கள் ஒவ்வொரு வீட்டின் முன்னும். கோலம் போடுவது அழகான அருமையான வழக்கம்தான். போட்ட சில மணி நேரங்களிலேயே காற்று அழித்து விடும் என்று தெரியும். இருந்தும் தினம் கோலம் போடுவது நடக்கிறது... மறுமலர்ச்சியில், அதன் தொடர்ச்சியில் மனிதர்களுக்குத்தான் எவ்வளவு நம்பிக்கை. சில திண்ணைகளில் ஆடுகள் உட்கார்ந்து நிதானமாய் அசைபோட்டுக் கொண்டிருந்தன. என்ன நினைவுகளோ இவை மனசில். கோழிகளும் பன்றிகளும் தங்கள் குடும்பங்களோடு சமத்துவமாய் அதே சாக்கடையில் விருந்து சாப்பிட்டன. அரை டிராயர் சிறுவர்கள் அந்த டிராயர்கள் கீழே விழுந்து விடாமல் ஒரு கையால் பிடித்தவாறு குறுக்கும் நெடுக்குமாய் ஓடிக் கொண்டிருந்தார்கள். இவர்கள் ஏன் இந்த நேரத்தில் பள்ளிக்கூடத்தில் இல்லாமல்...

நினைப்பும் மூச்சும் திடீரென்று நின்றன. அவளைக் கடந்து வேகமாய்ப் போன சைக்கிளிலிருந்து ஒரு கரம் அவள் கழுத்தை நோக்கி நீண்டது. அவள் கை தானாகவே கழுத்திலிருந்த மெல்லிய சங்கிலியை இறுகப் பற்றிக் கொண்டது, திருடனிடமிருந்து பாதுகாப்பாய். திருடன் சங்கிலியைக் குறிவைக்கவில்லை என்பது அவன் போன அரைக் கணத்துக்கு அப்புறம்தான் புரிந்தது. அவன் கைபட்ட இடம் வலித்தது.

அந்த மின்வெட்டுக் கணத்துக்குப் பிறகு அவள் உறைந்து போனாள். உணர்வுகள் மரத்து, சுற்றிலும் உள்ள சப்தங்கள் எல்லாம் அடங்கி... இன்னொருவரின் பயங்கரமான கனவுக்குள் விழித்துக் கொண்ட மாதிரி. சலிமா அக்கா அவள் கையைப் பிடித்துக் கொண்டு சப்தமில்லாமல் அழுதது ஞாபகம் இருக்கிறது. பாவம், இவள் ஏன் அழணும்? அம்மையிடம் அவளுக்கு உடம்பு சரியில்லை என்று சொல்லி வீட்டில் விட்டு விட்டுப் போனதும் சலிமா அக்காதான். கால் தரையில் பாவாமல் எப்படி வீட்டுக்கு வந்து சேர்ந்தாள் என்று நினைவில்லை. தலையணையைப் போட்டுத் தரையில் உடம்பைச் சாய்க்கையில், உத்திரத்துப் பனங்கட்டையில் ஒரு பல்லி அவளையே கண்ணிமைக்காமல் பார்த்தது நினைவிருக்கிறது. அப்புறம் தூக்கமோ மயக்கமோ ஏதோ ஒன்று கறுப்புப் போர்வையாய் அவளைத் தன்னுள் பொத்திக் கொண்டது.

கருணையுடன்.

சலிமா அக்காவும் அவளும் சேர்ந்து பள்ளிக்கூடம் போகிறார்கள். அதே முடுக்கு. அதே சைக்கிள். அதே கரம் அவளைப் பார்த்து நீண்டது. இந்தத் தடவை அவள் வீண் அதிர்ச்சியிலும் பயத்திலும் தன்னினைவு இழக்கவில்லை. புத்தகப் பையை உயர்த்தி அவன் கையைத் தள்ளி விடுகிறாள். கனத்த பை அவன் மீது மோதும் வேகத்தில் அவன் நிலைகுப்புற சைக்கிளோடு விழுகிறான். இப்போது அவன் கண்களில் பயம். தன்னை அடையாளம் காட்டாமல் வம்பு பண்ணும் கோழைப்பயலின் கண்ணில் பயம் இல்லாமல் வீரதீரமா இருக்கும் பின்னே? சலிமா அக்கா ஊரைக் கூட்டுகிறாள். கூடியவர்கள் அவனைத் திட்டி அடித்து விரட்டுகிறார்கள். திரும்பிப் பாராமல் ஓடுகிறான் பயந்தாங்கொள்ளி.

திடுமென்று அவளுக்கு விழிப்புத் தட்டியது. இருட்டியிருந்தது. தெருவிளக்கின் வெளிச்சம் ஜன்னல் கம்பிகளால் சிறையிடப்பட்டு சதுரமாய் அறைக்குள் சரிந்திருந்தது. உத்திரத்தில் பல்லியைக் காணோம். அதுவும் தூங்கப் போயிருக்கலாம். பல்லிகள் எங்கே எப்போது போய்த் தூங்குமோ... தெரியாது. அம்மை அவள் நெற்றியில் பூசியிருந்த பச்சிலைச் சாந்து காய்ந்து சொரசொரவென்று உதிர ஆரம்பித்திருந்தது. அம்மை தீ மூட்டிக் குழலால் விட்டு விட்டு அடுப்பை ஊதும் சப்தம் கேட்டது. பக்கத்து வீட்டு பங்குசம் அத்தை குழம்புக்கு அரைக்க அம்மி தட்டிக் கொண்டிருந்தாள். சுற்றுக் குடிசைகளில் ராச்சோறு கொதிக்கையில் பீடி சுற்றும் பெண்கள் பாடும் பாட்டு. எல்லாமாய்ச் சேர்ந்து ஒரு முழுக் கச்சேரியே நடந்து கொண்டிருந்தது, வழக்கம் போல். எல்லாம் எங்கேயோ தூரத்திலிருந்து வருவது போலத் தெரிந்தது.

முந்தி மாதிரி கன்றுக்குட்டித் துள்ளல் இனியும் அவளுக்குள் இருக்குமா? தெரியவில்லை. சந்தேகமும் தற்காப்பு உணர்ச்சியும் மரபுத் தன்மையும் இன்னும் கொஞ்சம் கூடவே தேவைதான் போல. நெஞ்சு எரிவது போலிருந்தது. கூடவே காரணமில்லாத ஓர் அவமானமும் உடம்பெல்லாம் கூசுவது போல உணர்வும் பயமும். இவையெல்லாம் இன்னும் கொஞ்ச நாளில் மறைந்து போகலாம். அச்சமே இல்லை என்று ஆனாலும் ஆகலாம். ஆனால் இப்போதைக்கு, பேசாமல் அம்மையின் வயிற்றுக்கே திரும்பிப் போய் ஒரு பையனாகப் பிறந்து வந்தால் தேவலை என்றிருந்தது.





# பிரபஞ்சன்

# முதல் மழைத்துளி

# 3

அரவிந்தன், தன் அறைக்கு வந்து சேர்ந்தபோது, மணி, நள்ளிரவைத் தொட்டு விட்டிருந்தது. பாரதியைப் பற்றியே அவன் நினைத்துக் கொண்டிருந்தான். திறமை, ஞானம் எல்லாம், ஏன் இப்படி சாம்பல் பூத்து விடுகிறது? பாரதி போன்ற பெண்ணால், எப்படிப் பாடாமல், தன் ஆளுமையை வெளிப்படுத்தாமல் இருக்க முடியும்?

அவன் மேசை மேல், ஒரு கள்ளிச் செடி வைத்திருப்பான். இது என்ன மேசை மேல் கள்ளிச் செடி என்று பார்ப்பவர் கூறுவதுண்டு. ஏன்? கள்ளி என்ன பாவம் செய்தது? மலர்ச் செடிகள்தான் வளர்க்கப்பட வேண்டும் என்பது என்ன சட்டம் என்று அவன் சொல்வான்.

தினம், வீடு வந்து சேர்கையில் நேரம், நள்ளிரவைத் தொட்டு விடுகிறது. உறங்கப் போகும் முன், ஒரு குளியல் வேண்டும் அவனுக்கு. முடித்தான். குளித்த பிறகு, மேசைச் செடிக்கும், இதர செடிகளுக்கும் அவன் நீரூற்றுவான். மேசைக்கு வந்து, அன்று வந்த கடிதங்களைப் படிப்பான். வாரம் இரண்டு முறை, அம்மாவிடம் இருந்து கடிதம் வரும். இரண்டு விஷயங்களை மட்டுமே, அவள் திரும்பத் திரும்ப எழுதுவாள். ஒன்று, அவன் உடல்நலம். நேரம் தவறாமல் சாப்பிட வேண்டும். இரவில் அதிக நேரம் கண்விழிக்கக் கூடாது. இரண்டாவது, அவன் திருமணம் செய்து கொள்வது பற்றி யோசிக்க வேண்டும். திரண்ட சொத்துக்கு ஒரே மகன், இப்படி தூர தேசத்தில் அனாதை போல் அலைவதாவது.

அம்மாவிடம் இருந்து வந்த கடிதத்தை, மடித்து, பேப்பர் வெயிட்டின் கீழே வைத்தான். அப்புறம், இரண்டு கடிதங்கள். ஒன்று, ஒரு பத்திரிகையிலிருந்து வந்த கவிதை கேட்கும் கடிதம். வர இருக்கும் பொங்கலுக்குக் கவிதை மலர் தயாரிக்கிறார்களாம். அதில் அவன் கவிதையும் இடம் பெற வேண்டுமாம். மூன்றாவது, ஒரு ரசிகரின் கடிதம். அவன், கவிதையில் பல வரிகள் புரியவில்லையாம். அந்த வாசகருக்குப் புரியாத வரிகளில் இதுவும் ஒன்று...

'இறந்த காலத்தின் விரல் நகங்கள்
இற்று விழுந்தன,
நாளைய தொட்டிக்குள்...'

அதையும் மடித்துப் பிறகு பதில் எழுதிக் கொள்ளலாம் என்று தீர்மானித்தான். ஃபிரிஜ்ஜில் ஏதாவது உண்பதற்கு இருக்குமா என்று தேடினான். ரொட்டியும், பழங்களும் இருந்தன. எடுத்துப் பசி ஆறினான். தினம், வழக்கப்படி, அன்றைய சமாச்சாரங்களை, டயரியில் எழுதும் பழக்கம் அவனுக்கு இருந்தது. டயரியை எடுத்து, அன்றைய பக்கங்களில், எழுதத் தொடங்கினான்.

'வேலை, கூடுதல் கடுமையாகவே இருந்தது. ஆனாலும் மகிழ்ச்சியாகவே செய்தேன். ஒரு நாளின் 24 மணி நேரங்களில், பத்து மணியை எனக்குச் சோறு போடும் நிறுவனத்துக்குத் தருகிறேன். மீதி உள்ளதில், சில நேரங்களை என் வளர்ச்சிக்குத் தருகிறேன். நான், அந்த குமாஸ்தாவாக அறியப்படுவது எனக்கு மகிழ்ச்சி தராது. நான் என்னைக் கூர் தீட்டிக் கொள்ள வேண்டும்...

இன்று பாரதி என்கிற இசைக் கலைஞரைச் சந்தித்தேன். உச்சத்தை நோக்கிப் பயணப்பட்ட அந்தக் கலைஞர், இப்படித் தயங்கி, பின் தங்கிப் போன

தற்கு என்ன காரணம், யார் காரணம் என் பதை அறிந்து கொள்ள வேண்டும். இந்த அருமையான கலைஞருடன் சற்று நேரம் பேசியது எனக்கு மகிழ்ச்சியைத் தருகிறது...'

அவன் வீட்டுப் பால்கனியில், நிறைய செடிகள். அவற்றுக்கு மத்தியில், நிரந்தரமாக ஒரு நாற்காலி இருக்கும். அதில் போய் அமர்ந்தான். காற்று, நதியில் குளித்து விட்டு வந்தாற்போல, குளிர்ந்து இருந்தது. இரவுகள், அழகானவை. இரவுகள், மானுட வரப்ர சாதம். இரவுகள், குளிர்ச்சியைத் தந்து, மனி தர்க்கு உஷ்ணத்தைத் தருபவை. படிக்கவும், சிந்திக்கவும் தரப்படுகிற கால 'போனஸ்'.

அவன் மகிழ்ச்சியாகத் தன்னை உணர்ந் தான். வார்த்தைகள், முட்டையை உடைத் துக் கொண்டு, வெளியே வருவது போல, உருவாகத் தொடங்கியிருந்தன. ஒரு வகைப்பட்ட பரவச நிலையில் அவன் இருந்தான். உரு வாகும் வார்த்தை களை எழுதிக்



கொள்ள வேண்டும் போல் இருந்தது. காகிதத்தை எடுத்து வைத்துக் கொண்டான். எழுதினான்.

கடல் நீலமாய்ப் படுத்துக் கிடந்தது.
இரவின் விரல், அதன் போர்வையை
விலக்கும்.
வெள்ளை மின்னல் நுரையாய்ப் புரளும்
மணலின் படுகையில்
காலடிச் சுவடுகள்,
சுவடுகள் அழியும், பதித்த பாதங்கள்
நாளைக்கு வரும் என்று
எதிர்பார்த்திருக்கும்,
எறிந்து விட்டு வந்த பொட்டலக்
காகிதங்கள்....

அவன் மேல், அவன் புரியாமல் எழுது கிறான் என்கிற குற்றச்சாட்டு எப்போதும் சாஸ்வதமாக இருந்து கொண்டேயிருந்தது. இப்படித்தான் எழுத வருகிறது. இருந்து விட்டுப் போகட்டுமே. சிருடை மாதிரி ஒரே தொனியை எழுத்துக்குத் தர வேண்டும் என்பது என்ன நியதி?

அவன் உறங்கப் போனான். உறக்கத்தில் ஒரு கனவு வந்தது. கனவுகள், மனசின் பாஷை. அது, வார்த்தைகள் அற்ற, வெறும் பிம்பங்களில் மட்டுமே பேசும். இப்போதும் பேசியது...

அவன், மணல்வெளியில் பயணம் செய் கிறான். கூடாரம், ஈச்ச மரங்கள், கிணறுகள், ஜனங்கள் என்று நிறைய காட்சிகள். அவன் தனியாக இருந்த ஒரு கூடாரத்துக்குள் பிர வேசிக்கிறான். ஒரு பெரிய கூஜாவில் தண்ணீர் இருக்கிறது. அவனுக்குப் பிடித்த காப்பியும், சூடாக ஒரு பொற் பாத்திரத்தில் வைக்கப்பட்டிருந்தது. அவன் அதை அருந்து கிறான். அவன், எழுதுகிறான். நிறைய காகி தங்களில், எழுதி எழுதிக் கிழித்துப் போடு கிறான். அந்தக் காகிதங்களை, இரு கைகள் எடுத்து அடுக்குகின்றன... தம்பூராவை மீட்டிக் கொண்டு, ஒரு மனிதர் பாடுகிறார்... ஒரு பெரிய கிணற்றைத் தூர் வாரிக் கொண் டிருக்கிறார்கள், ஜனங்கள்...

என்னென்னமோ படிமங்கள், நிறைய வந்து போயின. காலை அவன் வழக்கம் போல ஐந்தரைக்கு எழுந்தான். காப்பி மேக்கரில், காப்பி தயாரித்துக் குடித்து முடித் தான். வழக்கம் போல, தன் காலை 'நடைக்கு'ப் புறப்பட்டான்.

**கா**லையிலேயே உஷா, நோட்டை எடுத்துக் கொண்டு வந்து விட்டிருந்தாள். வைத்தியநாதன் அவளுக்குப் பாடம் நடத்திக் கொண்டிருந்தார். நேற்றுதான் கல்யாணியைத் தொடங்கியிருந்தார் அவர். அவள், ஹரிகாம்போதியை விட்டு வெளியே வராதவளாக இருந்தாள்.

கண்ணன் என்னும் மாயன் – செய்யும்
கண்கட்டு வித்தைகள் என்ன
சொல்வேன்...

என்னும் அனுபல்லவியைத் திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருந்தார் அவர். ஸ்ருதி பிசகியபடி, ஸ்வரங்களை மாற்றிப் போட்டுக் கொண்டு பாடியபடி இருந்தாள்,



'சூப்பர் புயல்' புறப்பட்டு ரெண்டு நாள்ல வருதாமே?''

டி.வி.யில சொன்னாங்களா?''

''ஊர்ல இருந்து உங்க அம்மா வர்றதையெல்லாம் டி.வி.யில சொல்வாங்களாக்கும்... தபால் வந்திருக்கு!

— நெல்லையப்பபுரம் செல்வன்

★★★



**''அந்த பட்டாசுக்கடையில எப்படி தீப்பிடிச்சதாம்?''**

**''வியாபாரம் 'சூடு' பிடிச்சதாம்!''**

**— வந்தை சிவா**

அவள். அப்பா அலுத்துப் போனதைச் சமையல் அறையிலிருந்து பார்த்துக் கொண்டிருந்தாள், பாரதி. ஏன் இப்படி, வேண்டாத வேலைகளையெல்லாம் எடுத்துக் கொண்டார் என்று வேதனையாக இருந்தது. பாரதிக்கு. பிற்கால வாழ்க்கையைப் பற்றிக் கவலைப்படாதவர் இல்லை அவர். இருந்த சேமிப்பை எல்லாம், மாப்பிள்ளை வீட்டுக்குக் கொடுத்துவிட்டு, இப்போது சிரமப்படுகிறார், அவர். எல்லாம் அவளுக்காக. இதைச் சொன்னால் அவர் ஒப்புக் கொள்ள மாட்டார்.

"எனக்கென்ன குறைச்சல்?" என்பார்.

"ஒவ்வொரு சிஷ்யருக்கும் ஒரு ஸ்ருதின்னு வைச்சு, உங்க சொந்த ஸ்ருதியே மாறிப் போச்சுப்பா."

"இல்லம்மா. இது புண்ணியம்... நான் கெட்டுப் போனா என்ன? நாலு பேருக்கு உதவும்படியா இருக்கேன்."

"உங்க சேமிப்பை மாப்பிள்ளைக்குக் கொடுக்காமே இருந்திங்கன்னா, எவ்வளவு நல்லா இருக்கும். உங்ககிட்டயும் பணம் இருக்கும். இப்போ இப்படி அவஸ்தைப்பட வேண்டியிருக்காது இல்லையா?"

"அதைப் பற்றி என்ன? மாப்பிள்ளையும் என் பிள்ளை மாதிரிதானேம்மா... உனக்குக் கொடுக்கிறது போல, அவருக்குக் கொடுத்து இருக்கேன். எனக்கு உங்க இரண்டு பேரில், எந்த வித்தியாசமும் கிடையாது."

"மாப்பிள்ளையோடு வாழ வேண்டியவள், உங்களுக்குப் பாரமாக வந்திருக்கிறோம்."

அப்பாவின் கண்களில் கண்ணீர் திரண்டது. சுவரைப் பார்த்துக் கொண்டு சொன்னார்.

"இப்படியெல்லாம் பேசாதேம்மா. நீ எனக்கு பாரமா? என்ன சொல்றே? எல்லா நிலைமையும் ஒரு நாளைக்கு மாறும். மனசை விட்டுடாதே."

அதன் பிறகு, அப்பாவுக்கு வருத்தம் தரும், அந்த வார்த்தைகளை அவள் மீண்டும் பேசுவது இல்லை. அன்று மாலை, அவள், கம்மலுக்கு எண்ணெய் எடுக்க வேண்டி, கோவிலுக்குப் பின்னால் இருந்த, ஷராப் கடைக்குப் போனாள்.

"ஒரு மணி நேரம் கழிச்சு வாங்களேம்மா" என்றார் ஆசாரி.

ஒரு மணி நேரம் என்ன செய்யலாம் என்று யோசித்து விட்டு, கோவிலுக்குள் புகுந்தாள் பாரதி. முன் மண்டபத்து வலக் கரையில், தெப்பக்குளம் இருந்தது. பச்சை



**"திட்டுறதோட இருந்த நீ ஏன் எங்க அம்மாவை நேற்று அடிச்சியாம்?"**

**"திட்டத் திட்ட காதுல விழாத மாதிரி போய்க்கிட்டே இருந்தா என்னங்க அர்த்தம்?"**

**— சீர்காழி ரேவதி**

---

நீர்க் குளம். பாசி இருந்தபோதும், நாற்றம் எடுக்காத குளம். படித்துறையில் போய் அமர்ந்து கொண்டாள் அவள். மனசைக் கட்டிப் போட, அவள் பல கயிறுகள் வைத்திருந்தாள். அதில் ஒன்று, இந்தத் தெப்பக் குளம். படித்துறை. சில்லென்று இருக்கும். கல் பாவிய படித்துறை. அவள், சலனமற்றுக் கிடக்கும் குளத்தையே பார்த்துக் கொண்டிருந்தாள். அவள் கவனத்தைக் குருக்கள் அண்ணாசாமி கலைத்தார்.

"குழந்தை, சௌக்கியமா இருக்கியோ?" என்றபடி, அவர் சற்றுத் தள்ளி அமர்ந்தார்.

"இருக்கேன், மாமா" என்று அவருக்கு வணக்கம் சொன்னாள் அவள்.

"வீட்டுக்காரர், கடிதம் போடறாரா?"

"ஊம்."

அவர், அமெரிக்காவில் இருக்கும் தன் மகனை நினைத்துக் கொண்டார். நயாகரா நீர்வீழ்ச்சியின் பக்கத்தில் பிறந்து வளர்ந்தவன் போலப் பேசும் ராஜகோபால். பாரதிக்கு வகுப்புத் தோழனாக இருந்தவன் ராஜு.

"ராஜுவிடம் இருந்து கடுதாசி ஏதேனும்?"

"இல்லை. நான் எதிர்பார்க்கிறது இல்லை. என் எதிர்பார்ப்பு எனக்கு ஏமாற்றம் தரும் என்பது எனக்குத் தெரியும் பாரதி. ஒரு தருக்கம். நீ எதையாவது எதிர்பார்க்கிறாயா? உன் துன்பம் அங்கிருந்து தொடங்கி விடுகிறது. எதிர்பார்க்கிற நேரத்தில், மூன்று கேள்விகளை நீ எழுப்பிக்

கொள்ள வேணும். ஒன்று, எதிர்பார்க்க நீ தகுதியான பாத்திரம்தானா? உனக்குக் கொடுப்பதாக இருக்கிற பாத்திரமும், சரியான பாத்திரம்தானா? கிடைக்கவில்லையென்றால் நீ என்ன செய்வாய்? உன்னால் என்ன செய்ய முடியும்? இதுக்குப் பதில், நீ எதிர்பார்க்கத் தகுதி இல்லாதவன் என்றே ஆகும். சரியா?"

அவள் பதில் பேசாமல், அமைதியுடன் இருந்தாள்.

"என் மகன் எனக்கு உதவ வேணும் என்பது முறையா? அந்தத் தகுதி அவனுக்கு இல்லை. எதிர்பார்க்கும் தகுதியும் எனக்கு இல்லை. பின், எதிர்பார்ப்பு வீண்தானே? இதுதான் என் வாழ்க்கைத் தத்துவம்."



**"என்ன? தலைவர் கோபமா வேட்டியை அவுத்து தலைகீழா புரட்டிக் கட்டறார்?"**

**"கட்சி மாறிட்டா அப்படித்தான். ரெண்டு சைடுலயும் வெவ்வேற கட்சிக் கரை இருக்கும்!"**

**— சென்னிமலை சி.பி. செந்தில்குமார்**

"மாமா, அப்பா, பிள்ளையிடம் எதிர்பார்க்கிறது தப்பா?"

"தப்புதான்."

காக்கைகள், படித்துறையில் அமர்ந்து, பள்ளிக்கூடம் நடத்திக் கொண்டிருந்தன.

"தப்புதான், பாரதி. அவன் சம்மதத்தோடயா, நான் அவனைப் பெற்றேன்? என் விருப்பம். அவன் பிறந்தான். அவனை ஆளாக்க வேண்டிய கடமை எனக்குத்தான். அதைச் செய்தேன். வீட்டில் இரண்டு பெண்கள் கல்யாணத்துக்கு நிற்கிறார்கள். அவர்களைக் கரையேற்ற அவன் உதவி எனக்குக் கிடைத்தால் நல்லது என்று நான் எதிர்பார்த்த காலம் ஒன்று இருந்தது. இப்போ இல்லை. அப்பன், பிள்ளைக்குச் செய்வது கடமை. பிள்ளை, அப்பனுக்குத் திருப்பித் தருவது உதவி. உதவி, மனமுவந்து கொடுக்கிறது. அது, கட்டாயம் இல்லை."

"வருத்தம் இல்லையா மாமா?"

அவர் சிரித்தார். பாரதி, அந்த மாலை மயங்கும் இருட்டிலும், அவன் முகம் தெளிவாக இருந்தது.

"வருத்தம், எனக்குச் சுத்தமாக இல்லை. நான் மூன்று வேளை சுவாமியைத் தொட்டு பூஜை பண்ணுகிறவன், அம்மா. எல்லாம் அம்பாள் பார்த்துக் கொள்வாள். எனக்கென்ன?"

எல்லா இயலாதவர்களும், தோற்றுப் போகிறவர்களும் வந்து சேரும் இடத்துக்கே அவரும் வந்து சேர்ந்தார்.

"எல்லாம் விதிப் பயன்."

எவ்வளவு பெரிய ஆசுவாசம் அது. விதியின் இருப்பை, ஏற்றுக் கொள்கிற மனது, சாந்தம் அடைகிறது. நம்பிக்கையும் அதன் மறுபுறத்தில் இருந்து தோன்றவும் செய்கிறது. நல்லவர்களுக்கு, மேலும் நன்மைகளைச் செய்யத் தூண்டுதல் கிடைக் கிறது...

குருக்கள் தெளிவாக இருந்தார். புறப்பட்டார். பாரதி, ஷராப் கடைக்குத் திரும்பிக் கம்மலை வாங்கிக் கொண்டு புறப்பட்டாள். அக்ரஹாரத்துக்கு மேற்கில், விசாலம் மாமி எதிர்ப்பட்டாள்.

"ஒரு நிமிஷம் வந்து போயேன்."

மாமியின் வயது கருதி, அவள் வீட்டுக்குச் சென்றாள் அவள்.

கதவைச் சாத்திவிட்டு அந்த அம்மாள் பேசு முன்பு, பாரதி சொன்னாள்.

"இப்போதான் மாமாவைப் படித்துறையில் பார்த்தேன்."

"அது இருக்கட்டும். பெரியவ, அதாண்டி கோமுவை தெரியுமில்லையா?"

"உங்க பொண்ணை எனக்குத் தெரியாதா? எனக்கு ஒரு வகுப்பு ஜூனியர். ராஜுவுக்குச் சின்னவ."

"அவதான், ஓடிட்டா."

திக்கென்றது பாரதிக்கு.

"எப்போ?"

"மத்தியானம்."

"யாரோட?"

"ஒர்க்ஷாப் வச்சிருக்கானே, அந்தச் சிமானோட..."

சிமான் என்கிற பையனையும் அவள் அறிவாள்.

"மாமாவுக்குத் தெரியுமோ!"

"தெரியாது. தயவு பண்ணி, உடனே அப்பாவை வரச் சொல்லு."

மாமி அழத் தொடங்கினாள்.

(தொடரும்)

## ஆஹா, ஆயுர்வேதம்!

**நீரிழிவு நோய் பற்றி அனைவரும் தெரிந்து கொள்ள வேண்டியவை :**

**வ**யிற்றில் உள்ள கணையம் எனப்படும் கரப்பி சரியாக இயங்காதபோது தாக்குகிற நோய்தான் டயபடிஸ் எனப்படும் சர்க்கரை வியாதி, அல்லது நீரிழிவு நோய். இதைக் கவனியாமல் அலட்சியமாய் விட்டாலோ அல்லது சிகிச்சையை முறைப்படி செய்யாமலிருந்தாலோ ஆபத்துதான். பருமனாக இருப்பவர்கள், அங்கே இங்கே நகர்ந்து வேலை செய்யாதவர்கள், ஆகாரத்தில் கார்போஹைட்ரேட் அதிகம் சேர்த்துக் கொள்ளுபவர்கள், இவர்களை இந்த நோய் விட்டு வைக்காது!

நீரிழிவு நோயை இரண்டு வகைகளாகப் பிரிக்கலாம். முதல் வகை நோயாளிகள் தாகம், தாகம் என்று நிறையத் தண்ணீர் குடிப்பார்கள். நிறையவே சிறுநீரும் கழிப்பார்கள். பிட்யுடரி கரப்பி வெளிப்படுத்தும் ஹார்மோனின் குறைவான இயக்கம் காரணமாக இது நேர்கிறது. பாரம்பரியமாகவும் இது வரலாம். அல்லது மூளையின் அடிப்பாகத்தில் ஏற்படும் இன்ஃபெக்ஷன், வீக்கம் அல்லது கட்டி, அல்லது பாலியல் நோய் காரணமாகவும் வரலாம்.

இரண்டாவது பெரும்பாலானவர்களிடம் காணப்படும் சாதாரண வகையைச் சேர்ந்தது. இன்சுலின் உற்பத்தி செய்யும் கணையம் சரிவர இயங்காத போது உருவாகிறது. உடலுக்குத் தேவையான சர்க்கரை, இரத்தத்திலும் சிறுநீரிலும் தங்கிப் போய், உடல் தசைகளுக்கும், திசுக்களுக்கும் பயன்படாமல் போகும் நிலை இது. உடல் சக்தி குறையும். உடல் எடையும் குறையும்! சிறுநீர் கழிப்பது அதிகரிக்கும். இதிலும் தண்ணீர் தாகம் அதிகமாய் இருக்கும்.

• படம்: ஸ்ரீஹரி

# யாகாவாராயினும் நா காக்க...!



அதிகம் தண்ணீர் குடிக்கக் குடிக்க, அடிக்கடி சிறுநீர் கழிக்கவும் தோன்றும். பசி உண்டாகும். நிறையச் சாப்பிடவும் தோன்றும். ஆனால் அதனால் உடலில் வலு மட்டும் கூடாது! சர்க்கரை தேவையான அளவுக்கு உடலில் சேராதபோது, திசுக்களின் திறன் குன்றி, சரும நோய்கள் வரத் தொடங்குகின்றன. குறிப்பாக, தொடைகளுக்கு மேற்பகுதியில் அரிப்பு; உடலின் பல பாகங்களில் எக்ஸிமா மாதிரி சொத சொதப்பு. காயம் ஏற்பட்டால் காயவே காயாத நிலை!

நீரிழிவு மெதுவாகத்தான் தாக்கத் தொடங்கும். ஆனால் இளவயதினர் விஷயத்தில் இதன் வேகம் அதிகமாய் இருக்கும்! பார்வைக் குறைவு, சோர்வு, மூட்டுக்களில் வலி, விக்கம், நுரையீரல் தோய்த் தொற்று என்று ஒவ்வொன்றாக ஆரம்பிக்கும். அதீதச் சோர்வு கண்ட நிலையில் மரணமும், டயபடிக் கோமா நிலையும் இதன் அதிகபட்ச பாதிப்புகள்!

இதற்கு ஆயுர்வேதத்தில் என்ன சிகிச்சை? இதோ டாக்டர் ராதா கிருஷ்ணா சொல்கிறார் :

சிறுநீர் மற்றும் இரத்தப் பரிசோதனைகளில், நீரிழிவு நோய் இருக்கிறது என்று தெரிந்து விட்டால், முதல் நடவடிக்கை சாப்பாட்டு விஷயத்தில்தான். சர்க்கரைப் பண்டங்கள் அல்லது கார்போஹைட்ரேட் (மாவுச் சத்து உள்ளவை) வகைகள் உடனடியாக நிறுத்தப்பட வேண்டும். அரிசி, உருளைக் கிழங்கு, இனிப்பு வகைக் கனிகள் யாவும் தடை செய்யப் பட்டவை! நெய்யும், வெண்ணெயும் சுத்தமாகக் கூடவே கூடாது. கொஞ்சம் எண்ணெய் ஓகே. பாகற்காய், முருங்கைக்காய், கோவக்காய் இவை மூன்றும் மிகச் சிறந்தவை. அதிலும் குறிப்பாக, பாகற்காயில் இருக்கும் விசேஷ மருத்துவச் சக்தி, கார்போஹைட்ரேட் எனப்படும் மாவுப் பொருளை நம் உடலில் ஏற்க வைக்கிறது. நாவல்பழமும் கூட டயபடிக்கு மிகவும் நல்லது.

"ஊரைச் சுத்தறானே, கல்யாணம் பண்ணி வைச்சா பொறுப்பு வந்துடும்னு கல்யாணம் பண்ணி வெச்சது தப்பாப் போச்சு..."

"ஏன்... என்ன ஆச்சு?"

"மருமகளும் அவனோடு சேர்ந்து ஊரைச் சுத்தறா...!

— வெ. ராஜாராமன்



சிகிச்சை தொடங்குமுன், உணவுக் கட்டுப்பாட்டில் கவனம் செலுத்துவது அவசியம். உடல் பருமனாக இருப்பவர் எடையைக் குறைக்கிற ஆகார வகைகள்தாம் உட்கொள்ள வேண்டும். பாகற்காய் ஜூஸ் மட்டுமல்ல, பாகற்காய்ச் செடியில் உள்ள இலைகளையும் பிழிந்து ஜூஸ் செய்து கொடுக்க வேண்டும். ஒரு அவுன்ஸ் – இரண்டு வேளைக்கு. கூடுமானவரை வெறும் வயிற்றில்.

பாகற்காயில் உள்ள விதை இருக்கிற தல்லவா? இதைப் பொடி செய்து, உணவின் போது உட்கொள்ளலாம். கர்ப்பூர ஷிலாஜித் இன்னொரு நீரிழிவு மருந்து. பொதுவாக எல்லா டயபடிக் நோயாளிகளும் உட்கொள்ளும் இன்னொரு மருந்து வசந்த குஸுமாகரம். இதுவும் வெறும் வயிற்றில்; ஒரு நாளைக்கு இரண்டு வேளை.

எளிதான எக்சர்சைஸ் செய்யலாம். முக்கியமாக, பகலில் தூங்காமல் இருக்க வேண்டும்!

வேறு சில மருந்துகளும் இருக்கின்றன. இவற்றை நோயாளியின் நிலையை அனுசரித்துத்தான் கொடுக்க வேண்டும். சந்திரபிரபா வடி, அம்ருத சர்க்கரை, ஷிலாகுடி பஸ்மம், நக்ரோதயாதி சூர்ணம், நாக பஸ்மம், த்ரிபலா, ஆம்லாகிசூர்ணம், நிஷா ஆமலாகிவடி (மஞ்சளும் நெல்லிக்காயும் சேர்ந்தது). இவை தவிர, ஹரிதாகி (கடுக்காய்) ஹரித்ரா (மஞ்சள்), மூஸ்தா (கோரக்கிழங்கு), மஞ்சிஷ்டா (மஞ்சிட்டி) என்றும் சில காய் – கிழங்கு வகைகள் நீரிழிவுக்கு ஏற்றவை.

இளம் தளிரான வேப்பிலை இதழ்கள் இரண்டை, வில்வ இலைகள் இரண்டுடன் தினசரி சாப்பிடுவது மிக நல்லது. நீரிழிவு இல்லாதவர்கள் கூட இதைச் சாப்பிடலாம், தவறில்லை.

தொகுப்பு : சாருகேசி

# மால்கம் மார்ஷல்: கரை கடந்த புயல்!

சில மூக்குகளை அவர் உடைத்திருக்கிறார். சிலரைக் கண்கலங்கச் செய்ததோடு மட்டுமல்லாமல் கட்டுப் போடவும் வைத்திருக்கிறார். பந்து வீச அவர் ஓடி வரும் வேகத்தைப் பார்த்தே 'வால் பகுதி' பேட்ஸ்மன்கள் அலறி நகர்ந்து ஸ்டம்பைக் கொடுத்து விடுவார்கள். அதே சமயம் காவஸ்கர் மாதிரி விற்பன்னர்களுக்கு அவரது பந்து வீச்சு ஒரு உக்கிரமான கவிதை. ரசித்து ரசித்து ஸ்கொயர் கட் அடித்தால் நாளெல்லாம் பார்த்துக் கொண்டிருக்கலாம்.

இதெல்லாம் பழங்கதை. மால்கம் மார்ஷல் இன்று இல்லை. புற்றுநோய்க்கு வயதாவது, ஒன்றாவது? நாற்பத்தொரு வயதில் அவர் காலமாகிப் போனது, கிரிக்கெட் ரசிகர்கள் நம்ப முடியாத நிஜம்.

மார்ஷலின் உயரம் 5 அடி 11 அங்குலம். பிரிட்ஜ் டவுனில் 1958–ல் பிறந்து பத்துப் பன்னிரண்டு வருடங்களில் பந்து வீச ஆரம்பித்தவர், அணியில் இடம்பெறப் பட்டபாடு கொஞ்ச நஞ்சமல்ல. கொஞ்ச நாள் சர்க்கஸில் வேலை பார்த்த காரணத்தாலோ என்னவோ, இவர் பந்து வீச்சும் சர்க்கஸ் மாதிரியே ஜாலம் மிக்கதாக அமைந்து விட்டது.

78 – 79–ல்தான் தம் முதல் டெஸ்டை இந்தியாவுக்கெதிராகத் தொடங்கினார் மார்ஷல். அது பெங்களூரில் நடந்த மேட்ச். மார்ஷலுக்கு அந்த 'சீரீஸ்' அத்தனை சிறப்பானதாக அமையவில்லை. கடைஏழு வள்ளல்களின் ஒன்று விட்ட தம்பியாக, 265 ரன்களை அள்ளிக் கொடுத்து விட்டு வெறும் மூன்று விக்கெட்டுகளை மட்டுமே எடுக்க முடிந்தது அவரால்.

அதன் பிறகு அவர் அணியில் நிரந்தர இடம்பெற இரண்டு வருட காலம் போராட வேண்டியிருந்தது. மைக்கேல் ஹோல்டிங்தான் அவரது மானசீக குரு. நிறைய கற்றுக்கொண்டார். உடலையும் உரமேற்றிக்கொண்டு 1981–ல் இங்கிலாந்துக்கெதிரான மேட்சில் மறுபடி நுழைந்தபோது, குருவை விஞ்சிய சீடரானார்!

அது '83ல் நடந்தது. இந்தியாவுக்கெதிரான பந்தயத்தில் மார்ஷலின் புயல் வேகப் பந்து வீச்சில் காவஸ்கரின் 'பேட்' பறந்து விழுந்தது. "இப்படியொரு பந்து வீச்சை நான் பார்த்ததில்லை" என்று சிலிர்த்துப் போய் பேசினார் விவியன் ரிச்சர்ட்ஸ்.

பிறகு மார்ஷலின் வீச்சில் விழுப்புண் பெற்ற வீரர்களின் எண்ணிக்கை மேட்சுக்கு மேட்ச் அதிகமாகிக் கொண்டே வந்தது. இங்கிலாந்தின் ஓபனிங் பேட்ஸ்மன் ஆண்டி லாயிட் தம் கண்களின் 'ரெடினா'வைச் சேதமாக்கிக் கொண்டு ஆஸ்பத்திரியில் படுத்தார். மைக் கேட்டிங் மூக்குடைபட்டு ஒரு முறை பாதி ஆட்டத்தில் திரும்பினார். நமது மொஹீந்தருக்கு ஒருமுறை மார்ஷலின் வீச்சில் உதடு கிழிந்து போனது.

"அவரது பந்து வீச்சைக் கணிப்பதற்கு முன் அது நம்மைத் தாண்டிச் சென்று விடும். ஓவர் முழுவதும் சீரான வேகம் அவரது ஸ்பெஷாலிடி" என்று மார்ஷலின் குருவே ஒருமுறை சான்றிதழ் தந்திருக்கிறார்.

மேற்கிந்தியத் தீவுகள் அணியிலிருந்து 91–ல் ஓய்வுபெற்ற மார்ஷல், பிறகு அவ்வணியின் 'கோச்'சாக செயல்பட்டு வந்தார்.

புற்றுநோய் கண்டுபிடிக்கப்பட்ட நாளிலிருந்து கீமோ சிகிச்சை நடந்து கொண்டு தான் இருந்தது. இறப்புக்குச் சில தினங்கள் முன்பு வரையும் பணியில் இருந்தவர், ரொம்ப முடியாமல் போகவேதான் விடுமுறை கேட்டுச் சென்றிருக்கிறார். ஆயினும் பிரிட்ஜ் டவுனிலுள்ள குவீன் எலிசபெத் மருத்துவமனையிலிருந்து அவரை வீட்டுக்கு அழைத்து வர முடியாமல், எடுத்து வர மட்டுமே முடிந்தது தான் பெரிய சோகம்.

— சஞ்சய்






Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 250/-; Overseas : Rs. 1900/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 125/-; Overseas : Rs. 950/- (Air Mail)

